அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

ஏஷா ஶங்கரபா⁴ரதீ விஜயதே நிர்வாணஸௌக்²யப்ரதா³

# श्रीजगद्गुरुग्रन्थमाला

ஶ்ரீ ஜக³த்³கு³ரு க்³ரந்த²மாலா

# ॥ प्रबोधसुधाकरः ॥

# ப்ரபோ³த⁴ஸுதா⁴கரம்

ஶ்ரீ வாணீவிலாஸ் பிரஸ்
ஶ்ரீரங்கம்.
1963



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# பதிப்புரை.

ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ ஜகத்குரு மஹா ஸந்நிதானம் அவர்களின் பரமானுக்ரஹத்தால் பிரசுரிக்கப்பட்டுவருகின்ற ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலையில் ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யார் அருளிய கிரந்தங்களில் **ப்ரபோ³த⁴ஸுதா⁴கரம்**, என்ற பிரகரணத்துக்கு வழக்கம் போல பதவுரை பொழிப்புரை, விரிவுரைகளுடன் வெளிவந்துள்ளன.

ஆத்மஞானத்திற்கு முக்ய ஸாதனமான வைராக்யம், முதல் ஆறு பிரகரணங்களில் விவரிக்கப்படுகிறது. விஷயங்களிலுள்ள தோஷங்களை நன்கு தெரிந்து கொண்டால்தான் வைராக்யம் ஏற்படும். இது தெரியாததால்தான் சரீரத்தில் 'நான்' என்ற அஹங்காரமும், விஷயங்களில் 'எனது' என்ற மமகாரமும் ஏற்படுகிறது. இது நீங்குவதற்காக முதல் பிரகரணத்தில் தேஹத்தால் வரும் தீங்குகளையும், 2 - வது பிரகரணத்தில் மனைவி, புத்திரன், தனம் முதலிய விஷயங்களால் ஏற்படும் தீங்குகளையும் நன்கு எடுத்துக்காட்டுகிறார். மூன்றாவதில் மனம்படுத்தும் பாட்டைக்காட்டி நான்காவதில் இந்திரிய நிக்ரஹத்தையும், ஐந்தாவதில் மனோ நிக்ரஹத்தையும் விளக்கி ஆறாவதில் வைராக்யத்தின் சிறப்பைக் கூறுகிறார். பிறகு தேஹாதி விலக்ஷணமான ஆத்மவஸ்துவைப்பற்றியும் அதை மறைக்கும் மாயையைப் பற்றியும் கூறி, மாயையின் காரியமான சரீராதிகளால் ஜீவபாவம் ஏற்பட்டதையும், உண்மையில் ஆத்மா அத்வைதம், அகர்த்தா, அபோக்தா, ஸ்வப்ரகாசவஸ்து என்ற தத்வத்தையும் விளக்கிக் காட்டுகிறார். இந்த அனுபவம் ஏற்படுவதற்காக மனோலயத்தையும் அதன் ஸாதனமான நாதானுஸந்தானத்தையும் கூறி பின்னர் ப்ரபோத பிரகரணத்தில் அத்வைதாத்மானுபவத்தைக் காட்டுகிறார்.

ஆத்ம ஞானத்திற்கு அந்தரங்க ஸாதனமான பக்தியையும், அதன் பிரிவுகளான ஸ்தூல - ஸூக்ஷ்ம பக்திகளுக்கு உபாயங்களையும் 16 வதில் கூறி, 17 வதில் பக்தர்கள் தியானிப்பதற்கு மிக அழகாக கிருஷ்ண ஸ்வரூபத்தை வர்ணித்து விட்டு 18 வதில் நிர்குணமும் (உபநிஷத்துகளில் கூறப்பட்ட ஸச்சிதானந்த ப்ரஹ்மமும்) ஸகுணமும் (கிருஷ்ண ஸ்வரூபமும்) ஒன்றுதான் என்பதை பல காரணங்களால் காட்டி, 19 வதில் பாகவதத்தில் கூறியுள்ள கிருஷ்ணனுடைய பல லீலைகளையும் திவ்ய மஹிமைகளையும் கூறி, அவரையே சரணமடையவேண்டுமென்று உபதேசிக்கிறார். கிருஷ்ண லீலைகளில் எழுந்துள்ள ஆக்ஷேபங்களைக் கூறி அதற்கு ஸமாதானமும், கூறுகிறார். இந்நூலின் மூலம் படிப்பவர்களை விஷ்ணு பக்தர்களில் சிறந்தவர்களாக ஆக்குகிறார் பகவத்பாதர்.

இந்நூலுக்குச் சிறந்த முறையில் தமிழில் பதவுரை, விரிவுரைகள் எழுதிக் கொடுத்து உதவிய ஸம்ஸ்கிருதப் பேராசிரியர் **ஸ்ரீ A. ஸுப்ரமண்யய்யர்** M.A, அவர்களுக்கும் ஸ்ரீ சங்கர கிருபா உதவி ஆசிரியர் வியாகரண சிரோமணி, வேதாந்த வித்வான் **ஸ்ரீ K. S. வெங்கடராம சாஸ்திரிகள்** அவர்களுக்கும் நம் ஸமிதியின் நன்றி உரித்தாகுக.

ஸ்ரீ பகவத்பாதாள் அருளிய உயர்ந்த இந்த நூல் சிறந்த முறையில் வெளி வரும்படி பரமானுக்ரஹம் செய்து உள்ள சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குருவின் மலரடிகளை எப்பொழுதும் பணிவோமாக.

**K.V. சுப்பரத்னம் அய்யர்**,
பொதுக் கார்யதர்சி.
அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி

# விஷயானுக்ரமணிகை

॥ श्रीः ॥

॥ ஸ்ரீः ॥

# ॥ प्रबोधसुधाकर: ॥

# ப்ரபோ³த⁴ஸுதா⁴கரம்

**ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யர் அருளியது.**

[ "ப்ரபோ³த⁴ஸுதா⁴கரம்" என்னும் இந்நூல் 257 சுலோகங்கள் கொண்டது. இதில் 19 பிரகரணங்கள் இருக்கின்றன. முதல் ஆறு ப்ரகரணங்களில் வைராக்யத்தைப் பற்றியும், பின் ஒன்பது பிரகரணங்களில் ஆத்மஞானத்தைப் பற்றியும், கடைசி நான்கு பிரகரணங்களில் பக்தியைப் பற்றியும் வாழ்க்கையில் ஏற்படும் பல அனுபவங்களையும் திருஷ்டாந்தங்களையும் காட்டித் தெள்ளென மனதில் பதியும்படி உபதேசிக்கிறர். முதல் ஆறு ப்ரகரணங்களில், அபிமானம் நீங்கி, வைராக்யம் ஏற்பட்டு நிலைபெறுவதற்காக, தேஹம், போக விஷயங்கள், மனம் இவைகளிலுள்ள தோஷங்களை எடுத்துக்கூறி, விஷயங்களில் மனம் செல்லாமல் மனத்தைக் கட்டுப்படுத்துவதற்கு வேண்டிய உபாயங்களைக் கூறுகிறர்.

பிறகு ஆத்ம வஸ்துவைப் பற்றியும், மாயையால் சரீர ஸம்பந்தம் ஏற்பட்டிருப்பதையும் உண்மையில் ஒன்றுடனும் ஆத்மாவுக்கு ஸம்பந்தம் இல்லாததையும், ஸ்வப்ரகாசமான ஆத்மா அத்வைதம், அது அகர்த்தா, அபோக்தா என்பதையும், ஆத்மஞானம் உறுதிப்பட மனேலய நாதானுஸந்தானங்களையும் கூறுகிறர்.

கடைசியாக ஆத்ம ஞானத்திற்கு முக்ய ஸாதனமான பக்தியைப்பற்றி விவரிக்கிறர். ஸகுண - நிர்குண பக்தியையும், இரண்டு தத்வங்களும் ஒன்று என்பதையும் காட்டி, த்யானம் ஸ்திரப்பட, பகவானுடைய அவதார மூர்த்திகளில் ஸ்ரீ கிருஷ்ணனின் ஸ்வரூபத்தையும், அவருடைய லீலைகளையும் மிகவும் விரிவாக வர்ணிக்கிறர்.

இந்நூலை வாசித்து அடிக்கடி அனுஸந்தானம் செய்து வந்தால் வைராக்யம் ஸ்திரப்பட்டு கிருஷ்ண பக்தியும் அதனல் ஆத்ம ஞானமும் ஏற்படும். நித்யானந்த நிலையை அடைவான். ஞானமும் ஆனந்தமும் ஏற்படுவதால் இந்நூலுக்கு "ப்ரபோ³த⁴ ஸுதா⁴கரம்" (ஞானமிருதக்கடல்) என்று ஆசார்யாள் பெயர் கொடுத்திருக்கிறர். அமிருதஸாகரத்திலிருந்து உண்டாகும் ஞானம் ஆனந்தமாகத்தான் இருக்கும்.]

## १. ॥ देहनिन्दाप्रकरणम् ॥

### 1. ॥ தே³ஹநிந்தா³ ப்ரகரணம் ॥

**नित्यानन्दैकरसं सच्चिन्मात्रं स्वयंज्योतिः ।**
**पुरुषोत्तममजमीशं वन्दे श्रीयादवाधीशम् ॥ १ ॥**

**நித்யானந்தை³கரஸம் ஸச்சின்மாத்ரம் ஸ்வயஞ்ஜ்யோதி꞉ ।**
**புருஷோத்தமமஜமீஶம் வந்தே³ ஶ்ரீயாத³வாதீ⁴ஶம் ॥ 1 ॥**

**नित्यानन्दैकरसं** = நித்யாநந்த மென்ற ஒரே ரஸஸ்வரூபியாயும்,
**நித்யானந்தை³கரஸம்**
**सच्चिन्मात्रं** = ஸத்தாகவும் சித்தாகவும்,
**ஸச்சின்மாத்ரம்**
**स्वयंज्योतिः** = தானகவே விளங்கும் பிரகாசமாகவும்,
**ஸ்வயஞ்ஜ்யோதி꞉**
**पुरुषोत्तमं** = புருஷர்களில் சிறந்தவனகவும்,
**புருஷோத்தமம்**
**अजं** = பிறப்பற்றவராகவும்,
**அஜம்**
**ईशं** = உலகங்களையெல்லாம் ஆள்பவராயும் இருக்கும்,
**ஈஶம்**
**श्रीयादवाधीशं** = யாதவர்களின் தலைவனை ஸ்ரீகிருஷ்ண
**ஶ்ரீயாத³வாதீ⁴ஶம்** பரமாத்மாவை,
**वन्दे** = வணங்குகிறேன்.
**வந்தே³**

**ப்ரபோ³த⁴ ஸுதா⁴கரம்** என்ற நூல் ஆத்ம ஸாக்ஷாத்காரத்தால் ஒப்பற்ற ஆனந்தநிலை உண்டாவதை வர்ணிக்கின்றது. அந்த ஆத்மஞானத்தை ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனை வியாஜமாக வைத்துக்கொண்டு உலகனைத்திற்கும் ஈந்தருளினன். ஆதலால் இந்நூலை இயற்றிய ஆதி சங்கரபகவத்பாதர் அவர்கள் ஞானதீசனகிய ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவை முதற்கண் வணங்குகிறர்.

உபநிஷத்துக்கள் ப்ரஹ்மத்தை ஸச்சிதானந்த ஸ்வரூபமாக வர்ணிக்கின்றன.

**'सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म' 'विज्ञानमानन्दं ब्रह्म' 'प्रज्ञानं ब्रह्म'**

**'ஸத்யம் ஜ்ஞானம் அனந்தம் ப்³ரஹ்ம'**
**'விஜ்ஞானமானந்த³ம் ப்³ரஹ்ம' 'ப்ரஜ்ஞானம் ப்³ரஹ்ம'**

ஸத் என்றல் முக்காலங்களிலும் ஒரே மாதிரியாக இருப்பது என்று பொருள். சித் என்றல் ஞானம். இதுதான் ப்ரஹ்மத்தின் லக்ஷணம் இந்த சுலோகத்தில் ஸ்ரீ கிருஷ்ணனிடம் இந்த லக்ஷணங்கள் இருப்பதாக ஆசார்யாள் கூறுகிறர். மேலும்

கிருஷ்ணனைப் பிறப்பற்றவராகவும் தானே விளங்கும் பிரகாச ரூபியாகவும் ஈசுவர னாகவும் புருஷோத்தமனாகவும் கூறுகிறார். இந்த சுலோகத்தில் முன் பாதியில் நிர்குண ஸ்வரூபத்தையும் பின் பாதியில்

**पुरुषोत्तमं, ईशं**

**புருஷோத்தமம், ஈஶம்**

என்பதால் ஸகுணமான ஈசுவர ஸ்வரூபத்தையும்,

**यादवाधीशं**

**யாத³வாதீ⁴ஶம்**

என்பதால் லோகானுக்ரஹத்திற்காக ஏற்பட்ட அவதார ஸ்வரூபத்தையும் கூறி மூன்றும் ஒன்றுதான் என்பதைக் காட்டுகிறார். இந்த விஷயத்தை இந் நூலில் கடைசி இரண்டு ப்ரகரணங்களில் விரிவாக விளக்குகிறார். க்ஷரமான பிரபஞ்சத்தையும் அக்ஷரமான மாயையையும் புருஷர்களாகக் கூறி இவ்விரண்டுக்கும் மேல்பட்ட ஈசுவரனை புருஷோத்தமன் என்று கீதையில் கூறுகிறார். இந் நூலை வாசித்து இதில் கூறியுள்ள உபாயங்களை அனுஷ்டித்து ஸச்சிதானந்த ஸ்வரூபத்தைத் தெரிந்து கொண்டால் தானும் ஸச்சிதானந்த ஸ்வரூபமாக ஆகி நித்யானந்த நிலையை அடைகிறான். ஆகவே இதற்கு '**ப்ரபோ³த⁴ ஸுதா⁴கரம்**' (ஆத்மஞான அமிருத ஸமுத்திரம்) என்று பெயர் கொடுத்திருக்கிறார். இப்படிப்பட்ட நித்யமான ஆனந்த நிலையை எய்துவதற்கு ஸாதனமாக இருக்கின்றவர் ஸாக்ஷாத் கிருஷ்ண பரமாத்மா தான். அவர் யதுகுல திலகர். கீதையை உபதேசித்து அனைவரையும் கடைத் தேற்றியவர். அவரே புருஷோத்தமன். பிறப்பற்றவர். ஸகல உலகங்களையும் காத்து ரக்ஷிக்கின்றவர். ஆதலால் அவரை முதலில் வணங்கிவிட்டுப் பின்னர் இந்நூலை ஸ்ரீமத் ஆசார்யார் ஆரம்பிக்கின்றார். **(1)**

**(அவதாரிகை)** ப்ரஹ்மம் வாக்குக்கு எட்டாதது என்பதைக் கூறுகிறார்: -

**यं वर्णयितुं साक्षाच्छ्रुतिरपि मूकेव मौनमाचरति ।**
**सोऽस्माकं मनुजानां किं वाचां गोचरो भवति ॥ २ ॥**

**யம் வர்ணயிதும் ஸாக்ஷாச்ச்²ருதிரபி மூகேவ மௌனமாசரதி ।**
**ஸோ(அ)ஸ்மாகம் மனுஜானாம் கிம் வாசாம் கோ³சரோ ப⁴வதி ॥ 2 ॥**

**यं** = எந்தப்பரம் பொருளை,
**யம்**

**साक्षात्** = நேரிடையாக,
**ஸாக்ஷாத்**

**वर्णयितुं** = வர்ணிப்பதற்கு,
**வர்ணயிதும்**

| | | |
|---|---|---|
| **श्रुतिः अपि**<br>**ஶ்ருதி: அபி** | = | வேதம்கூட, |
| **मूका इव**<br>**மூகா இவ** | = | ஊமை போல், |
| **मौनं आचरति**<br>**மௌனம் ஆசரதி** | = | வாய் திறவாமல் இருந்துவிடுகின்றதோ, |
| **सः**<br>**ஸ:** | = | அப்படிப்பட்ட பரம்பொருள், |
| **मनुजानां**<br>**மனுஜானும்** | = | மானிடர்களாகிய, |
| **अस्माकं**<br>**அஸ்மாகம்** | = | நம்முடைய, |
| **वाचां**<br>**வாசாம்** | = | வார்த்தைகளுக்கு, |
| **गोचरः**<br>**கோ³சர:** | = | பொருளாக, |
| **भवति किं**<br>**ப⁴வதி கிம்** | = | இருக்கமுடியுமா? |

வேதம் அனுதியானது. அது வர்ணிக்காத விஷயம் இவ்வுலகில் ஒன்றுமே கிடையாது. அவ்வாறு விளங்கும் வேதம்கூடப் பரம்பொருளின் ஸ்வரூபத்தைச் சொல்ல இயலாது திரும்பிவிடுகின்றது.

**'यतो वाचो निवर्तन्ते । अप्राप्य मनसा सह।'**

**'யதோ வாசோ நிவர்தந்தே । அப்ராப்ய மனஸா ஸஹ।'**

முதலான ச்ருதிகள் இதற்குச் சான்ருக விளங்குகின்றன. இவ்வாறு இருக்கும் பொழுது சிற்றறிவு படைத்த மானிடர்களாகிய நாம் பரம்பொருளின் ஸ்வரூபத்தை எவ்வாறு எண்ணமுடியும்? நம்முடைய மனதிற்கே அப்பொருள் எட்டாமல் இருக்கும் பொழுது எவ்வாறு நாம் அதை வாக்கால் வர்ணிக்க முடியும்? **(2)**

**(அவதாரிகை)** ப்ரஹ்மத்தை விளக்கும் வழிகளைக் காட்டுகிருர்: -

**यद्यप्येवं विदितं तथापि परिभाषितो भवेदेव ।**
**अध्यात्मशास्त्रसारैर्हरिचिन्तनकीर्तनाभ्यासैः ॥ ३ ॥**

**யத்³யப்யேவம் விதி³தம் ததா²பி பரிபா⁴ஷிதோ ப⁴வேதே³வ ।**
**அத்⁴யாத்ம ஶாஸ்த்ர ஸாரைர் ஹரிசிந்தன கீர்தநாப்⁴யாஸை: ॥ 3 ॥**

**एवं** = இவ்வாறு,

**ஏவம்**

**यद्यपि विदितं तथापि** = அறிந்துகொள்ளப் பட்டிருப்பினும் கூட,

**யத்³யபி விதி³தம் ததா²பி**

**अध्यात्मशास्त्रसारैः** = ஆத்மாவின் தத்வத்தை விளக்கும் நூல்களின்

**அத்⁴யாத்மஶாஸ்த்ரஸாரை:** ஸாரங்களாலும்,

**हरिचिन्तन** = ஹரியின் த்யானம்,

**ஹரிசிந்தன**

**कीर्तन** = கீர்த்தனம் முதலியவற்றின்,

**கீர்தன**

**अभ्यासैः** = பயிற்சிகளாலும்,

**அப்⁴யாஸை:**

**परिभाषितः भवेत् एव** = விளக்கப்பட்டவராகவே ஆவார்.

**பரிபா⁴ஷித: ப⁴வேத் ஏவ**

முன் சுலோகத்தில் பரம்பொருளின் தத்வத்தை அறிவது இயலாத கார்யம் என்று கூறப்பட்டது. அது அவ்வாறுயின் அதைப்பற்றிய விசாரம் எதற்கு என்று கேட்கலாம். அதற்கு ஸ்ரீமதாசார்யார் இங்கு பதில் கூறுகின்றார். பரம்பொருளின் ஸ்வரூபம் அறியமுடியாதது என்று எண்ணி வாளாவிருக்கவேண்டிய அவச்யமி ல்லை. வேதாந்த நூல்களின் நுட்பங்களையறிந்த மகர்ஷிகள் இதனுடைய ஸ்வரூபத் தை நமக்கு எடுத்துக் காட்டியிருக்கின்றனர்.

**वेदैश्च सर्वैः अहमेव वेद्यः**

**வேதை³ஶ்ச ஸர்வை: அஹமேவ வேத்³ய:**

என்று பகவான் கீதையில் அருளியிருக்கின்ருர்.

**दृष्यते त्वग्रया बुद्धया सूक्ष्मया सूक्ष्मदर्शिभिः**

**த்³ருஷ்யதே த்வக்³ரயா பு³த்³த⁴யா ஸூக்ஷ்மயா ஸூக்ஷ்மத³ர்ஶிபி⁴:**

முதலான வாக்யங்களும் சூக்ஷ்மதர்சிகளான சான்ரேர்களால் அப்பொருள் காணப் படுகின்றது என்று எடுத்துக்காட்டுகின்றன. அப்பரம்பொருளை அறிவதற்கு வேதாந்த வாக்யங்களைக் கேட்டு அவற்றின் பொருளை அறிந்து மனனம், தியானம், முதலிய வற்றைச் செய்தல் வேண்டும். எப்பொழுதும் பகவானுடைய குணகணங்களைக் கீர்த்தனம் செய்வது அவச்யம். கருணுமூர்த்திகளான மகரிஷிகள்

**सततं कीर्तयन्तो मां... नित्ययुक्ता उपासते**

**ஸததம் கீர்தயந்தோ மாம்... நித்யயுக்தா உபாஸதே**

என்று கூறியபடி ஸதாகாலமும் பகவானுடைய உபாஸனையால் அவருடைய தத்வத்தை அறிந்து அதை நமக்கு எடுத்துக் கூறியிருக்கிறார்கள். அவ்வழியைப் பின்பற்றுவோமாயின் நாமும் பகவத்ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிக்கலாம். **(3)**

**(அவதாரிகை)** முக்தி ஸாதனங்களைக் கூறுகிறார்: -

**क्लृप्तैर्बहुभिरुपायैरभ्यासज्ञानभक्त्याद्यैः ।**
**पुंसो विना विरागं मुक्तेरधिकारिता न स्यात् ॥ ४ ॥**

**க்ல்ருப்தைர் ப³ஹுபி⁴ருபாயைரப்⁴யாஸஜ்ஞான ப⁴க்த்யாத்³யை: ।**
**பும்ஸோ வினா விராக³ம் முக்தேரதி⁴காரிதா ந ஸ்யாத் ॥ 4 ॥**

**अभ्यास** = பயிற்சி,
**அப்⁴யாஸ**

**ज्ञान** = ஞானம்,
**ஞான**

**भक्त्याद्यैः** = பக்திமுதலிய,
**ப⁴க்த்யாத்³யை:**

**बहुभिः** = பல,
**ப³ஹுபி⁴:**

**उपायैः** = ஸாதனங்கள்,
**உபாயை:**

**क्लृप्तैः** = ஏற்பட்டிருப்பினும்,
**க்ல்ருப்தை:**

**विरागं विना** = பற்றின்மையின்றி,
**விராக³ம் வினா**

**पुंसः** = மனிதனுக்கு,
**பும்ஸ:**

**मुक्तेः** = மோக்ஷத்திற்கு,
**முக்தே:**

**अधिकारिता** = தகுதி வாய்ந்த தன்மை,
**அதி⁴காரிதா**

**न स्यात्** = ஏற்படாது.
**ந ஸ்யாத்**

மோக்ஷத்தை அடைவதற்கு அப்யாஸம், ஞானம், பக்தி முதலான பல ஸாதனங்கள் உள்ளன. இவை எல்லாம் இருந்தபோதிலும் வைராக்யம் இல்லாதவன் மோக்ஷத்தை அடைய முடியாது. வைராக்யம் உள்ளவன் தான் மோக்ஷத்தை அடையத் தகுதி உள்ளவன். **(4)**

**(அவதாரிகை)** முக்திஸாதனமான வைராக்யத்தை வைராக்யத்தை முதலில் விளக்குகிறுர்: -

**वैराग्यमात्मबोधो भक्तिश्चेति त्रयं गदितम् ।**
**मुक्तेः साधनमादौ तत्र विरागो वितृष्णता प्रोक्ता ॥ ५ ॥**

**வைராக்³யமாத்மபோ³தோ⁴ ப⁴க்திஸ்சேதி த்ரயம் க³தி³தம் ।**
**முக்தே: ஸாத⁴னமாதௌ³ தத்ர விராகோ³ வித்ருஷ்ணதா ப்ரோக்தா ॥ 5 ॥**

**वैराग्यं** = பற்றின்மை,
**வைராக்³யம்**

**आत्मबोधः** = ஆத்ம ஞானம்,
**ஆத்மபோ³த⁴:**

**भक्तिः** = பக்தி,
**ப⁴க்தி:**

**इति** = என்ற,
**இதி**

**त्रयं च** = மூன்றும்,
**த்ரயம் ச**

**मुक्तेः** = மோக்ஷத்திற்கு,
**முக்தே:**

**साधनं** = காரணமாக,
**ஸாத⁴னம்**

**गदितम्** = கூறப்பட்டுள்ளது,
**க³தி³தம்**

**तत्र** = அதில்,
**தத்ர**

**आदौ** = முதலில்,
**ஆதௌ³**

**विरागः** = வைராக்யம் என்பது,
**விராக³:**

**वितृष्णता** = விஷயங்களில் ஆசையற்ற தன்மை என்று,
**வித்ருஷ்ணதா**

**प्रोक्ता** = கூறப்பட்டுள்ளது.
**ப்ரோக்தா**

மோக்ஷத்தை அடைவதற்குப் பல உபாயங்கள் கூறப்பட்டிருப்பினும் வைராக்யம், ஆத்மஞானம், பக்தி இம்மூன்றும்தான் முக்யமானது. இம் மூன்றும் ஒன்று சேர்ந்து மோக்ஷத்தைத் தருவதால் இவைகள் எல்லாம் ஸாதனம் என்று ஒருமை

யில் கூறப்பட்டுள்ளது. இவ்வுலகிலும், மறு உலகிலுமுள்ள விஷய சுகங்களில் பற்றுள்ளவனுக்கு மோக்ஷம் கிட்டாது. ஆதலால் விஷய சுகங்களில் பற்றின்மை முதற்காரணமாகக் கருதப்படுகின்றது. அது போலவே ஆத்மஞானம் ஏற்பட்டால்தான் மோக்ஷத்தை அடையலாம். இதற்கு பக்தியும் இன்றியமையாதது. ஆகையால் இம் மூன்றுமே மோக்ஷத்தைப் பெற முக்யமான கருவி. அவற்றுள் வைராக்யமென்பது இவ்வுலகிலும் மறு உலகிலுமுள்ள இன்பங்களில் ஆசையற்ற தன்மையைக் குறிக்கின்றது. **(5)**

**(அவதாரிகை)** வைராக்யம் ஏற்படாமலிருப்பதற்குக் காரணம் கூறுகிறுர்: -

**सा चाहंममताभ्यां प्रच्छन्ना सर्वदेहेषु ।**
**तत्राहंता देहे ममता भार्यादि विषयेषु || ६ ||**

**ஸா சாஹம் மமதாப்⁴யாம் ப்ரச்ச²ன்ஞ ஸர்வ தே³ஹேஷு ।**
**தத்ராஹந்தா தே³ஹே மமதா பா⁴ர்யாதி³ விஷயேஷு ॥ 6 ॥**

**सा च** = அந்த வைராக்யமும்,
**ஸா ச**

**सर्वदेहेषु** = எல்லா மக்களிடத்தும்,
**ஸர்வ தே³ஹேஷு**

**अहंममताभ्यां** = "நான்" என்றும் "என்னுடையது" என்றும்
**அஹம்மமதாப்⁴யாம்** காணப்படும் அபிமானங்களால்,

**प्रच्छन्ना** = மறைக்கப்பட்டுள்ளது,
**ப்ரச்ச²ன்ஞ**

**तत्र** = அதில்,
**தத்ர**

**देहे** = தன்னுடைய உடலில்,
**தே³ஹே**

**अहंता** = நான் என்ற எண்ணம் தோன்றுகின்றது,
**அஹந்தா**

**भार्यादि विषयेषु** = மஜனவி, மக்கள் முதலிய விஷயங்களில்,
**பா⁴ர்யாதி³ விஷயேஷு**

**ममता** = என்னுடையது என்ற அபிமானம் ஏற்படுகின்றது.
**மமதா**

முன் சுலோகத்தில் வைராக்யம் மோக்ஷத்தைப் பெறுவதற்குக் காரணம் என்று கூறப்பட்டது. ஆனுல் இந்த வைராக்யத்தை அடைவது சுலபமன்று. இதற்கு அஹந்தை, மமதை என்ற இரு பெரிய இடையூறுகள் காணப்படுகின்றன. ஆதலால் எல்லாப் பிராணிகளுக்கும் வைராக்யம் ஸுலபமாக ஏற்படுவதில்ஜல. இவற்றுள் அஹந்தை என்பது தேஹாபிமானம். அதாவது இந்த நச்வரமான உடஜல நான் என்று

எண்ணுவது. வைராக்யத்தை மறைப்பதற்கு இரண்டாவது காரணம் மமதை என்பது. மனைவி, மக்கள் முதலிய தேஹத்தை ஒட்டிய பொருள்களில் ஏற்படும் அபிமானம் மமதை என்று கூறப்படுகின்றது. ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இவற்றை அத்யாஸம் என்று பிரம்மசூத்ர பாஷ்யத்தில் கூறியிருக்கின்றார். இத்தகைய இரண்டுவிதமான அபிமான ங்கள் இருப்பதால் ஒருவருக்கும் வைராக்யம் ஏற்படுவதில்லை. ஆகையால் மோக்ஷத்தை அடைவது எளிதான கார்யமில்லை. **(6)**

**(அவதாரிகை)** அஹந்தையும் மமதையும் விலக உபாயம் கூறுகிறார்: -

**देहः किमात्मकोऽयं कः सम्बन्धोऽस्य वा विषयैः ।**
**एवं विचार्यमाणेऽहंताममते निवर्तेते ॥ ७ ॥**

**தே³ஹ꞉ கிமாத்மகோ(அ)யம் க꞉ ஸம்ப³ந்தோ⁴(அ)ஸ்ய வா விஷயை꞉ ।**
**ஏவம் விசார்யமாணே(அ)ஹந்தாமமதே நிவர்தேதே ॥ 7 ॥**

**अयं** = இந்த,
**அயம்**
**देहः** = உடல்,
**தே³ஹ꞉**
**किमात्मकः** = எத்தகையது?
**கிமாத்மக꞉**
**अस्य** = இதற்கு,
**அஸ்ய**
**विषयैः** = புலப்படும் பொருள்களுடன்,
**விஷயை꞉**
**कः सम्बन्धः** = என்ன தொடர்பு?
**க꞉ ஸம்ப³ந்த⁴꞉**
**एवं** = இம்மாதிரி,
**ஏவம்**
**विचार्यमाणे** = நன்கு ஆலோசிக்கும்பொழுது,
**விசார்யமாணே**
**अहंताममते** = அஹங்கார மமகாரங்கள்,
**அஹந்தாமமதே**
**निवर्तेते** = விலகிப்போய்விடுகின்றன.
**நிவர்தேதே**

அஹந்தையும் மமதையும் வைராக்யத்திற்குத் தடைகள் என்று முன்பு கூறப் பட்டுள்ளது. இவைகளை விலக்கினால்தான் வைராக்யம் ஏற்பட்டு மோக்ஷத்தைப் பெறலாம். இங்கு இவைகளை விலக்குவதற்கான உபாயம் காட்டப்படுகின்றது.

சரீரத்தின் தன்மையையும், விஷயங்களின் தன்மையையும் இரண்டிற்கும் ஏற்படும் ஸம்பந்தத்தையும் நன்கு தெரிந்துகொள்ளாததால்தான், சரீரத்தில் நான் என்ற அபிமானமும், விஷயங்களில் என்னுடையது என்ற அபிமானமும் ஏற்படுகிறது. ஆதலால் ஒவ்வொருவரும் நான் என்று எதில் அபிமானம் வைத்துள்ளானே அந்த சரீரம் எப்படிப்பட்டதென்று நன்கு ஆராய்ந்து பார்க்க வேண்டும். பிறகு இவ்வுலகின் கண் தோன்றும் மனைவி மக்கள் முதலிய விஷயங்களின் ஸ்வபாவத்தை ஆராய்ந்து அவைகளுக்கும் சரீரத்திற்கும் தொடர்பு என்ன என்பதை நன்கு கவனிக்கவேண்டும் தேஹத்தையும் விஷயங்களையும் நன்கு ஆராய்ந்து பார்த்தால் ஒருவனும் தேஹத்தை நான் என நினைக்கமாட்டான். விஷயங்களையும் என்னுடையவை என எண்ண மாட்டான். அஹந்தையும் மமதையும் நீங்கிவிட்டால் வைராக்யம் உறுதிப்படும். அவன் மோக்ஷத்திற்கு அதிகாரி யாவான். **(7)**

**(அவதாரிகை)** தேஹாபிமானம் விலக தேஹத்திலுள்ள தோஷங்களை நன்கு எடுத்துக்காட்டுகிறார். முதலில் தேஹம் உண்டாகும் விதத்தைக் கூறுகிறார்: -

**स्त्रीपुंसोः संयोगात्संपाते शुक्लशोणितयोः ।**
**प्रविशञ्जीवः शनकैः स्वकर्मणा देहमादत्ते ॥ ८ ॥**

**ஸ்த்ரீபும்ஸோ: ஸம்யோகா³த்ஸம்பாதே ஶுக்லஶோணிதயோ: ।**
**ப்ரவிஶஞ்ஜீவ: ஶனகை: ஸ்வகர்மணா தே³ஹமாத³த்தே ॥ 8 ॥**

**स्त्रीपुंसोः** = ஸ்திரீ புருஷர்களுடைய,
**ஸ்த்ரீபும்ஸோ:**
**संयोगात्** = சேர்க்கையினால்,
**ஸம்யோகா³த்**
**शुक्लशोणितयोः** = சுக்லசோணிதங்களின்,
**ஶுக்லஶோணிதயோ:**
**संपाते** = ஒன்று கூடுதலில்,
**ஸம்பாதே**
**जीवः** = ஜீவன்,
**ஜீவ:**
**प्रविशन्** = நுழைந்து,
**ப்ரவிஶன்**
**शनकैः** = மெதுவாக,
**ஶனகை:**
**स्वकर्मणा** = தன்வினையினால்,
**ஸ்வகர்மணா**
**देहं** = உடலை,
**தே³ஹம்**

**आदत्ते** = அடைகிறன்.

**ஆத³த்தே**

ஆணும் பெண்ணும் சேரும் பொழுது சுக்லமும் சோணிதமும் கலக்கிறது. ஜீவன் தான் முற்பிறவியில் செய்த கர்மாவிஞல் கட்டுப்பட்டுத் தன் வசமற்று அந்தக் கர்மபலத்தால் சுக்ல சோணிதங்களில் நுழைகிறன். பிறகு அது கர்ப்பத்தில் வளர்ந்து சரீரமாக ஆகிவிடுகிறது. ஆகவே சரீரத்தின் மூலகாரணத்தைக் கவனித்துப் பார்த்தால் நான் என்று எண்ணுவதற்கு அது கொஞ்சமும் தகுதியற்றது என்பது நன்கு விளங்கும். இங்கு ஜீவன் கர்மாவால் சரீரத்தைப் பெறுகிறன் என்று கூறியதால் சரீரம் ஆத்மாவல்ல, அது தன்ஊனக்காட்டிலும் வேறுனது என்பதையும் காட்டினர். **(8)**

**(அவதாரிகை)** கர்ப்பவாஸ கஷ்டங்கஊக் கூறுகிறர்: -

## मातृगुरूदरदर्यां कफमूत्रपुरीषपूर्णायाम् ।
## जठराग्निज्वालाभिर्नवमासं पच्यते जन्तुः ॥ ९ ॥

**மாத்ரு கு³ரூத³ர த³ர்யாம் கப²மூத்ர புரீஷ பூர்ணயாம் ।**
**ஜட²ராக்³நி ஜ்வாலாபி⁴ர் னவமாஸம் பச்யதே ஜந்துः ॥ 9 ॥**

**कफमूत्रपुरीषपूर्णायां** = கபம், மூத்திரம், மலம் என்ற அசுத்தப்

**கப²மூத்ரபுரீஷபூர்ணயாம்** பொருள்கள் நிரம்பிய,

**मातृगुरूदरदर्यां** = தாயாருடைய பெரிய வயிற்றிலுள்ள

**மாத்ரு கு³ரூத³ர த³ர்யாம்** கர்ப்பப்பையாகிய குகையில்,

**जन्तुः** = ஜீவன்,

**ஜந்துः**

**जठराग्निज्वालाभिः** = ஜாடராக்னியின் ஜ்வாஊலகளால்,

**ஜட²ராக்³நி ஜ்வாலாபி⁴:**

**नवमासं** = ஒன்பது மாதகாலம்,

**நவமாஸம்**

**पच्यते** = துன்பப்படுகின்றுன்.

**பச்யதே**

ஜீவன் தாயின் கர்ப்பத்தில் நுழைந்தவுடன் அனுபவிக்கும் துன்பங்கள் கணக் கில் அடங்கா. தாயின் கர்பாசயம் ஓர் பெரும் குஹை போன்றது. அதில் கபம், மூத்திரம், மலம் முதலிய அறுவெறுக்கத்தக்க பல அசுத்தமான பொருள்கள் நிறைந் துள்ளன. இதன் நடுவில் இருக்கும் ஜீவன் ஒன்பது மாதகாலம் வரையில் பற்பல துன்பங்களுக்குட்படுகிறன். தாயினுடைய ஜாடராக்னியின் ஜ்வாஊலகள் இவனுக்கு மிகுந்த தாபத்தை உண்டுபண்ணுகின்றன. **(9)**

**(அவதாரிகை)** கர்ப்பத்திலிருந்து வெளிப்படும் பொழுது உண்டாகும் துன்பங்க ளைக் கூறுகிறார்: -

**दैवात्प्रसूतिसमये शिशुस्तिरश्चीनतां यदा याति ।**
**शस्त्रैर्विखण्ड्य स तदा बहिरिह निष्कास्यतेऽतिबलात् ॥ १० ॥**

**தை³வாத்ப்ரஸூதிஸமயே ஶிஶுஸ்திரஶ்சீனதாம் யதா³ யாதி ।**
**ஶஸ்த்ரைர்விக²ண்ட்³ய ஸ ததா³ ப³ஹிரிஹ நிஷ்காஸ்யதே(அ)திப³லாத் ॥ 10 ॥**

**दैवात्** = துரதிருஷ்ட வசத்தால்,
**தை³வாத்**
**प्रसू तिसमये** = பிறக்கும் ஸமயத்தில்,
**ப்ரஸூ திஸமயே**
**शिशु:** = குழந்தை,
**ஶிஶு:**
**तिरश्चीनतां** = குறுக்காக இருக்கும் தன்மையை,
**திரஶ்சீனதாம்**
**यदा** = எப்பொழுது,
**யதா³**
**याति** = அடைகிறதோ,
**யாதி**
**तदा** = அப்பொழுது,
**ததா³**
**स:** = அக்குழந்தை,
**ஸ:**
**शस्त्रै:** = ஆயுதங்களால்,
**ஶஸ்த்ரை:**
**विखण्ड्य** = துண்டுதுண்டாக வெட்டப்பட்டு,
**விக²ண்ட்³ய**
**अतिबलात्** = மிகவும் பலாத்காரமாக,
**அதிப³லாத்**
**इह** = இங்கு,
**இஹ**
**बहि:** = வெளியே,
**ப³ஹி:**
**निष्कास्यते** = தள்ளப்படுகின்றது.
**நிஷ்காஸ்யதே**

தாய்க்கும் குழந்தைக்கும் நல்ல அதிருஷ்டம் இருந்தால் தான் தாயின் கர்ப்பத்திலிருந்து உயிருடன் குழந்தை வெளி வரும். இவ்வாறு தாயாருக்குக் கஷ்டமின்றி சுகமாகப் பிறத்தல் மிகவும் அரிது. துரதிருஷ்டம் இருந்தால் அக்குழந்தை கர்ப்பத்தில் குறுக்கே விழுந்து விடும். அப்பொழுது தாயாருக்குப் பெரும் ஆபத்து ஏற்படுகின்றது. தாயைக் காப்பதன் பொருட்டுப் பல ஆயுதங்களைக் கொண்டு அதைத் துண்டு துண்டாக வெட்டி வெளியே எடுக்கிறார்கள். **(10)**

## अथवा यन्त्रच्छिद्राद्यदा तु निःसार्यते प्रबलैः ।
## प्रसवसमीरैश्च तदा यः क्लेशः सोऽप्यनिर्वाच्यः ॥ ११ ॥

**அத²வா யந்த்ரச்சி²த்³ராத்³யதா³ து நிஃஸார்யதே ப்ரப³லை꞉ ।**
**ப்ரஸவஸமீரைஶ்ச ததா³ ய꞉ க்லேஶ꞉ ஸோ(அ)ப்யநிர்வாச்ய꞉ ॥ 11 ॥**

**अथवा** = அல்லது,

**அத²வா**

**यदा तु** = எப்பொழுது,

**யதா³ து**

**यन्त्रच्छिद्रात्** = யோனித்வாரத்திலிருந்து,

**யந்த்ரச்சி²த்³ராத்**

**प्रबलैः** = மிகவும் பலமுள்ள,

**ப்ரப³லை꞉**

**प्रसवसमीरैश्च** = பிரஸவகாலக்காற்றுகளாலும்,

**ப்ரஸவஸமீரைஶ்ச**

**निःसार्यते** = வெளியே தள்ளப்படுகின்றதோ,

**நிஃஸார்யதே**

**सः अपि** = அப்பொழுது,

**ஸ꞉ அபி**

**यः** = எந்த,

**ய꞉**

**क्लेशः** = துன்பம் ஏற்படுகின்றதோ,

**க்லேஶ꞉**

**सः अपि** = அதுவும்,

**ஸ꞉ அபி**

**अनिर्वाच्यः** = சொல்ல இயலாதது.

**அநிர்வாச்ய꞉**

குழந்தை பிறக்கும் ஸமயத்தில் ஏற்படும் துன்பங்களை வர்ணிப்பது மிகவும் கடினம். ஒரு சமயம் நல்ல அதிர்ஷ்ட வசத்தால் குழந்தை யோனித்வாரத்தின் வழியாக வெளியே தள்ளப்படினும் அது சொல்லொணாத் துயரங்களையே அனுபவிக்

கின்றது. அப்பொழுது கர்ப்பாசயத்தில் உண்டாகும் பலமான சூதக வாயுக்கள் அதை அமுக்கி வெளியே தள்ளுகின்றன. அப்பொழுது அது மிகவும் துன்பம் அடைகிறது. (11)

**(அவதாரிகை)** பிறந்தபின் வாழ்க்கையில் உண்டாகும் துன்பங்களைச் சொல்கிறார்: -

**आधिव्याधिवियोगात्मीयविपत्कलहदीर्घदारिद्र्यैः ।**
**जन्मानन्तरमपि यः क्लेशः किं स शक्यते वक्तुम् ॥ १२ ॥**

**ஆதி⁴வ்யாதி⁴வியோகா³த்மீயவிபத்கலஹதீ³ர்க⁴தா³ரித்³ரயை: ।**
**ஜன்மானந்தரமபி ய: க்லேஶ: கிம் ஸ ஶக்யதே வக்தும் ॥ 12 ॥**

**जन्मानन्तरमपि** = பிறந்த பின்பும்,
**ஜன்மானந்தரமபி**

**आधि** = மனதில் ஏற்படும் துன்பம்,
**ஆதி⁴**

**व्याधि** = நோய்,
**வ்யாதி⁴**

**वियोग** = பிரிவு,
**வியோக³**

**आत्मीयविपत्** = தனக்குண்டாகும் ஆபத்து,
**ஆத்மீயவிபத்**

**कलह** = சண்டை,
**கலஹ**

**दीर्घदारिद्र्यैः** = நீண்ட ஏழ்மை முதலியவற்றால்,
**தீ³ர்க⁴தா³ரித்³ரயை:**

**यः क्लेशः** = எந்தத் துன்பம் விளைகின்றதோ,
**ய: க்லேஶ:**

**सः** = அது,
**ஸ:**

**वक्तुं** = சொல்வதற்கு,
**வக்தும்**

**किं शक्यते** = முடியுமா?
**கிம் ஶக்யதே**

பிறந்த பிறகும் ஜீவன் பலவித துன்பங்களுக்கு உள்ளாகிறான். அவனுடைய மனதில் பல வேதனைகள் எழுகின்றன. அதனால் அவனுக்கு சிறிதளவு அமைதிகூட உண்டாவதில்லை. அவ்வாறு அல்லல்படும் மனதை அடக்க முடியாமல் அவன் தத்த ளிக்கிறான். மேலும் பலவிதமான நோய்கள் அவனது உடலை வாட்டுகின்றன.

அவனுக்குப் பிரியமான மஜனவி மக்கள் முதலியவர்கள் அவஜனப் பிரிந்து செல்கின்றனர். அவர்கஜள விட்டுப் பிரியும் சமயத்தில் அவன் அளவுகடந்த துக்கத்தை அனுபவிக்கிறுன். தன்ஜனச் சேர்ந்தவர்களுக்கு ஆபத்தும் பகைவர்களால் உண்டாகும் கலகங்களும் அவஜன வாட்டுகின்றன. துரதிருஷ்டத்தால் அவன் நெடுநாள் ஏழ்மை நிஜலயையே எய்துகின்றான். இவ்வாறு ஒருவன் தனது வாழ்நாள் முழுவதும் அனுபவிக்கும் துன்பங்கஜள யாரால் இயம்ப இயலும்? அவன் படமுடியாதினித் துயரம், பட்டதெல்லாம் போதும் என்று கதறுகின்றுன். **(12)**

**(அவதாரிகை)** தேஹத்தை விட்டாலும் துன்பம் இவஜன விடுவதில்ஜல: -

## नरपशुविहंगतिर्यग्योनीनां चतुरशीतिलक्षाणाम् ।
## कर्मनिबद्धो जीवः परिभ्रमन्यातना भुंक्ते ॥ १३ ॥

**நரபஶுவிஹங்க³திர்யக்³யோனீஞம் சதுரஶீதிலக்ஷாஞம் ।**
**கர்மநிப³த்³தோ⁴ ஜீவः பரிப்⁴ரமன்யாதஞ பு⁴ங்க்தே ॥ 13 ॥**

**नर** = மனிதன்,
**நர**
**पशु** = விலங்கு,
**பஶு**
**विहंग** = பறவை,
**விஹங்க³**
**तिर्यग्योनीनां** = புழு பூச்சிகள் முதலிய,
**திர்யக்³யோனீஞம்**
**चतुरशीतिलक्षाणाम्** = எண்பத்து நான்கு லக்ஷம் பிறவிகளுக்குள்,
**சதுரஶீதிலக்ஷாஞம்**
**कर्मनिबद्धः** = விஜனகளால் கட்டுப்பட்ட,
**கர்மநிப³த்³த⁴ः**
**जीवः** = ஜீவன்,
**ஜீவः**
**परिभ्रमन्** = அஜலந்து கொண்டு,
**பரிப்⁴ரமன்**
**यातनाः** = துன்பங்கஜள,
**யாதஞः**
**भुंक्ते** = அனுபவிக்கிறுன்.
**பு⁴ங்க்தே**

இவ்வாறு கர்ப்பத்தில் நுழைந்தது முதல் பிறந்து சரீரத்தை விடும்வரை கணக்கற்ற துன்பங்கஜள அனுபவித்த பின்பும் தன் கர்மாவை அனுஸரித்து மறு

படியும் மற்ருேர் சரீரத்தைப் பெறுகிறுன். மனிதன், விலங்கு, பறவை, புழு, பூச்சி முதலாக உலகில் 84 லக்ஷம் ஜீவராசிகள் இருக்கின்றன. ஒவ்வொரு ஜீவனும் அவனவன் கர்மாவை அனுஸரித்து மாறி மாறி இவைகளில் ஏதாவது ஒரு சரீரத் தைப் பெறுகிறுன். ஒவ்வொரு பிறவியிலும் சொல்லவொணுத் துயரங்கஊ அனுபவிக்கிறுன். தான் செய்த கர்மாக்களால் கட்டுப்பட்டு பிறப்பு, இறப்பு என்னும் இச் சுழலில் அகப்பட்டு இதிலிருந்து வெளியேற முடியாமல் தவிக்கிறுன். **(13)**

**(அவதாரிகை)** பிறவிப்பயஊக் காட்டுகிறுர்: -

## चरमस्तत्र नृदेहस्तत्राग्रजन्मान्वयोत्पत्तिः ।
## स्वकुलाचारविचार: श्रुतिप्रचारश्च तत्रापि ॥ १४ ॥

**சரமஸ்தத்ர ந்ருதே³ஹஸ்தத்ராக்³ரஜன்மான்வயோத்பத்தி: ।**
**ஸ்வகுலாசாரவிசார: ஶ்ருதிப்ரசாரஶ்ச தத்ராபி ॥ 14 ॥**

**तत्र** = அதில்,
**தத்ர**

**नृदेह:** = மானிடசரீரம்,
**ந்ருதே³ஹ:**

**चरम:** = கடைசியானது. (சிறந்தது),
**சரம:**

**तत्र** = அதில்,
**தத்ர**

**अग्रजन्मान्वयोत्पत्ति:** = அந்தண குலத்தில் பிறத்தல் (சிறந்தது),
**அக்³ரஜன்மான்வயோத்பத்தி:**

**तत्रापि** = அதிலும்,
**தத்ராபி**

**स्वकुलाचारविचार:** = தன் குலத்தின் ஆசாரங்கஊ அறிந்து அனுஷ்டித்தலும்,
**ஸ்வகுலாசாரவிசார:**

**श्रुतिप्रचारश्च** = வேதங்கஊ ஒட்டி நடத்தலும் மேன்மேலும் சிறந்தவை.
**ஶ்ருதிப்ரசாரஶ்ச**

பலபிறவிகளில் சுற்றிச்சுற்றி வரும் ஜீவன் ஏதோ அதிருஷ்டவசத்தால் மறுபடியும் மானிடப் பிறவியைப் பெறுகிறுன். எல்லாப் பிறவிகளுக்குள்ளும் மானிடப் பிறவி மிகவும் சிறந்தது. அதஞலேயே ஸ்ரீ பகவத்பாதர் விவேக சூடாமணி யில்

**जन्तूनां नरजन्म दुर्लभम्**

**ஜந்தூஞம் நரஜன்ம து³ர்லப⁴ம்**

என்று கூறியிருக்கிறார். அதிலும் உயர்ந்த குலத்தில் பிறப்பது மிகச் சிறப்பு வாய்ந்தது. ஏனெனில் அக்குலத்தில் பிறந்தவர்களுக்குத் தான் பிரம்ம விசாரத்திற்கு உரிமை ஏற்படுகின்றது. அதிலும் தன்னுடைய குலத்தின் ஆசாரத்தைப் பின்பற்றி வேதத்தில் விதிக்கப்பட்ட ஸ்வதர்மங்களை அனுஷ்டித்தல் மிகவும் சிறந்தது. தன் குலாசாரங்களையும் வேத தர்மங்களையும் பின்பற்றுபவன் தான் பிரம்ம வித்யையை அடைய தகுதிவாய்ந்தவனாவான்.

**ब्राह्मणस्य हि देहोयं नोपभोगाय कल्पते।**
**इह क्लेशाय महते प्रेत्यानन्तसुखाय च ॥**

**ப்³ராஹ்மணஸ்ய ஹி தே³ஹோயம் நோபபோ⁴கா³ய கல்பதே।**
**இஹ க்லேஶாய மஹதே ப்ரேத்யானந்தஸுகா²ய ச ॥**

என்று வாசிஷ்டஸ்ம்ருதியில் கூறப்பட்டுள்ளது. உயர்ந்த குலத்தில் பிறந்தால் மட்டும் போதாது ஆனால் அதை அடைந்து ஸ்வகர்மாக்களை அனுஷ்டானம் செய்வதாலேயே மேன்மை ஏற்படுகின்றது இதையே ஸ்ரீ பகவத்பாதர்

**वैदिकधर्ममार्गपरता**

**வைதி³கத⁴ர்மமார்க³பரதா**

என்று விவேகசூடாமணியில் குறிப்பிட்டுள்ளார். **(14)**

**आत्मानात्मविवेको नो देहस्य च विनाशिताज्ञानम् ।**
**एवं सति स्वयमायुः प्राज्ञैरपि नीयते मिथ्या ॥ १५ ॥**

**ஆத்மாநாத்மவிவேகோ நோ தே³ஹஸ்ய ச விநாஶிதாஜ்ஞானம் ।**
**ஏவம் ஸதி ஸ்வயமாயுஃ ப்ராஜ்ஞைரபி நீயதே மித்²யா ॥ 15 ॥**

| | | |
|---|---|---|
| **एवं सति** / **ஏவம் ஸதி** | = | இப்படியிருக்கையில், |
| **आत्मानात्मविवेकः** / **ஆத்மாநாத்மவிவேகஃ** | = | ஆத்மா அனாத்மா இவைகளின் பகுத்தறிவும், |
| **देहस्य** / **தே³ஹஸ்ய** | = | உடலின், |
| **विनाशिताज्ञानं च** / **விநாஶிதாஜ்ஞானம் ச** | = | அழியும் தன்மையின் அறிவும், |
| **नो** / **நோ** | = | இல்லாமல்போனால், |
| **प्राज्ञैः अपि** / **ப்ராஜ்ஞைஃ அபி** | = | புத்திமான்களாலும், |

**स्वयं** = தங்களாலேயே,
**ஸ்வயம்**

**आयु:** = வாழ்நாள்,
**ஆயு:**

**मिथ्या** = வீணுகவே,
**மித்²யா**

**नीयते** = கழிக்கப்படுகிறது.
**நீயதே**

மானிடஞகப் பிறந்த ஒவ்வொருவனும் தனக்குக் கிடைத்த அரிய ஸந்தர்ப்பத்தை நழுவ விடக்கூடாது. அவன் வேத மார்க்கத்தைக் கடைபிடித்து அதன் கடைசியிலுள்ள உபநிஷத்துக்களில் கூறப்பட்டிருக்கும் பிரம்ம தத்வத்தை அறிந்து கொள்ளவேண்டும். அதற்கு ஆத்ம விசாரம் செய்தல் இன்றியமையாதது. எது ஆத்மா, எது அநாத்மா என்பதை நன்கு விசாரித்து அநாத்ம வஸ்துக்களிலிருந்து ஆத்மாவைப் பிரித்துத் தெரிந்து கொள்ள வேண்டும். இந்த ஆத்மா ஒன்றுதான் உண்மைப் பொருள் அஃது அழிவற்றது. எங்கும் நிறைந்துள்ளது. மற்றவை எல்லாம் தோன்றி மறையும் தன்மை வாய்ந்தவை ஆதலால் அவைகள் பொய் என்று தெரிந்து கொள்ளவேண்டும். சரீரம் ஆத்மாவைத் தவிர வேருனது. அது அழியும் தன்மை வாய்ந்தது என்றும் அவன் நன்கு அறிந்துகொள்ள வேண்டும். இவ்வாறு எவன் ஆத்மாவை நன்கு தெரிந்து கொள்ளவில்ஜலயோ அவன் எவ்வளவு புத்திசாலியாக இருந்தபோதிலும் அவன் தன்னுடைய வாழ்நாஜள வீணுகவே கழித்தவஞகிருன். ஏனெனில் இவ்வாழ்வில் அவன் எய்தும் மோக்ஷம் அவனுக்குக் கிடைக்காமலே போய்விடுகிறது. ஆன்ம அறிவுபெற்றவனே கைவல்யத்தை அடைகின்றான்.

**ज्ञानादेव हि कैवल्यम् ।**

**ஜ்ஞாநாதே³வ ஹி கைவல்யம் ।**

ஆதலால் ஆன்ம ஞானம் அற்றவனுக்கு மோக்ஷமேது? அவன் பிறவிக் கடலில் வீழ்ந்துத் தத்தளிப்பான். **(15)**

**(அவதாரிகை)** ஆயுளின் பெருமையைக் காட்டுகிருர்: -

**आयु: क्षणलवमात्रं न लभ्यते हेमकोटिभि: क्वापि ।**
**तच्चेद्गच्छति सर्वं मृषा तत: काऽधिका हानि: ॥ १६ ॥**

**ஆயு: க்ஷணலவமாத்ரம் ந லப்⁴யதே ஹேமகோடிபி⁴: க்வாபி ।**
**தச்சேத்³ரச்ச²தி ஸர்வம் ம்ருஷா தத: கா(அ)தி⁴கா ஹானி: ॥ 16 ॥**

**आयु: क्षणलवमात्रं** = ஆயுளில் ஒருக்ஷணத்தின் லவம்,
**ஆயு: க்ஷணலவமாத்ரம்** மிகச்சிறிதான அளவு மட்டும்கூட,

| | | |
|---|---|---|
| **हेमकोटिभिः**<br>**ஹேமகோடிபி⁴꞉** | = | கோடிக்கணக்கான பொன்களால், |
| **क्वापि**<br>**க்வாபி** | = | ஒரு இடத்திலும், |
| **न लभ्यते**<br>**ந லப்⁴யதே** | = | அடையப்படுகிறதில்லை, |
| **तत्सर्वं**<br>**தத்ஸர்வம்** | = | அதுஎல்லாம், |
| **मृषा**<br>**ம்ருஷா** | = | வீணாக, |
| **गच्छति चेत्**<br>**க³ச்ச²தி சேத்** | = | போய் விடுமாகில், |
| **ततः**<br>**தத꞉** | = | அதைக் காட்டிலும், |
| **अधिका**<br>**அதி⁴கா** | = | அதிகமான, |
| **हानिः**<br>**ஹானி꞉** | = | நஷ்டம், |
| **का**<br>**கா** | = | யாது? |

ஒருவன் மிகுந்த புண்யவசத்தால் மானிடப் பிறவியை அடைகிறன். அவனுடைய வாழ்நாளில் ஒவ்வொரு க்ஷணமும் மிகுந்த பயன் வாய்ந்தது. அதை இழந்த பின் திரும்பப் பெறுவது இயலாத காரியம். எவ்வளவு கோடிக்கணக்கான தங்கக் காசுகளைக் கொடுத்தாலும் இழந்த ஆயுளைப் பெற முடியாது? ஒவ்வொரு க்ஷணமும் ஆயுள் குறைந்துகொண்டே இருக்கிறது. இதைப் பயனுள்ளதாகச் செய்யவேண்டும். இந்த ஆயுள் முழுவதும் பிறவிப்பயனை அடைய பிரயோஜனப்படாமல் வீணாகச் சென்றுவிடுமாகில் அதைக்காட்டிலும் மிகுந்த நஷ்டம் யாது? **(16)**

(**அவதாரிகை**) மனித ஜன்மாவின் பெருமையைக் கூறுகிறர்: -

**नरदेहातिक्रमणात्प्राप्तौ पश्वादिदेहानाम् ।**
**स्वतनोरप्यज्ञाने परमार्थस्यात्र का वार्ता ॥ १७ ॥**

**நரதே³ஹாதிக்ரமணாத்ப்ராப்தௌ பஶ்வாதி³தே³ஹானும் ।**
**ஸ்வதனோரப்யஜ்ஞானே பரமார்த²ஸ்யாத்ர கா வார்தா ॥ 17 ॥**

| | | |
|---|---|---|
| **नरदेहातिक्रमणात्**<br>**நரதே³ஹாதிக்ரமணாத்** | = | மானிடப்பிறவியை வீணாகக் கழித்த பின், |

| | | |
|---|---|---|
| **पश्वादिदेहानां**<br>**பஶ்வாதி³தே³ஹானும்** | = | விலங்கு முதலியவைகளின் தேகங்களை, |
| **प्राप्तौ**<br>**ப்ராப்தௌ** | = | அடைந்த பொழுது, |
| **स्वतनोः अपि**<br>**ஸ்வதனேஃ அபி** | = | தன்னுடைய உடலைப்பற்றியே, |
| **अज्ञाने**<br>**அஜ்ஞானே** | = | அறியாமல் இருக்கும் பொழுது, |
| **अत्र**<br>**அத்ர** | = | இங்கு, |
| **परमार्थस्य**<br>**பரமார்த²ஸ்ய** | = | ஆத்ம தத்துவத்தைப் பற்றிய, |
| **वार्ता**<br>**வார்தா** | = | பேச்சு, |
| **का**<br>**கா** | = | யாது? |

மனிதன் ஒருவனுக்குத்தான் பகுத்தறிவு உண்டு. அவன் ஒருவனே ஆத்ம தத்துவத்தை உணரமுடியும். ஆகையால் மானிடனுக இருக்கும் பொழுதே ஜீவன் முக்தியை அடைய முயலவேண்டும். அவ்வாறு செய்யாமல் ஒருவன் தன்னுடைய வாழ்நாள் முழுவதையும் தீய வழிகளில் நாசம் செய்து விட்டால் பின்பு அவன் திர்யக்யோனிகளில் விழவேண்டியதுதான். அவன் விலங்காகவோ பக்ஷியாகவோ பிறக்கிறுன். அப்பொழுது அந்த ஜீவனுக்குப் பகுத்தறிவு போய்விடுகிறது. அது தன்னுடைய உடலைப் பற்றியே அறிந்து கொள்ளத் திறமையற்றதாக ஆகிவிடுகின்றது. அவ்வாறு இருக்க அந்த ஜீவன் ஆத்ம தத்துவத்தைப் பற்றி உணர்ந்து கொள்வது அரிது என்பது பற்றிக் கூறவும் வேண்டுமா? **(17)**

(**அவதாரிகை**) விலங்கு ஜன்மாவிலுள்ள துன்பங்களைக் கூறுகிருர்: -

**सततं प्रवाह्यमानैर्वृषभैरश्वैः खरैर्गजैर्महिषैः ।**
**हा कष्टं क्षुत्कामैः श्रान्तैर्नो शक्यते वक्तुम् ॥ १८ ॥**

**ஸததம் ப்ரவாஹ்யமாஜைர்வ்ருஷபை⁴ரஶ்வைஃ க²ரைர்க³ஜைர்மஹிஷைஃ ।**
**ஹா கஷ்டம் க்ஷுத்காமைஃ ஶ்ராந்தைர்னே ஶக்யதே வக்தும் ॥ 18 ॥**

| | | |
|---|---|---|
| **सततं**<br>**ஸததம்** | = | எப்பொழுதும், |
| **प्रवाह्यमानैः**<br>**ப்ரவாஹ்யமாஜைஃ** | = | வண்டி முதலியவை பூட்டப்பட்டு பாரங்களை இழுத்துச் செல்லும்படி செய்யப்பட்டு, பசியால் வாடி, |

| | | |
|---|---|---|
| **श्रान्तैः**<br>**ஶ்ராந்தை** | = | களைப்புற்ற, |
| **वृषभैः**<br>**வ்ருஷபை⁴ஃ** | = | எருதுகளாலும், |
| **अश्वैः**<br>**அஶ்வைஃ** | = | குதிரைகளாலும், |
| **खरैः**<br>**க²ரைஃ** | = | கழுதைகளாலும், |
| **गजैः**<br>**க³ஜைஃ** | = | யானைகளாலும், |
| **महिषैः**<br>**மஹிஷைஃ** | = | எருமைகளாலும், |
| **वक्तुं**<br>**வக்தும்** | = | சொல்வதற்கு, |
| **नो शक्यते**<br>**நோ ஶக்யதே** | = | முடிகிறதில்லை, |
| **हा**<br>**ஹா** | = | அந்தோ, |
| **कष्टं**<br>**கஷ்டம்** | = | கொடுமை! |

விலங்குகளாகப் பிறக்கும் ஜீவன்கள் கணக்கற்ற இன்னல்களுக்குள்ளாகின்றன. குதிரைகளாகவும், எருதுகளாகவும், கழுதைகளாகவும், யானைகளாகவும் எருமைகளாகவும் பிறக்கும் அவைகள் வண்டிகளில் பூட்டப்பட்டு மிகுந்த பாரத்தை இழுத்துச் செல்லும்படி தூண்டப்படுகின்றன. அவ்வாறு அவைகள் பெரும் பாரங்களை இழுப்பதால் வாடிக் களைத்துப் போகின்றன. அவைகளுக்குப் பசிக்கு வேண்டிய உணவும் கொடுக்கப்படுவதில்லை. அப்பொழுது அவைகள் தங்கள் துயரத்தை வெளியில் கூறக்கூட முடியாமல் தவிக்கின்றன. அவைகளின் துன்பத்தை யார்தான் அறியமுடியும்? **(18)**

**(அவதாரிகை)** தன் தேஹத்திலேயே வெறுப்பு ஏற்படும்படியாக அதிலுள்ள பல தோஷங்களை எடுத்துக் காட்டுகிறார்: -

**रुधिरास्थिधातुमज्जा मेदोमांसादिसंहतिर्देहः ।**
**स बहिस्त्वचा पिनद्धस्तस्मान्नो भक्ष्यते काकैः ॥ १९ ॥**

**ருதி⁴ராஸ்தி² தா⁴து மஜ்ஜா மேதோ³மாம்ஸாதி³ஸம்ஹதிர் தே³ஹஃ ।**
**ஸ ப³ஹிஸ் த்வசா பினத்³த⁴ஸ் தஸ்மான்னோ ப⁴க்ஷ்யதே காகைஃ ॥ 19 ॥**

**देहः** = உடல்,

**தே[3]ஹ:**

**रुधिर** = இரத்தம்,

**ருதி[4]ர**

**अस्थि** = எலும்பு,

**அஸ்தி[2]**

**धातु** = தாதுக்கள்,

**தா[4]து**

**मज्जा** = மஜ்ஜை,

**மஜ்ஜா**

**मेदो** = கொழுப்பு,

**மேதோ[3]**

**मांसादि** = இறைச்சி முதலியவைகளின்,

**மாம்ஸாதி[3]**

**संहतिः** = தொகுப்பு,

**ஸம்ஹதி:**

**सः** = அது,

**ஸ:**

**बहिः** = வெளியே,

**ப[3]ஹி:**

**त्वचा** = தோலால்,

**த்வசா**

**पिनद्धः** = கட்டப்பட்டிருக்கிறது,

**பினத்[3]த[4]:**

**तस्मात्** = ஆகையால்,

**தஸ்மாத்**

**काकैः** = காக்கைகளால்,

**காகை:**

**नो भक्ष्यते** = சாப்பிடப்படுகிறதில்லை.

**நோ ப[4]க்ஷ்யதே**

இவ்வுடல் மிகவும் வெறுக்கத்தக்கதாக இருக்கிறது. இதற்குள் காணப்படுபவை அனைத்தும் மிகவும் ஆபாஸமானவை, இது இரத்தம், மாம்ஸம், எலும்பு, கொழுப்பு முதலியவைகளின் தொகுப்பு. அவ்வாறே இது இருப்பின் தெருவில் போகும்பொழுது இதை காக்கைகளும், இறைச்சி தின்னிப் பறவைகளும் கொத்தித் தின்றுவிடும். ஆனால் இது வெளியே தோலினால் மூடப்பட்டிருக்கின்றது. அதனால் காக்கை முதலியவை வந்து கொத்தித் தின்பதில்லை. **(19)**

**नासाग्राद्वदनाद्वा कफं मलं पायुतो विसृजन् ।**
**स्वयमेवैति जुगुप्सामन्तः प्रसृतं च नो वेत्ति ॥ २० ॥**

**நாஸாக்³ராத்³வத³நாத்³வா கப²ம் மலம் பாயுதோ விஸ்ருஜன் ।**
**ஸ்வயமேவைதி ஜுகு³ப்ஸாமந்த: ப்ரஸ்ருதம் ச நோ வேத்தி ॥ 20 ॥**

**नासाग्रात्** = மூக்கின் துவாரத்திலிருந்தோ,
**நாஸாக்³ராத்**
**वदनात् वा** = வாயிலிருந்தோ,
**வத³நாத் வா**
**कफं** = கபத்தையும்,
**கப²ம்**
**पायुतः** = அபானத்துவாரத்தின் மூலமாக,
**பாயுத:**
**मलं** = மலத்தையும்,
**மலம்**
**विसृजन्** = வெளிப்படுத்திக் கொண்டு,
**விஸ்ருஜன்**
**स्वयमेव** = தானாகவே,
**ஸ்வயமேவ**
**जुगुप्सां** = வெறுப்பை,
**ஜுகு³ப்ஸாம்**
**एति** = அடைகிறான்,
**ஏதி**
**अन्तः** = உடலுக்குள்,
**அந்த:**
**प्रसृतं** = பரவியிருக்கும் இவற்றை,
**ப்ரஸ்ருதம்**
**नो वेत्ति** = அறிவதில்லை.
**நோ வேத்தி**

இவ்வுடலுக்குள் அருவருப்பை உண்டாக்கும் கோழை, மலம் முதலியன பரவி நிற்கின்றன. அவைகள் மூக்கின் துவாரங்கள், வாய், அபான த்வாரம் இவைகளின் மூலமாக வெளியே வரும்பொழுது அவைகளைக் கண்டு மனிதன் வெறுப்பை அடைகிறான். ஆனால் அவைகள் எல்லாம் தன்னுடலுக்குள்ளேயே இருப்பதை அவன் நினைக்கிறதில்லை. **(20)**

**पथि पतितमस्थि दृष्ट्वा स्पर्शभयादन्यमार्गतो याति ।**
**नो पश्यति निजदेहं चास्थिसहस्रावृतं परितः ॥ २१ ॥**

**பதி2 பதிதமஸ்தி2 த்3ருஷ்ட்வா ஸ்பர்ஶப4யாத3ன்யமார்க3தோ யாதி ।**
**நோ பஶ்யதி நிஜதே3ஹம் சாஸ்தி2ஸஹஸ்ராவ்ருதம் பரிதஃ ॥ 21 ॥**

| | | |
|---|---|---|
| **पथि**<br>**பதி2** | = | வழியில், |
| **पतितं**<br>**பதிதம்** | = | விழுந்துகிடக்கின்ற, |
| **अस्थि**<br>**அஸ்தி2** | = | எலும்பை, |
| **दृष्ट्वा**<br>**த்3ருஷ்ட்வா** | = | பார்த்து, |
| **स्पर्शभयात्**<br>**ஸ்பர்ஶப4யாத்** | = | அது தன் உடலில் பட்டுவிடுமோ என்ற அச்சத்தால், |
| **अन्यमार्गतः**<br>**அன்யமார்க3தஃ** | = | வேறு வழியாக, |
| **याति**<br>**யாதி** | = | செல்கிறுன், |
| **परितः**<br>**பரிதஃ** | = | சுற்றிலும், |
| **अस्थिसहस्रावृतं**<br>**அஸ்தி2ஸஹஸ்ராவ்ருதம்** | = | ஆயிரக்கணக்கான எலும்புகளால் சூழப்பட்டுள்ள, |
| **निजदेहं**<br>**நிஜதே3ஹம்** | = | தன்னுடைய சரீரத்தை, |
| **नो पश्यति**<br>**நோ பஶ்யதி** | = | பார்க்கிறதில்லை. |

மனிதனுடைய உடலில் மிகவும் அருவருப்பைக் கொடுக்கும் ஆயிரக்கணக்கான எலும்புகள் நிரம்பிக் கிடக்கின்றன. இவைகளை நினைப்பதேயில்லை. ஆனுல் வழியில் விழுந்துகிடக்கும் எலும்பைக் கண்டு அது தன்னுடைய உடலில் பட்டு விடுமோ என்று பயந்து அவன் வேறு வழியாகச் செல்கிறுன். **(21)**

**केशावधि नखराग्रादिदमन्तः पूतिगन्धसम्पूर्णम् ।**
**बहिरपि चागरुचन्दनकर्पूराद्यैर्विलेपयति ॥ २२ ॥**

**கேஶாவதி4 நக2ராக்3ராதி3த3மந்தஃ பூதிக3ந்த4ஸம்பூர்ணம் ।**
**ப3ஹிரபி சாக3ருசந்த3னகர்பூராத்3யைர்விலேபயதி ॥ 22 ॥**

| | | |
|---|---|---|
| **नखराग्रात्**<br>**நக²ராக்³ராத்** | = | நகங்களின் நுனியிலிருந்து, |
| **केशावधि**<br>**கேஶாவதி⁴** | = | தலைமயிர் வரையில், |
| **इदं**<br>**இத³ம்** | = | இது, |
| **अन्तः**<br>**அந்தः** | = | உள்ளே, |
| **पूतिगन्धसम्पूर्णम्**<br>**பூதிக³ந்த⁴ஸம்பூர்ணம்** | = | துர்நாற்றம் நிறைந்தது, |
| **अपि च**<br>**அபி ச** | = | ஆனாலும், |
| **बहिः**<br>**ப³ஹி:** | = | வெளியே, |
| **अगरु**<br>**அக³ரு** | = | அகில், |
| **चन्दन**<br>**சந்த³ன** | = | சந்தனம், |
| **कर्पूराद्यैः**<br>**கர்பூராத்³யை:** | = | கர்பூரம் முதலியவற்றால், |
| **विलेपयति**<br>**விலேபயதி** | = | பூசிக்கொள்கிறான். |

இவ்வுடலில் நகங்களின் நுனிகளிலிருந்து ஆரம்பித்து தலையிலுள்ள கூந்தல் வரையில் எங்குமே துர்நாற்றம்தான் குடிகொண்டுள்ளது ஆனால் இதை மறைத்து இவ்வுடலைச் சிறந்த வாசனையுள்ளதாகச் செய்யும்பொருட்டு அவன் தன்னுடைய உடலில் அகில், சந்தனம், கற்பூரம் முதலியவற்றைப் பூசிக்கொள்கிறான். இவ்வுடல் எவ்வளவு வெறுக்கத்தக்கதாக இருப்பினும் மனிதனுக்கு இதிலுள்ள அபிமானம் நீங்குவதே இல்லை. அதனால் அவன் இதை அழகுபடுத்துவதற்காகப் பல வாசனைப் பொடிகளையும், தைலங்களையும், பூச்சுக்களையும் உபயோகிக்கிறான். **(22)**

**यत्नादस्य पिधत्ते स्वाभाविकदोषसङ्घातम् ।**
**औपाधिकगुणनिवहं प्रकाशयन् श्लाघते मूढः || २३ ||**

**யத்நாத³ஸ்ய பித⁴த்தே ஸ்வாபா⁴விகதோ³ஷஸங்கா⁴தம் ।**
**ஔபாதி⁴ககு³ணனிவஹம் ப்ரகாஶயன் ஶ்லாக⁴தே மூட⁴: ॥ 23 ॥**

| | | |
|---|---|---|
| **अस्य**<br>**அஸ்ய** | = | இந்த சரீரத்தினுடைய, |

स्वाभाविक = இயற்கையாக உள்ள,
ஸ்வாபா⁴விக
दोषसङ्घातम् = குற்றங்களின் கூட்டத்தை,
தோ³ஷஸங்கா⁴தம்
यत्नात् = முயற்சியுடன்,
யத்னாத்
पिधत्ते = மறைக்கிறான்.
பித⁴த்தே
मूढः = முட்டாள்,
மூட⁴:
औपाधिक = செயற்கையாக உள்ள,
ஔபாதி⁴க
गुणनिवहं = குணங்களின் கூட்டத்தை,
கு³ணநிவஹம்
प्रकाशयन् = வெளிப்படுத்திக்கொண்டு,
ப்ரகாஶயன்
श्लाघते = புகழ்கிறான்.
ஶ்லாக⁴தே

இச்சரீரத்தில் கணக்கற்ற கணக்கற்ற குறைபாடுகள் காணப்படுகின்றன. அவன் அவைகள் அனைவற்றையும் மிகுந்த முயற்சியுடன் மூடிவைத்துக்கொள்கிறான். பின்னர் அவன் பலவித ஆடைகளாலும் அழகு தரும் பொருள்களாலும் அதை அலங்கரித்துக்கொள்கிறான். இவ்வாறு அவன் செயற்கையழகு படைத்த தன்னுடைய உடலைப் புகழ்ந்து கொள்கிறான். இவனது அறியாமையை எங்ஙனம் இயம்புவது? (23)

**क्षतमुत्पन्नं देहे यदि न प्रक्षालयते त्रिदिनम् ।**
**तत्रोत्पतन्ति बहवः किमयो दुर्गन्धसंकीर्णाः ॥ २४ ॥**

**க்ஷதமுத்பன்னம் தே³ஹே யதி³ ந ப்ரக்ஷாலயதே த்ரிதி³னம் ।**
**தத்ரோத்பதந்தி ப³ஹவ꞉ கிமயோ து³ர்க³ந்த⁴ஸங்கீர்ணா꞉ ॥ 24 ॥**

देहे = உடலில்,
தே³ஹே
उत्पन्नं = உண்டான,
உத்பன்னம்
क्षतं = புண்,
க்ஷதம்

**त्रिदिनम्** = மூன்று நாட்கள்,
**த்ரிதி3னம்**

**यदि न प्रक्षालयते** = கழுவப்படாவிடில்,
**யதி3 ந ப்ரக்ஷாலயதே**

**तत्र** = அதில்,
**தத்ர**

**दुर्गन्धसंकीर्णाः** = துர்நாற்றத்துடன்கூடிய,
**து3ர்க3ந்த4ஸங்கீர்ணா:**

**बहवः** = பல,
**ப3ஹவ:**

**क्रिमयः** = புழுக்கள்,
**க்ரிமய:**

**उत्पतन्ति** = கிளம்புகின்றன.
**உத்பதந்தி**

இந்த உடலை மிகவும் ஜாக்ரதையாகக் கவனித்துக் கொண்டு காப்பாற்ற வேண்டியிருக்கிறது. ஏதாவது காரணத்தால் இதில் காயம், புண் முதலியவை உண் டானால் அவற்றை உடனே கழுவி சிகித்ஸை செய்ய வேண்டும் அவ்வாறு செய்யாமல் இருந்துவிட்டால் இரண்டு மூன்று நாட்களுக்குள் அப் புண் அழுகிப் போய் விடுகின்றது. அதில் மிகுந்த சீழ் உண்டாகி துர்நாற்றம் வீசுகின்றது. துர்கந்தமுள்ள பல புழுக்களும் அதிலிருந்து கிளம்பி விடுகின்றன. அப்பொழுது இது மிகுந்த அருவெறுப்பை உண்டாக்குகின்றது. **(24)**

**यो देहः सुप्तोऽभूत्सुपुष्पशय्योपशोभिते तल्पे ।**
**सम्प्रति स रज्जुकाष्ठैर्नियन्त्रितः क्षिप्यते वह्नौ ॥ २५ ॥**

**யோ தே3ஹ: ஸுப்தோ(அ)பூ4த்ஸுபுஷ்பஶய்யோபஶோபி4தே தல்பே ।**
**ஸம்ப்ரதி ஸ ரஜ்ஜுகாஷ்டை2ர்நியந்த்ரித: க்ஷிப்யதே வஹ்னௌ ॥ 25 ॥**

**यो देहः** = எந்த உடல்,
**யோ தே3ஹ:**

**सुपुष्प** = நல்ல மலர்களால் அமைக்கப்பட்ட,
**ஸுபுஷ்ப**

**शय्योपशोभिते** = படுக்கையால்அழகுபடுத்தப்பட்ட,
**ஶய்யோபஶோபி4தே**

**तल्पे** = மஞ்சத்தில்,
**தல்பே**

**सुप्तः अभूत्** = தூங்கிக்கொண்டிருந்ததோ,
**ஸுப்த: அபூ4த்**

| | | |
|---|---|---|
| **सः** | = | அது, |
| **ஸ:** | | |
| **सम्प्रति** | = | இப்பொழுது, (பிராணன் பிரிந்தபின்), |
| **ஸம்ப்ரதி** | | |
| **रज्जुकाष्ठैः** | = | கயிறுகளாலும் கட்டைகளாலும், |
| **ரஜ்ஜுகாஷ்டை²:** | | |
| **नियन्त्रितः** | = | கட்டப்பட்டு, |
| **நியந்த்ரித:** | | |
| **वह्नौ** | = | தீயில், |
| **வஹ்னௌ** | | |
| **क्षिप्यते** | = | போடப்படுகிறது. |
| **க்ஷிப்யதே** | | |

மனிதன் உயிருடன் இருக்கும் வரையில் தன்னுடைய சரீர சுகத்தைப் பேணுகிருன். அவன் நல்ல மலர்களால் அமைக்கப்பட்ட மெல்லிய பஞ்சணி மெத்தையில் படுத்து உறங்குகிருன். ஆனுல் கூடுவிட்டு ஆவி சென்றபின் அச் சரீரத்தைக் காப்பவர் யாருமிலர் பின்னர் அவனைச் சேர்ந்தவர்கள் அந்த உடலை வீட்டிற்குள் வீட்டு வைப்பதில்லை. அவர்கள் அதே சரீரத்தைக் கட்டையில் வைத்துக் கயிறுகளால் கட்டித் தூக்கிச் சென்று தீக்கு இரையாகச் செய்து விடுகின்றனர். நன்கு போஷித்துக் காக்கப்பட்ட உடல் தீயில் வைக்கப்பட்டுச் சாம்பலாகச் செய்யப்படு கின்றது.

## सिंहासनोपविष्टं दृष्ट्वा यं मुदमवाप लोकोऽयम् ।
## तं कालाकृष्टतनुं विलोक्य नेत्रे निमीलयति ॥ २६ ॥

**ஸிம்ஹாஸனேபவிஷ்டம் த்³ருஷ்ட்வா யம் முத³மவாப லோகோ(அ)யம் ।**
**தம் காலாக்ருஷ்டதனும் விலோக்ய நேத்ரே நிமீலயதி ॥ 26 ॥**

| | | |
|---|---|---|
| **सिंहासनोपविष्टं** | = | சிம்மாஸனத்தில் வீற்றிருந்த, |
| **ஸிம்ஹாஸனேபவிஷ்டம்** | | |
| **यं** | = | எவனை, |
| **யம்** | | |
| **दृष्ट्वा** | = | பார்த்து, |
| **த்³ருஷ்ட்வா** | | |
| **अयं लोकः** | = | இந்த உலகம், |
| **அயம் லோக:** | | |
| **मुदं** | = | சந்தோஷத்தை, |
| **முத³ம்** | | |

अवाप = அடைந்ததோ,

அவாப

कालाकृष्टतनुं = யமனால் இழுக்கப்பட்ட சரீரத்தை உடைய,

காலாக்ருஷ்டதனும்

तं = அவனை,

தம்

विलोक्य = பார்த்து,

விலோக்ய

नेत्रे = இரு கண்களையும்,

நேத்ரே

निमीलयति = மூடிக்கொள்கிறது.

நிமீலயதி (25)

ஒருவன் உயிருடன் இருக்கும்பொழுது எல்லோராலும் போற்றப்படுகிறான். அவன் உயர்ந்த பதவியைப்பெற்று அரசனாக ஆகி உன்னதமான சிம்மாஸனத்தில் வீற்றிருக்கிறான். அவ்வாறு அமர்ந்திருக்கும் அவனது உடலைக் கண்டு உலகமனைத்தும் உவகை பூக்கின்றது. ஆனால் அவனுடைய சரீரத்திலிருந்து யமன் எப்பொழுது உயிரை இழுத்துக்கொண்டு செல்கிறானோ அப்பொழுதே அந்த உடல் பயங்கரமான தோற்றத்தையளிக்கின்றது. அச்சமயத்தில் உலகமனைத்தும் அதைக்கண்டு வெறுப்பினால் தன்னுடைய இரு கண்களையும் மூடிக்கொள்கிறது. என்னே இந்த உடலின் அவல நிலை! (26)

**(அவதாரிகை)** தேஹத்திற்கு ஆத்மாவால் சலனம் ஏற்படுவதைக் கூறுகிறார்:-

एवंविधोऽतिमलिनो देहो यत्सत्तया चलति ।
तं विस्मृत्य परेशं वहत्य हंतामनित्येऽस्मिन् ॥ २७ ॥

**ஏவம்விதோ⁴(அ)திமலினோ தே³ஹோ யத்ஸத்தயா சலதி ।**
**தம் விஸ்ம்ருத்ய பரேஶம் வஹத்ய ஹந்தாமநித்யே(அ)ஸ்மின் ॥ 27 ॥**

एवंविधः = இப்படிப்பட்ட,

ஏவம்வித⁴:

अतिमलिनः = மிகவும் அசுத்தமான,

அதிமலின:

देहः = உடல்,

தே³ஹ:

यत्सत्तया = எந்த ஆத்மாவினுடைய இருப்பால்,

யத்ஸத்தயா

चलति = அசைகின்றதோ,

சலதி

तं परेशं = அப்படிப்பட்ட பரமாத்மாவை,

தம் பரேஶம்

विस्मृत्य = மறந்து,

விஸ்ம்ருத்ய

अनित्ये = அழியக்கூடிய,

அநித்யே

अस्मिन् = இந்த உடலில்,

அஸ்மின்

अहंतां = நான் என்ற அபிமானத்தை,

அஹந்தாம்

वहति = தாங்குகிறுன்.

வஹதி

இந்த உடல் அநித்யமானது. ஒவ்வொரு க்ஷணமும் மாறி வேறுபாடடைந்து கடைசியில் இது அழிந்துவிடுகிறது. ஆனுல் இதற்குள் உரையும் ஆத்மா அழிவற்றது. அது சாச்வதமானது. அந்த ஆத்மாவினுடைய ஸம்பந்தத்தால்தான் இவ்வுடல் பல தொழில்களில் ஈடுபடுகின்றது. ஆனுல் இதை ஒருவரும் தெரிந்துகொள்வதில்லை. அவன் பரமாத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை மறந்துவிடுகிறுன். அவன் தன்னுடைய சரீரமே ஆத்மா எனக் கருதுகிறுன். இவ்வாறுக அவன் அழியக்கூடிய இந்த தேகத்தில் நான் என்ற அபிமானத்தை வளர்த்துக் கொள்கிறுன். **(27)**

**(அவதாரிகை)** ஆத்மாவிற்கும் அநாத்மாவிற்கும் உள்ள வேற்றுமையைக் கூறுகிறுர்: -

**क्वात्मा सच्चिद्रूपः क्व मांसरुधिरास्थिनिर्मितो देहः ।**
**इति यो लज्जति धीमानितरशरीरं स किं मनुते ॥ २८ ॥**

**க்வாத்மா ஸச்சித்³ரூப: க்வ மாம்ஸருதி⁴ராஸ்தி²நிர்மிதோ தே³ஹ: ।**
**இதி யோ லஜ்ஜதி தீ⁴மாநிதரஶரீரம் ஸ கிம் மனுதே ॥ 28 ॥**

सच्चिद्रूपः = ஸச்சிதானந்தஸ்வரூபியான,

ஸச்சித்³ரூப:

आत्मा = ஆத்மா,

ஆத்மா

क्व = எங்கே?

க்வ

| | | |
|---|---|---|
| **मांसरुधिरास्थिनिर्मितः** | = | மாம்ஸம், இரத்தம், எலும்பு இவைகளால் |
| **மாம்ஸருதி⁴ராஸ்தி²நிர்மித:** | | அமைக்கப்பட்ட, |
| **देहः** | = | உடல், |
| **தே³ஹ:** | | |
| **क्व** | = | எங்கே? |
| **க்வ** | | |
| **इति** | = | என்று, |
| **இதி** | | |
| **यः** | = | எந்த, |
| **ய:** | | |
| **धीमान्** | = | அறிவாளி, |
| **தீ⁴மான்** | | |
| **लज्जति** | = | வெட்கமடைகிறானோ, |
| **லஜ்ஜதி** | | |
| **सः** | = | அவன், |
| **ஸ:** | | |
| **इतरशरीरं** | = | ஆன்மாவைத் தவிர வேறுபட்ட உடலை, |
| **இதரஶரீரம்** | | |
| **मनुते किं** | = | எண்ணுவானா என்ன? |
| **மனுதே கிம்** | | |

ஆத்மாவிற்கும் சரீரத்திற்கும் மிகுந்த வேறுபாடு உள்ளது. ஆத்மா ஸச்சிதாநந்த ஸ்வரூபி. அது அழிவு அற்றது. சரீரமோவெனில் மாம்ஸம், இரத்தம் எலும்பு முதலியவைகளால் அமைக்கப்பட்டது. இது அழியும் தன்மைவாய்ந்தது. எல்லையற்ற துன்பங்களுக்கு உரைவிடமானது. இவற்றின் வேற்றுமைகளை நன்கு உணர்ந்தவன் தன்னுடைய சரீரத்தைப் பற்றிப் பேசுவதற்கே வெட்கப்படுவான். அவ்வாறு இருக்க அவன் தன்னைக் காட்டிலும் வேறான சரீரத்தை ஆத்மாவாக எவ்வாறு எண்ணுவான்.

## २. विषयनिन्दाप्रकरणम् ॥

### 2. விஷயநிந்தா³ ப்ரகரணம் ॥

**(அவதாரிகை)** இவ்வாறு, முக்தியின் ஸாதனங்களான வைராக்யம், ஆத்ம ஞானம், பக்தி இம் மூன்றில் முதலாவதான வைராக்யம் ஏற்படாததற்குக் காரண மான அஹந்தை விலக ஆரம்பம் முதல் முடிவு வரை சரீரத்தில் ஏற்படும் பல தோஷங்களை மிகவும் விரிவாகக் காட்டினார். இனி மமதை (என்னுடையது என்ற அபிமானம்) விலக இரண்டாவதான விஷயநிந்தா ப்ரகரணத்தில், மனைவி, புத்திரன், உறவினர், தனம், என்னும் விஷயங்களின் தோஷங்களைத் தனித் தனியாகக் காட்டு

கிருர். இதை நன்கு அறிந்து தேஹாபிமானமும் நீங்கி தனக்கும் விஷயங்களுக்கும் உள்ள தொடர்பையும் விசாரித்துத் தெரிந்துகொண்டால் மமதையும் விலகி வைராக்யம் உறுதிப்படும். முதலில் ஆறு சுலோகங்களால் மனைவியைப் பற்றிக் கூறுகிருர்: -

**मूढः कुरुते विषयजकर्दमसंमार्जनं मिथ्या ।**
**दुरदृष्टवृष्टिविरसः देहो गेहं पतत्येव ॥ २९ ॥**

**மூட⁴: குருதே விஷயஜகர்த³மஸம்மார்ஜனம் மித்²யா ।**
**து³ரத்³ருஷ்டவ்ருஷ்டிவிரஸ: தே³ஹோ கே³ஹம் பதத்யேவ ॥ 29 ॥**

**मूढः** = முட்டாள்,
**மூட⁴:**
**विषयज** = விஷயங்களின் ஸம்பந்தத்தால் உண்டான
**விஷயஜ** சிற்றின்பமாகிய,
**कर्दम** = சேற்றினுல்,
**கர்த³ம**
**संमार्जनं** = பூசுவதை,
**ஸம்மார்ஜனம்**
**मिथ्या** = வீணுக,
**மித்²யா**
**कुरुते** = செய்கிருன்,
**குருதே**
**दुरदृष्ट** = தீவினையாகிய,
**து³ரத்³ருஷ்ட**
**वृष्टि** = மழையால்,
**வ்ருஷ்டி**
**विरसः** = பலமற்ற,
**விரஸ:**
**देहो गेहं** = சரீரமாகிய வீடு,
**தே³ஹோ கே³ஹம்**
**पतत्येव** = விழுந்தேதீரும்.
**பதத்யேவ**

மனிதனுடைய உடல் ஒரு வீடுபோன்றது. பலத்த மழை பெய்யும்பொழுது வீட்டின் மண் சுவர் நனைந்து, கரைந்து, பலமற்றுப்போய் விழுந்தருவாயில் இருக்கும் வீட்டின்மேல் சேற்றைப்பூசி அதைக் கீழே விழாமல் பாதுகாக்க இயலுமா? அது போலவே இச்சரீரமாகிய வீடும் பாபம் என்ற மழையினுல் தன்னுடைய பலமனைத் தையும் இழந்து விழும் தருவாயில் இருக்கின்றது. அச்சமயத்தில் விஷயங்களால்

உண்டாகும் சிற்றின்பமாகிய சேற்றைப் பூசுவதால் இதை நிலைநிறுத்திக்கொள்ள முடியுமா? சிற்றின்பங்களை நுகர நுகர இச்சரீரம் நிச்சயமாக அழிந்தே தீரும். ஆகையால் விஷய சுகங்களை அனுபவித்துக் கொண்டு இச்சரீரத்தை நீண்ட நாட்கள்வரை காப்பாற்றலாம் என்று எண்ணுகின்றவன் ஞானமற்ற மூடன் என்பது திண்ணம். ஏனெனில் இச்சரீரம் அநித்யமானது. நிச்சயம் அழிந்தே தீரும். **(29)**

**भार्या रूपविहीना मनसः क्षोभाय जायते पुंसाम् ।**
**अत्यन्तं रूपाढ्या सा परपुरुषैर्वशीक्रियते ॥ ३० ॥**

**பா⁴ர்யா ரூபவிஹீனா மனஸ: க்ஷோபா⁴ய ஜாயதே பும்ஸாம் ।**
**அத்யந்தம் ரூபாட்⁴யா ஸா பரபுருஷைர்வஶீக்ரியதே ॥ 30 ॥**

**रूपविहीना** = அழகில்லாத,
**ரூபவிஹீனா**
**भार्या** = மனைவி,
**பா⁴ர்யா**
**पुंसां** = மனிதர்களுடைய,
**பும்ஸாம்**
**मनसः** = மனதின்,
**மனஸ:**
**क्षोभाय** = கலக்கத்திற்காக,
**க்ஷோபா⁴ய**
**जायते** = ஆகிறாள்,
**ஜாயதே**
**अत्यन्तं** = மிகுந்த,
**அத்யந்தம்**
**रूपाढ्या** = அழகுவாய்ந்த,
**ரூபாட்⁴யா**
**सा** = அவள்,
**ஸா**
**परपुरुषैः** = பிறமனிதர்களால்,
**பரபுருஷை:**
**वशीक्रियते** = வசப்படுத்தப்படுகிறாள்.
**வஶீக்ரியதே**

உலகில் ஒவ்வொருவனும் மற்ற எல்லா விஷயங்களைக் காட்டிலும் தன் மனைவியிடமே மிகுந்த அபிமானம் கொள்கிறான். ஆனால் அவளே ஆடவனுக்கு அளவற்ற துன்பத்தைக் கொடுக்கிறாள். அவள் பார்ப்பதற்கு அழகில்லாமல் இருந்தால் அவளை மணந்த மணாளனே அவளை வெறுக்கிறான். அவளால் அவனுக்குச் சிறிதும்

ஸந்தோஷம் உண்டாவதில்லை. அவள் மிகுந்த அழகுள்ளவளாக விளங்கினுலோ மற்ற ஆடவர்கள் அவள்மீது ஆசைகொள்கின்றனர். அவர்கள் அவளை மயக்கித் தன்வசமாகச் செய்துகொண்டு விடுகின்றனர். அதனுல் அவளுடைய கணவன் மிகுந்த துன்பத்தை அடைகிறுன். ஆகவே அழகு இருந்தாலும், அழகு இல்லாவிட்டா லும் மனைவியால் புருஷனுக்குத் துன்பம்தான். **(30)**

**(அவதாரிகை)** அழகிய மனைவியால் ஏற்படும் துன்பத்தை மேலும் விவரிக்கிறுர்: -

**यः कश्चित्परपुरुषो मित्रं भृत्योऽथवा भिक्षुः ।**
**पश्यति हि साभिलाषं विलक्षणोदाररूपवतीम् ॥ ३१ ॥**

**யः கஶ்சித் பரபுருஷோ மித்ரம் ப்⁴ருத்யோ(அ)த²வா பி⁴க்ஷுः ।**
**பஶ்யதி ஹி ஸாபி⁴லாஷம் விலக்ஷணோதா³ர ரூபவதீம் ॥ 31 ॥**

**यः कश्चित्** = யாராவது ஒரு,
**யः கஶ்சித்**
**परपुरुषः** = பிறமனிதன்,
**பரபுருஷः**
**मित्रं** = நண்பனோ,
**மித்ரம்**
**भृत्यः** = வேலைக்காரனோ,
**ப்⁴ருத்யः**
**अथवा** = அல்லது,
**அத²வா**
**भिक्षुः** = பிச்சைக்காரனோ,
**பி⁴க்ஷுः**
**विलक्षणोदाररूपवतीं** = ஒப்புயர்வற்ற அழகு வாய்ந்த தன்
**விலக்ஷணோதா³ரரூபவதீம்** மனைவியை,
**साभिलाषं** = ஆசையுடன்,
**ஸாபி⁴லாஷம்**
**पश्यति हि** = பார்க்கிறுன் அல்லவா?
**பஶ்யதி ஹி**

அழகிற் சிறந்த பெண்மணி அனைவரது உள்ளத்தையும் கொள்ளை கொள்கிறுள். அனைவரும் அவளுடைய அழகிற்கு வசப்பட்டு விடுகிறுர்கள். நண்பனோ வேலைக்கா ரனோ, அல்லது பிச்சைக்காரனோ யாராயிருந்தாலும் அவளை ஆசையுடன் பார்க்கிறுர் கள். இதைக் கண்டு அவள் கணவனின் மனது சஞ்சலமடைகிறது. பிறகு மிகுந்த துக்கத்திற்கு உள்ளாகிறுன். **(31)**

**यं कञ्चित्पुरुषवरं स्वभर्तुरतिसुन्दरं दृष्ट्वा ।**
**मृगयति किं न मृगाक्षी मनसेव परस्त्रियं पुरुषः ॥ ३२ ॥**

**யம் கஞ்சித் புருஷ வரம் ஸ்வப⁴ர் துரதிஸுந்த³ரம் த்³ருஷ்ட்வா ।**
**ம்ருக³யதி கிம் ந ம்ருகா³க்ஷீ மனஸேவ பரஸ்த்ரியம் புருஷ: ॥ 32 ॥**

**पुरुषः** = மனிதன்,
**புருஷ:**

**परस्त्रियं** = பிறருடைய மனைவியை,
**பரஸ்த்ரியம்**

**मनसा इव** = மனதினால் (விரும்புவதுபோல),
**மனஸா இவ**

**मृगाक्षी** = மானின் கண்கள் போல் அழகிய கண்களையுடைய மாதும்,
**ம்ருகா³க்ஷீ**

**स्वभर्तुः** = தன் கணவனைக்காட்டிலும்,
**ஸ்வப⁴ர் து:**

**अतिसुन्दरं** = அதிக அழகுவாய்ந்த,
**அதிஸுந்த³ரம்**

**यं कञ्चित्पुरुषवरं** = ஏதோ ஒரு சிறந்த ஆடவனை,
**யம் கஞ்சித் புருஷ வரம்**

**दृष्ट्वा** = பார்த்து,
**த்³ருஷ்ட்வா**

**किं न मृगयति** = அடையவிரும்புகிறதில்லையா என்ன?
**கிம் ந ம்ருக³யதி**

அழகிற்கு அடிமையாகாதவர் யார்? ஆடவன் அழகிய பெண்மணியைப் பார்த்து மயங்கி அவளை அடையவேண்டுமென்று தன் மனதில் ஆசை கொள்கிறான். அதுபோலவே பெண்டிரும் தங்களுடைய கணவன்மார்களைக் காட்டிலும் சிறந்த அழகுள்ள புருஷர்களைக்கண்டு மயங்கி விடுகின்றனர். அவர்களை அடைய வேண்டு மென்று தங்களுடைய மனதிற்குள்ளேயே ஆசைப்படுகின்றனர். **(32)**

**एवं सुरूपनार्या भर्ता कोपात् प्रतिक्षणं क्षीणः ।**
**नो लभते सुखलेशं बलिमिव बलिभुग् बहुष्वेकः ॥ ३३ ॥**

**ஏவம் ஸுரூபனார்யா ப⁴ர்தா கோபாத் ப்ரதிக்ஷணம் க்ஷீண: ।**
**நோ லப⁴தே ஸுக²லேஶம் ப³லிமிவ ப³லிபு⁴க்³ ப³ஹுஷ்வேக: ॥ 33 ॥**

**एवं** = இம்மாதிரியாக,
**ஏவம்**

| | | |
|---|---|---|
| **सुरूपनार्या**<br>**ஸுரூபநார்யா** | = | அழகுவாய்ந்த பெண்மணியால், |
| **भर्ता**<br>**ப⁴ர்தா** | = | கணவன், |
| **कोपात्**<br>**கோபாத்** | = | சினத்தால், |
| **प्रतिक्षणं**<br>**ப்ரதிக்ஷணம்** | = | ஒவ்வொரு விநாடியும், |
| **क्षीण:**<br>**க்ஷீண:** | = | மனங்குன்றியவனாக |
| **बहुषु**<br>**ப³ஹுஷு** | = | அநேகம் காகங்கள் இருக்கும்பொழுது, |
| **एक:**<br>**ஏக:** | = | ஒரு, |
| **बलिभुक्**<br>**ப³லிபு⁴க்** | = | காகம், |
| **बलिं इव**<br>**ப³லிம் இவ** | = | பலியன்னத்தைப்பெற்று வருந்துவதுபோல, |
| **सुखलेशं**<br>**ஸுக²லேஶம்** | = | எள்ளளவு இன்பத்தைக்கூட, |
| **नो लभते**<br>**நோ லப⁴தே** | = | அடைகிறதில்லை. |

ஒரு காகம் பலியன்னத்தைக் கொத்தித் தின்னும் பொழுது அங்கு அநேகம் காகங்கள் வந்து கூடிவிட்டால் அந்த ஒரு காகம் பலியன்னத்தைத் தின்ன முடியாமல் வருந்துகிறது. இதுபோலவே அழகிய மனைவியைப் பெற்ற கணவன், ஆசை நோக்குடன் பிற புருஷர்கள் இவளைப் பார்ப்பதாலும், இவனைவிட அழகுவாய்ந்த பிற புருஷர்களை ஆசையுடன் இவள் பார்ப்பதாலும், இருவிதத்திலும் இதைக் கண்டு மனதில் மிகவும் துன்புறுகிறான். தன் மனைவியைப் பார்க்கும் பிற புருஷர்களிடமும், பிறபுருஷர்களைப் பார்க்கும் தன் மனைவியிடமும் கோபம்கொள்கிறான். இவ்வாறு அழகிய மனைவியைப் பெற்றும்கூட ஒவ்வொரு நிமிடமும் கிலேசமே வளர்வதால் இவனுக்கு வாழ்க்கையில் மனைவியால் சிறிதளவு இன்பம்கூட ஏற்படுவதில்லை. **(33)**

## वनिता नितान्तमज्ञा स्वाज्ञामुल्लंघ्य वर्तते यदि सा ।
## शत्रोरप्यधिकतरा परभिलाषिण्यसौ किमुत ॥ ३४ ॥

**வனிதா நிதாந்தமஜ்ஞா ஸ்வாஜ்ஞாமுல்லங்க்⁴ய வர்ததே யதி³ ஸா ।**
**ஶத்ரோரப்யதி⁴கதரா பரபி⁴லாஷிண்யஸௌ கிமுத ॥ 34 ॥**

| | | |
|---|---|---|
| **वनिता**<br>**வனிதா** | = | பெண், |
| **नितान्तं**<br>**நிதாந்தம்** | = | மிகவும், |
| **अज्ञा**<br>**அஜ்ஞா** | = | அறிவில்லாதவளாயும், |
| **स्वाज्ञां**<br>**ஸ்வாஜ்ஞாம்** | = | தன்னுடைய கட்டளையை, |
| **उल्लंघ्य**<br>**உல்லங்க்⁴ய** | = | மீறியும், |
| **वर्तते यदि**<br>**வர்ததே யதி³** | = | இருப்பாளாகில், |
| **सा**<br>**ஸா** | = | அவள், |
| **शत्रोः अपि**<br>**ஶத்ரோ: அபி** | = | பகைவனைக்காட்டிலும், |
| **अधिकतरा**<br>**அதி⁴கதரா** | = | மிகவும் கொடியவளாக ஆகிறாள், |
| **असौ**<br>**அஸௌ** | = | அவள், |
| **परभिलाषिणी**<br>**பரபி⁴லாஷிணீ** | = | வேறு ஒரு புருஷனை விரும்புகின்றவளாகவும் இருந்தால், |
| **किमुत**<br>**கிமுத** | = | சொல்வானேன்? |

அறிவற்ற மனைவி தன்னுடைய கணவனுக்கு மிகுந்த துன்பத்தையளிக்கிறாள். அவள் கணவனுடைய கட்டளையை மீறி நடப்பாளாகில் பகைவனைக் காட்டிலும் மிகவும் கொடியவளாகிறாள். மேலும் அவள் வேறு புருஷனை விரும்புகிறவளாகவும் இருந்தால் கூறவும் வேண்டுமா? தனக்கு அடங்கி நடக்கும் மனைவி அறிவு உள்ளவ ளாகவும், அழகுள்ளவளாகவும் இருந்தபோதிலும் இவளைப் பிறர் பார்ப்பதாலும், இவள் பிறரைப் பார்ப்பதாலும் புருஷன் மனதில் ஸந்தேஹம் கொண்டு சஞ்சலம் அடைகிறான் என்று முன் சுலோகங்களில் கூறப்பட்டது. அவள் அறிவில்லாதவளா கவும், தனக்கு அடங்காமலும், தன்னிடம் ஆசையில்லாமல் பிற புருஷனையே விரும்புபவளாகவும் இருந்தால் இதனால் ஏற்படும் துன்பம் சொல்லத் தரமன்று என்பது இந்த சுலோகத்தில் கூறப்படுகிறது. **(34)**

**(அவதாரிகை)** மனைவியைப் பற்றிக் கூறிவிட்டு புத்திரனாலும் ஸுகம் இல்லை என்பதை எட்டு சுலோகங்களால் கூறுகிறார். முதலில் பிள்ளை இல்லாதவனுக்கு கதி இல்லை, என்ற சுருதியின் கருத்தை விளக்குகிறார்: -

लोको नापुत्रस्यास्तीति श्रुत्याऽस्य कः प्रभाषितो लोकः ।
मुक्तिः संसरणं वा तदन्यलोकोऽथवा नाद्यः ॥ ३५ ॥

லோகோ நாபுத்ரஸ்யாஸ்தீதி ஶ்ருத்யா(அ)ஸ்ய க꞉ ப்ரபா⁴ஷிதோ லோக꞉ ।
முக்தி꞉ ஸம்ஸரணம் வா தத³ன்யலோகோ(அ)த²வா நாத்³ய꞉ ॥ 35 ॥

सर्वेऽपि पुत्रभाजस्तन्मुक्तौ संसृतिर्भवति ।
श्रवणादयोऽप्युपायाः मृषा भवेयुस्तृतीयेऽपि ॥ ३६ ॥

ஸர்வே(அ)பி புத்ரபா⁴ஜஸ் தன்முக்தௌ ஸம்ஸ்ருதிர் ப⁴வதி ।
ஶ்ரவணாத³யோ(அ)ப்யுபாயா꞉ ம்ருஷா ப⁴வேயுஸ் த்ருதீயே(அ)பி ॥ 36 ॥

तत्प्राप्त्युपाय सत्वात् द्वितीयपक्षेऽप्यपुत्रस्य ।
पुवेष्ट्यादिकयागप्रवृत्तये वेदवादोऽयम् ॥ ३७ ॥

தத்ப்ராப்த்யுபாய ஸத்வாத் த்³விதீயபக்ஷே(அ)ப்யபுத்ரஸ்ய ।
புவேஷ்ட்யாதி³கயாக³ப்ரவ்ருத்தயே வேத³வாதோ³(அ)யம் ॥ 37 ॥

अपुत्रस्य = பிள்ளையில்லாதவனுக்கு,
அபுத்ரஸ்ய

लोकः = உலகம்,
லோக꞉

नास्ति = இல்லை,
நாஸ்தி

इति = என்று,
இதி

श्रुत्या = வேதத்தால்,
ஶ்ருத்யா

अस्य = இவனுக்கு,
அஸ்ய

प्रभाषितः = கூறப்பட்டுள்ள,
ப்ரபா⁴ஷித꞉

लोकः = உலகம் என்பது,
லோக꞉

कः = யாது?
க꞉

मुक्तिः = மோக்ஷமா?
முக்தி꞉

| | | |
|---|---|---|
| **वा**<br>**வா** | = | அல்லது, |
| **संसरणं**<br>**ஸம்ஸரணம்** | = | ஸம்ஸாரமா? |
| **अथवा**<br>**அத²வா** | = | அல்லது, |
| **तदन्यलोकः**<br>**தத³ன்யலோகஃ** | = | இவ்விரண்டுகளையும் தவிர வேறு ஏதாவது உலகமா? |
| **न आद्यः**<br>**ந ஆத்³யஃ** | = | (உலகம் என்பது) முதலாவதான மோக்ஷமல்ல, |
| **सर्वेऽपि**<br>**ஸர்வே(அ)பி** | = | எல்லோருமே, |
| **पुत्रभाजः**<br>**புத்ரபா⁴ஜஃ** | = | புதல்வர்களைப்பெற்றவர்கள், |
| **तन्मुक्तौ**<br>**தன்முக்தௌ** | = | அவர்களுக்கு அப்பிள்ளைப்பேறினால் ஏற்படும் முக்தியில், |
| **संसृतिः भवति**<br>**ஸம்ஸ்ருதிஃ ப⁴வதி** | = | ஸம்ஸாரம்தான் இருக்கிறது, |
| **श्रवणादयः**<br>**ஶ்ரவணாத³யஃ** | = | சிரவணம் முதலிய, |
| **उपायाः अपि**<br>**உபாயாஃ அபி** | = | உபாயங்களும்கூட, |
| **मृषा भवेयुः**<br>**ம்ருஷா ப⁴வேயுஃ** | = | வீணாகவே ஆகிவிடும், |
| **तृतीयेपि**<br>**த்ருதீயேபி** | = | மூன்றுவது பக்ஷத்திலும், |
| **तत्प्राप्त्युपाय**<br>**தத்ப்ராப்த்யுபாய** | = | அதை அடைய வேறு உபாயம் இருப்பதால் (அதுவும் சரியல்ல), |
| **द्वितीयपक्षेऽपि**<br>**த்³விதீயபக்ஷே(அ)பி** | = | இரண்டாவது பக்ஷத்திலும் அதை அடைய உபாயம் இருப்பதால் அதுவும் சரியல்ல. (ஆகையால்), |
| **अपुत्रस्य**<br>**அபுத்ரஸ்ய** | = | பிள்ளை இல்லாதவனுக்கு, |
| **पुत्रेष्ट्यादिकयागप्रवृत्तये**<br>**புத்ரேஷ்ட்யாதி³கயாக³ப்ரவ்ருத்தயே** | = | புத்ரேஷ்டி முதலான யாகங்களில் ப்ரவ்ருத்தி ஏற்படுவதற்காக, |

अयं = இது,

அயம்

वेदवाद: = வேதத்திலுள்ள அர்த்தவாதம்.

வேத³வாத³:

வேதத்தில் புத்திரனின் பெருமையைப் பற்றிப் பலவாறுகக் கூறப்பட்டுள்ளது.

**'नापुत्रस्य लोकोऽस्ति'**

**'நாபுத்ரஸ்ய லோகோ(அ)ஸ்தி'**

'பிள்ளை இல்லாதவனுக்கு உலகம் இல்லை' என்று வேதம் கூறுகிறது. இங்கு கூறப் பட்ட உலகம் என்பது முக்தியா அல்லது ஸம்ஸாரமா (இவ்வுலகமா) அல்லது இவ்விரண்டைக் காட்டிலும் வேறுன லோகமா (ஸ்வர்க்கமா)? இம் மூன்று பக்ஷங் களில் முதலில் கூறப்பட்ட 'புத்திரனில்லாதவனுக்கு முக்தி கிடையாது' என்ற பக்ஷம் சரியல்ல. பிள்ளை இல்லாதவனுக்கு முக்தி இல்லை என்றுல் பிள்ளை பெற்றவ னுக்கு முக்தி கிடைக்கும் என்று ஆகிவிடும். பிள்ளை பெற்றதனுலேயே முக்தி ஏற்படுமானுல் உலகில் அநேகமாக எல்லோரும் பிள்ளை உள்ளவர்களாக இருக்கிறுர்கள். இவர்கள் எல்லோரும் முக்தியை அடைந்ததாகச் சொல்லவேண்டும். ஆனுல் உலகில் அவ்வாறு காணவில்லை. புத்திரன் உள்ளவர்கள் ஸம்ஸாரத்தில் தான் உழன்றுகொண்டிருக்கிறுர்கள். ஆதலால் புத்திரனுல் ஏற்படும் முக்தி பெயரள வில் முக்தியே தவிற உண்மையில் அது ஸம்ஸாரம் என்றுதான் சொல்ல வேண்டும். மேலும் முக்திக்கு உபாயமாக சிரவணம், மனனம், நிதித்யாஸனம் முதலியவைகளை உபநிஷத்துக்கள் கூறுகின்றன. பிள்ளையாலேயே முக்தி ஏற்படுமா னுல் இந்த உபாயங்கள் எல்லாம் வீண் என்று ஆகிவிடும். இவைகளை உபாயமாகக் கூறும் உபநிஷத் வாக்யங்களும் பொய்யாக ஆகிவிடும்.

புத்திரனில்லாதவனுக்கு ஸ்வர்க்கம் கிடையாது என்ற மூன்றுவது பக்ஷமும் சரியல்ல. ஸ்வர்க்கத்தை அடைவதற்கு யாகம் முதலான பல ஸாதனங்கள் வேதங் களில் கூறப்பட்டிருக்கின்றன. பிள்ளை இல்லாவிட்டாலும் இந்த ஸாதனங்களை அனுஷ்டித்து ஸ்வர்க்கத்தை அடைந்து விடலாம். பிள்ளை இல்லாதவர்கள் பலர் இவ்வுலகில் வாழ்ந்து வருவதாலும் இவர்கள் ஸுகமாக இருப்பதற்கு பல ஸாதனங் கள் இருப்பதாலும் இரண்டாவது பக்ஷமும் சரியல்ல.

இப்படியானுல் 'புத்திரன் இல்லாதவனுக்கு லோகம் இல்லை' என்று சொல்லுகிற வேத வாக்யத்தின் கருத்து என்னவெனில், வேதத்தில் புத்திரகாமேஷ்டி முதலான யாகங்கள் கூறப்பட்டிருக்கின்றன. இந்த யாகங்களை அனுஷ்டிக்கவேண்டு மானுல் அவர்களுக்கு புத்ரனின் பெருமையை உணர்த்தவேண்டும். புத்திரன் இல்லா தவருக்கு லோகம் இல்லை என்று கூறினுல்தான் புத்திரன் இல்லாதவர்கள் தாங்கள் நல்ல லோகத்தை அடைந்து ஸுகமாக இருப்பதற்கு புத்திரனைப் பெற புத்ரேஷ்டியை அனுஷ்டிப்பார்கள். இல்லாவிட்டால் ஒருவரும் இவைகளை அனுஷ்டிக்க மாட்டார்

கள். ஆகவே இந்த யாகங்களை அனுஷ்டிப்பதில் ருசி ஏற்படுவதற்காகக் கூறப்படும் அர்த்தவாத வாக்யம்தான் 'புத்ரன் இல்லாதவனுக்கு லோகம் இல்லை' என்பது (35-37)

(**அவதாரிகை**) புத்திரனால் ஏற்படும் துன்பங்களைக் கூறுகிறார்: -

**नानाशरीरकष्टैर्धनव्ययैः साध्यते पुत्रः ।**
**उत्पन्नमात्रपुत्रे जीवितचिन्ता गरीयसी तस्य ॥ ३८ ॥**

**நாநாஶரீரகஷ்டைர் த⁴ந வ்யயை: ஸாத்⁴யதே புத்ர: ।**
**உத்பன்னமாத்ர புத்ரே ஜீவிதசிந்தா க³ரீயஸீ தஸ்ய ॥ 38 ॥**

**पुत्रः** = புதல்வன்,
**புத்ர:**
**नाना** = பலவிதமான,
**நாநா**
**शरीर** = தேகத்தின்,
**ஶரீர**
**कष्टैः** = துன்பங்களாலும்,
**கஷ்டை:**
**धनव्ययैः** = பணச்செலவுகளாலும்,
**த⁴நவ்யயை:**
**साध्यते** = அடையப்படுகிறான்,
**ஸாத்⁴யதே**
**उत्पन्नमात्रपुत्रे** = பிள்ளை பிறந்த உடனேயே,
**உத்பன்னமாத்ர**
**तस्य** = அவனுடைய,
**தஸ்ய**
**जीवितचिन्ता** = ஆயுளின் கவலை,
**ஜீவிதசிந்தா**
**गरीयसी** = மிகவும் அதிகமாக ஏற்படுகிறது.
**க³ரீயஸீ**

புத்திரப் பேறில்லாத மனிதன் மிகவும் வருத்தமடைகிறான். அவன் புத்திரனைப் பெறுவதற்காகப் பலவிதமான விரதங்களை அனுஷ்டிக்கிறான். பற்பல தவங்களையும் செய்கிறான். அவன் அளவற்ற செல்வத்தைச் செலவு செய்து பல புண்ய கர்மாக்களைச் செய்கிறான் இதனால் சரீரத்திற்குக் கஷ்டமும் பணச் செலவும் ஏற்படுகிறது. அதன் பயனாகப் புதல்வன் பிறந்தால் அவனுக்கு நீண்ட ஆயுள் நிலைக்க வேண்டுமே என்ற கவலை அவனுக்கு ஏற்பட்டுவிடுகிறது. **(38)**

**जीवन्नपि किं मूर्खः प्राज्ञः किं वा सुशीलभाग्भविता ।**
**जारश्चौरः पिशुनः पतितो द्यूतप्रियः क्रूरः ॥ ३९ ॥**

**ஜீவன்னபி கிம் மூர்க²: ப்ராஜ்ஞ: கிம் வா ஸுஸீ²லபா⁴க்³ப⁴விதா ।**
**ஜாரஸ்²சௌர: பிஸு²ன: பதிதோ த்³யூதப்ரிய: க்ரூர: ॥ 39 ॥**

**जीवन् अपि** = நீண்ட ஆயுளை உடையவனாக இருந்தாலும்,
**ஜீவன் அபி**
**मूर्खः किं** = முட்டாளாக இருப்பானா,
**மூர்க²: கிம்**
**किं वा प्राज्ञः** = நல்ல அறிவாளியாக இருப்பானா,
**கிம் வா ப்ராஜ்ஞ:**
**सुशीलभाक्** = நல்ல பழக்கங்களை உடையவனாக இருப்பானா,
**ஸுஸீ²லபா⁴க்**
**जारः** = பிறர் மனைவியை விரும்புகின்றவனாக இருப்பானா,
**ஜார:**
**चौरः** = திருடனாக இருப்பானா,
**சௌர:**
**पिशुनः** = கோட்சொல்கின்றவனாக இருப்பானா,
**பிஸு²ன:**
**पतितः** = கர்ம ப்ரஷ்டனாக இருப்பானா,
**பதித:**
**द्यूतप्रियः** = சூதாட்டத்தில் விருப்பமுள்ளவனாக இருப்பானா,
**த்³யூதப்ரிய:**
**क्रूरःभविता** = அல்லது கொடியவனாக இருப்பானா?
**க்ரூர:ப⁴விதா** (என்ற பல கவலைகள் உண்டாகின்றன.)

ஒருவனுக்குப் பிள்ளை பிறந்தபோதிலும், அப்பிள்ளை நீண்ட ஆயுளை உடையவனாக இருந்தாலும்கூடப் பற்பல கவலைகள் உண்டாகின்றன. எதிர்காலத்தில் அவன் மூடனாக இருப்பானா, அல்லது புத்திசாலியாகவும், நல்ல ஸ்வபாவமுள்ளவனாகவும் இருப்பானா? பிறர் மனைவியை விரும்புகின்றவனாகவோ, திருடனாகவோ, கோட் சொல்பவனாகவோ, பதிதனாகவோ, சூதாட்டத்தில் பிரியமுள்ளவனாகவோ, கொடுமை வாய்ந்தவனாகவோ ஆய்விடுவானா என்ற பற்பல கவலைகள் அவனை வாட்டுகின்றன. **(39)**

**पितृमातृबन्धुघाती मनसः खेदाय जायते पुत्रः ।**
**चिन्तयति तातनिधनं पुत्रो द्रव्याद्यधीशताहेतोः ॥ ४० ॥**

**பித்ரு மாத்ரு ப³ந்து⁴ கா⁴தீ மனஸ꞉ கே²தா³ய ஜாயதே புத்ர꞉ ।**
**சிந்தயதி தாத நித⁴னம் புத்ரோ த்³ரவ்யாத்³யதீ⁴ஶதா ஹேதோ꞉ ॥ 40 ॥**

**पितृ** = தந்தை,

**பித்ரு**

**मातृ** = தாய்,

**மாத்ரு**

**बन्धु** = உறவினர்கள் முதலியவர்களை,

**ப³ந்து⁴**

**घाती** = கொல்லுகின்ற,

**கா⁴தீ**

**पुत्रः** = பிள்ளை,

**புத்ர꞉**

**मनसः** = மனதின்,

**மனஸ꞉**

**खेदाय** = வருத்தத்திற்குக் காரணமாக,

**கே²தா³ய**

**जायते** = ஆகிறான்,

**ஜாயதே**

**पुत्रः** = பிள்ளை,

**புத்ர꞉**

**द्रव्यादि** = செல்வம் முதலியவற்றின்,

**த்³ரவ்யாதி³**

**अधीशताहेतोः** = உரிமையின் காரணமாக,

**அதீ⁴ஶதாஹேதோ꞉**

**तातनिधनं** = தந்தையின் மரணத்தைப்பற்றி,

**தாத நித⁴னம்**

**चिन्तयति** = எண்ணுகிறான்.

**சிந்தயதி**

ஒருவனுக்குப் பிறக்கும் பிள்ளைகள் எல்லாம் நல்லவர்களாகவே இருப்பார்கள் என்று சொல்லமுடியுமா? சில பிள்ளைகள் தங்களுடைய தாய், தந்தை, உற்றார், உறவினர் முதலியவர்களைத் துன்புறுத்தி வதைக்க ஆரம்பிப்பார்கள். அப்படிப்பட்ட பிள்ளைகள் தாய் தந்தையர்களுக்கு மன வருத்தத்தையே உண்டுபண்ணிக் கொண்டிருப்பார்கள். மேலும் சிலர் தங்கள் பெற்றோர்களுடைய செல்வம் முதலியவற்றிற்குத்தானே யஜமானராக ஆவதற்காகத் தந்தையின் மரணத்தை எதிர்நோக்கியிருப்பார்கள். தந்தையின் சொத்துக்களைத் தான் அடைவதற்காக தந்தை சாவதை

விரும்புவார்கள். அதனுல் அவர்களுக்கு அளவற்ற துன்பமே ஏற்படும். தன் பிள்ளைகளைக் கண்டு அவர்களது தாய் தந்தையர்கள் அஞ்சுவார்கள்

**पुत्रादपि धनभाजां भीतिः**

**புத்ராத³பி த⁴னபா⁴ஜாம் பீ⁴தி:**

என்று ஸ்ரீ சங்கரபகவத்பாதர் பஜகோவிந்தத்தில் கூறுகிருர். **(40)**

**सर्वगुणैरुपपन्नः पुत्रः कस्यापि कुत्रचिद्भवति ।**
**सोऽल्पायू रुग्णो वा ह्यनपत्यो वा तथापि खेदाय ॥ ४१ ॥**

**ஸர்வகு³ணைருபபன்ன: புத்ர: கஸ்யாபி குத்ரசித்³ப⁴வதி ।**
**ஸோ(அ)ல்பாயூ ருக்³ணோ வா ஹ்யனபத்யோ வா ததா²பி கே²தா³ய ॥ 41 ॥**

**कुत्रचित्** = எங்கேயாவது,
**குத்ரசித்**

**कस्यापि** = யாருக்காவது,
**கஸ்யாபி**

**सर्वगुणैः** = எல்லா குணங்களோடும்,
**ஸர்வகு³ணை:**

**उपपन्नः** = கூடிய,
**உபபன்ன:**

**पुत्रः** = பிள்ளை,
**புத்ர:**

**भवति** = உண்டாகிருன்,
**ப⁴வதி**

**तथापि** = அப்படியிருந்தபோதிலும்,
**ததா²பி**

**सः** = அவன்,
**ஸ:**

**अल्पायू** = நீடித்த ஆயுள் அற்றவனுகவோ
**அல்பாயூ**

**रुग्णो वा** = பிணியுள்ளவனுகவோ,
**ருக்³ணோ வா**

**अनपत्यो वा** = குழந்தையற்றவனுகவோ இருப்பின்,
**அனபத்யோ வா**

**खेदाय हि** = துன்பத்திற்காகவே ஆகிருனல்லவா!
**கே²தா³ய ஹி**

உலகின்கண் எங்கேயாவது ஏதோ ஒரு சிலருக்குத் தான் அதிருஷ்ட வசத்தால் நற்குணங்களனைத்தும் ஒருங்கே நிறைந்த ஆண்மகன் ஒருவன் பிறக்கிறான். அவனும் நீண்டநாள் வாழ்வதில்லை. ஒருக்கால் நீண்டநாள் வாழ்ந்தாலும் வியாதியால் எப்பொழுதும் துன்புறுகிறான். வியாதி இல்லாவிட்டாலும் ஸந்ததியற்றவனாய்விடுகிறான். இவ்வாறு எவ்விதத்திலும் அவனுடைய பெற்றோர்கள் சொல்லொணாத்துயரத்தையே அனுபவிக்கின்றனர். **(41)**

**(அவதாரிகை)** புத்திரனால் இவ்வுலகில் ஸுகம் இல்லை என்பதைக் கூறிவிட்டு பரலோக ஸுகமும் கிடையாது என்று கூறுகிறார்: -

**पुत्रात्सद्गतिरिति चेत्तदपि प्रायोऽस्ति युक्त्यसहम् ।**
**इत्थं शरीरकष्टैर्दुःखं संप्रार्थ्यते मूढैः ॥ ४२ ॥**

**புத்ராத் ஸத்³க³திரிதி சேத் தத³பி ப்ராயோ(அ)ஸ்தி யுக்த்யஸஹம் ।**
**இத்த²ம் ஶரீரகஷ்டைர் து³:க²ம் ஸம்ப்ரார்த்²யதே மூடை⁴: ॥ 42 ॥**

**पुत्रात्** = புதல்வனால்,
**புத்ராத்**
**सद्गतिः** = நற்கதி ஏற்படுகிறது,
**ஸத்³க³தி:**
**इति चेत्** = என்றால்,
**இதி சேத்**
**तदपि** = அதுவும்,
**தத³பி**
**युक्त्यसहम्** = யுக்திக்குப் பொருந்தாதது,
**யுக்த்யஸஹம்**
**इत्थं** = இவ்வாறாக,
**இத்த²ம்**
**मूढैः** = அறிவற்றவர்களால்,
**மூடை⁴:**
**शरीरकष्टैः** = உடலுக்கு இன்னல்களை ஏற்படுத்திக்
**ஶரீரகஷ்டை:** கொள்வதுடன்,
**दुःखं** = துன்பம்,
**து³:க²ம்**
**संप्रार्थ्यते** = வேண்டப்படுகிறது.
**ஸம்ப்ரார்த்²யதே**

இதுகாறும் புத்திரனால் இவ்வுலகில் சிறிதளவும் இன்பமே இல்லை, துன்பம் தான் என்று கூறப்பட்டது. புத்திரனால் பரலோகத்தில் ஸுகம் ஏற்படுவதற்காக இந்தக்

கஷ்டங்களைப் பொறுத்துக் கொள்ளலாமெனில் அதுவும் சரியல்ல. நன்குயுக்திகளால் விசாரித்துப்பார்த்தால் 'புத்திரனால் ஸத்கதி' என்ற வாதம் நிலைக்காது. தந்தை ஸத்கதி யடைவதற்காக தனயன் ஸத்கர்மாக்களைச் செய்வான் என்பது என்ன நிச்சயம்? ஆகையால் புத்திரனை அடைய விரும்புபவர்கள் மூடர்கள். இவர்கள் துன்பத்தைத் தான் விரும்புகிறார்கள். தம் சரீரத்தைத் துன்புறுத்தி பணத்தையும் செலவு செய்து புத்திரன் மூலம் பின்னால் தனக்குத் துன்பத்தையே தேடிக்கொள்கிறார் கள். **(42)**

**(அவதாரிகை)** மனைவியையும், புத்திரனையும் பற்றிக் கூறி விட்டு உறவினர் களைப் பற்றிக் கூறுகிறார்: -

**पितृमातृबन्धुभगिनीपितृव्यजामातृमुख्यानाम् ।**
**मार्गस्थानामिव युतिरनेकयोनिभ्रमात् क्षणिका ॥ ४३ ॥**

**பித்ருமாத்ருப³ந்து⁴ப⁴கி³னீபித்ருவ்யஜாமாத்ருமுக்²யானாம் ।**
**மார்க³ஸ்தா²நாமிவ யுதிரனேகயோனிப்⁴ரமாத் க்ஷணிகா ॥ 43 ॥**

**मार्गस्थानां** = வழியில் உள்ளவர்களின்,
**மார்க³ஸ்தா²னும்**

**युतिः इव** = சந்திப்பு போல,
**யுதி: இவ**

**पितृ** = தந்தை,
**பித்ரு**

**मातृ** = தாய்,
**மாத்ரு**

**बन्धु** = உறவினர்கள்,
**ப³ந்து⁴**

**भगिनी** = ஸஹோதரி,
**ப⁴கி³னீ**

**पितृव्य** = தந்தையின் ஸஹோதரர்கள்,
**பித்ருவ்ய**

**जामातृमुख्यानां** = மருமகன் முதலியவர்களின்,
**ஜாமாத்ருமுக்²யானும்**

**युतिः** = சந்திப்பு,
**யுதி:**

**अनेकयोनिभ्रमात्** = பல பிறவிகளில் சுழல்வதால்,
**அனேகயோனிப்⁴ரமாத்**

**क्षणिका** = கணநேரம் வரையில் தான் இருக்கக்கூடியது.
**க்ஷணிகா**

ஒருவன் வழியில் சென்று கொண்டிருக்கும் பொழுது பல நண்பர்களைச் சந்திக்கிறுன். ஆனுல் அவர்களுடைய சேர்க்கை சிறிது காலமே நீடிக்கிறது பிறகு அவன் அவர்களைப் பிரிந்து சென்றுவிடுகிறுன். அதுபோலவே ஒரு ஜீவன் தன்னுடைய கர்ம வசமாகப் பல பிறவிகளையடையகிறுன். ஒவ்வொரு பிறவியிலும் அவன் தாய், தந்தை, உறவினர், சகோதரி, சிற்றப்பன் பெரியப்பன் முதலிய பலரைச் சந்திக்கிறுன். அவர்களுடைய ஸகவாஸம் சிறிது காலம் வரையில்தான் நிலவுகின்றது. பின்னர் அவன் அவர்களைப் பிரிந்து சென்று வேறு பிறவி எடுத்துக்கொள்கிறுன். அவர்களும் இவனை விட்டுப்பிரிந்து சென்று விடுகின்றனர். இவ்வாறு பல பிறவிகளை எடுத்து வரும் ஜீவன் அந்தந்தப் பிறவியில் மட்டும், அதிலும் சிறிது காலமே தன்னிடம் சேர்ந்து வாழ்ந்துப் பிறகு பிரிந்து செல்கின்ற உறவினரிடம் வீணுக அபிமானம் கொண்டு துன்பமுறுகிறுன். **(43)**

(**அவதாரிகை**) உறவினரின் பிரிவால் ஏற்படும் துன்பத்தைக் கூறிவிட்டு அவர்கள் இருக்கும்போதும் துன்பம் என்று கூறுகிறுர். -

**दैवं यावद्विपुलं यावत्प्रचुरः परोपकारश्च ।**
**तावत्सर्वे सुहृदो व्यत्ययतः शत्रवः सर्वे ॥ ४४ ॥**

**தை³வம் யாவத்³விபுலம் யாவத்ப்ரசுரஃ பரோபகாரஸ்ச ।**
**தாவத்ஸர்வே ஸுஹ்ருதோ³ வ்யத்யயதஃ ஶத்ரவஃ ஸர்வே ॥ 44 ॥**

**यावत्** = எது வரையில்,
**யாவத்**
**दैवं** = அதிருஷ்டம்,
**தை³வம்**
**विपुलं** = அதிகமாகவும்,
**விபுலம்**
**यावत्** = எவ்வளவு காலம்,
**யாவத்**
**परोपकारः** = பிறருக்குச் செய்யும் உதவி,
**பரோபகாரஃ**
**प्रचुरश्च** = மிகுந்ததாகவும் இருக்கிறதோ,
**ப்ரசுரஸ்ச**
**तावत्** = அதுவரையில்,
**தாவத்**
**सर्वे** = எல்லோரும்,
**ஸர்வே**
**सुहृदः** = நண்பர்களாக இருக்கிறுர்கள்,
**ஸுஹ்ருத³ஃ**

**व्यत्ययत:** = அதற்கு மாருக இருக்கும்பொழுது,

**வ்யத்யயத꞉**

**सर्वे** = எல்லோரும்,

**ஸர்வே**

**शत्रव:** = பகைவர்களாக ஆகிவிடுகின்றனர்.

**ஶத்ரவ꞉**

எதுவரையில் ஒருவன் மிகுந்த அதிருஷ்டமுள்ளவனுகவும், எல்லோருக்கும் உதவி செய்கின்றவனுகவும் இருக்கிருனே, அதுவரையில் அவஊ எல்லோரும் நண்பன் என்று கொண்டாடுகிருர்கள். அவனே துரதிருஷ்டமுள்ளவனுகவும், பிறருக்கு உதவிசெய்ய இயலாதவனுகவும் ஆகி விட்டால் அவர்களே அவனுக்குப் பகைவர்களாக மாறி விடுகிருர்கள். ஆகையால் ஒருவனுக்கு உண்மையான நண்பன் கிடைப்பது மிகவும் அரிது. **(44)**

**अश्नन्ति चेदनुदिनं वन्दिन इव वर्णयन्ति संतृप्ता: ।**
**तच्चेत् द्वित्रदिनान्तरमभिनिन्दन्त: प्रकुप्यन्ति ॥ ४५ ॥**

**அஶ்னந்தி சேத³னுதி³னம் வந்தி³ன இவ வர்ணயந்தி ஸந்த்ருப்தா꞉ ।**
**தச்சேத் த்³வித்ரதி³ஞந்தரமபி⁴னிந்த³ந்த꞉ ப்ரகுப்யந்தி ॥ 45 ॥**

**अनुदिनं** = தினந்தோறும்,

**அனுதி³னம்**

**अश्नन्ति चेत्** = அவர்கள் உண்பார்களேயாகில்,

**அஶ்னந்தி சேத்**

**संतृप्ता:** = மிகுந்த மகிழ்ச்சியடைந்தவர்களாக,

**ஸந்த்ருப்தா꞉**

**वन्दिन इव** = ஸ்துதி பாடுகிறவர்கள்போல,

**வந்தி³ன இவ**

**वर्णयन्ति** = புகழ்கிருர்கள்,

**வர்ணயந்தி**

**तत्** = அவ்வுணவளித்தல்,

**தத்**

**द्वित्रदिनान्तरं चेत्** = இரண்டு மூன்று நாட்களில் நின்று விட்டால்,

**த்³வித்ரதி³ஞந்தரம் சேத்**

**अभिनिन्दन्त:** = நிந்திக்கிறவர்களாய்,

**அபி⁴னிந்த³ந்த꞉**

**प्रकुप्यन्ति** = மிகுந்த கோபத்தை அடைகிருர்கள்.

**ப்ரகுப்யந்தி**

அரசனிடமிருந்து உண்டியையும் பொருள்களையும் பெற்று அதனால் மிகவும் மகிழ்வுற்ற வந்திகள் தினந்தோறும் அவனுடைய புகழையே பாடி மகிழ்கின்றனர். அது போலவே ஒருவன் அளிக்கும் உண்டியைத் தினமும் உண்டு அது களிக்கும் உற்றார் உறவினர்கள் அவனைப் புகழ்கிறார்கள்.

**यावद्वितरति दाता तावद्भवति सर्वोऽपि कलभाषी ।**

**யாவத்3விதரதி தா3தா தாவத்3ப4வதி ஸர்வோ(அ)பி கலபா4ஷீ ।**

ஆனால் அவனே உணவளிப்பதை இரண்டு மூன்று தினங்களுக்குப் பின் நிறுத்தி விட்டால் அவனைப் புகழ்ந்தவர்கள் அவன்மீது சீற்றம் கொள்கிறார்கள். பின்னர் அவர்களே அவனைத் தூற்றவும் தலைப்பட்டுவிடுகின்றனர். **(45)**

**(அவதாரிகை)** பணத்தால் ஏற்படும் துன்பத்தை விவரிக்கிறார்: -

**दुर्भरजठरनिमित्तं समुपार्जयितुं प्रवर्तते चित्तम् ।**
**लक्षावधि बहुवित्तं तथाऽप्यलभ्यं कपर्दिकामात्रम् ॥ ४६ ॥**

**து3ர்ப4ரஜட2ரநிமித்தம் ஸமுபார்ஜயிதும் ப்ரவர்ததே சித்தம் ।**
**லக்ஷாவதி4 ப3ஹுவித்தம் ததா2(அ)ப்யலப்4யம் கபர்தி3காமாத்ரம் ॥ 46 ॥**

**दुर्भर** = நிரப்பித்திருப்தி செய்யமுடியாத,
**து3ர்ப4**

**जठरनिमित्तं** = வயிற்றின் பொருட்டு,
**ஜட2ரநிமித்தம்**

**लक्षावधि** = லக்ஷம் வரையில்,
**லக்ஷாவதி4**

**बहुवित्तं** = மிகுந்த செல்வத்தை,
**ப3ஹுவித்தம்**

**समुपार्जयितुं** = சேமித்து வைப்பதற்கு,
**ஸமுபார்ஜயிதும்**

**चित्तं** = மனம்,
**சித்தம்**

**प्रवर्तते** = ஈடுபடுகிறது,
**ப்ரவர்ததே**

**तथापि** = அவ்வாறு இருந்த போதிலும்,
**ததா2பி**

**कपर्दिकामात्रं** = ஒரு சோழிகூட,
**கபர்தி3காமாத்ரம்**

**अलभ्यं** = கிடைப்பதில்லை.

**அலப்⁴யம்**

ஒருசாண் வயிற்றை நிரப்புவதற்காக ஒருவன் படும் பாட்டை வர்ணிக்க இயலுமா?

## प्रादेशमात्रमुदरं पूरयितुं कियानयं यत्नः

**ப்ராதே³ஶமாத்ரமுத³ரம் பூரயிதும் கியானயம் யத்னः**

தினமும் இதை நிரப்புவதற்காக ஒருவன் தன் முழுநேரத்தையும் செலவு செய்கிறான். ஆனால் அதை நிரப்பித் திருப்திசெய்ய இயலவே இயலாது. இப் பாழும் வயிற்றிற்காக மனிதன் செய்யத்தகாத செயல்களைச் செய்து லக்ஷக்கணக்கான ரூபாய்களைச் சேமிக்க முயல்கிறான். ஆனால் அவனுக்கு ஒரு காசுகூடக் கிடைப்பது இல்லை. **(46)**

(**அவதாரிகை**) பணத்தைத் தேடுவதிலுள்ள சிரமத்தைக் கூறி விட்டு, அது கிடைத்தாலும் துன்பம்தான் என்கிறார்: -

## लब्धश्चेदधिकोऽर्थः पत्न्यादीनां भवेत्स्वार्थः ।
## नृपचोरतोऽप्यनर्थस्तस्माद् द्रव्योद्यमो व्यर्थः ॥ ४७ ॥

**லப்³த⁴ஶ்சேத³தி⁴கோ(அ)ர்த²ः பத்ன்யாதீ³னாம் ப⁴வேத்ஸ்வார்த²ः ।**
**ந்ருபசோரதோ(அ)ப்யனர்த²ஸ்தஸ்மாத்³ த்³ரவ்யோத்³யமோ வ்யர்த²ः ॥ 47 ॥**

**अधिकः** = ஏராளமான,

**அதி⁴கः**

**अर्थः** = செல்வம்,

**அர்த²ः**

**लब्धः चेत्** = அடையப்பட்டபோதிலும் அது,

**லப்³த⁴ः சேத்**

**पत्न्यादीनां** = மனைவி முதலியவர்களுடைய,

**பத்ன்யாதீ³னாம்**

**स्वार्थः** = சொந்த சொத்தாக,

**ஸ்வார்த²ः**

**भवेत्** = ஆகிவிடும்,

**ப⁴வேத்**

**नृपचोरतः अपि** = அரசர்கள், திருடர்கள் இவர்களிடமிருந்தும்,

**ந்ருபசோரதः அபி**

**अनर्थः** = தீங்கு உண்டாகும்,

**அனர்த²ः**

**तस्मात्** = ஆகையால்,

**தஸ்மாத்**

**द्रव्योद्यमः** = செல்வத்தை சேமிக்கும் முயற்சி,

**த்³ரவ்யோத்³யமः**

**व्यर्थः** = வீணானது.

**வ்யர்த²ः**

ஒருவன் மிகுந்த முயற்சியால் அளவுகடந்த செல்வத்தைச் சேர்த்து விட்டாலும் அது அவனுடைய மனைவி மக்கள் முதலியவர்களின் சொத்தாக ஆகிவிடும். அதனால் அவனுக்குச் சிறிது ஸுகங்கூடக் கிடைப்பதில்லை. மேலும் மிகுந்த பணமுள்ளவன், எங்கு அரசர்கள் தன்னுடைய செல்வத்தை வரி முதலியவைகள் மூலமாகப் பிடுங்கிக்கொண்டு போய்விடுவார்களோ, அல்லது திருடர்கள் கொள்ளையடித்துக்கொண்டு செல்வார்களோ என்று அஞ்சுகிறான். ஆதலால் பணமுள்ளவனுக்குச் சுகமேது? ஆகையால் செல்வத்தைச் சேமித்து வைப்பதற்காகச் செய்யும் முயற்சிகள் எல்லாம் பலனற்றவையே. **(47)**

## अन्यायमर्थ भाजं पश्यति भूपोऽध्वगामिनं चौरः ।
## पिशुनो व्यसनप्राप्तिं दायादानां गणः कलहम् ॥ ४८ ॥

**அந்யாயமர்த² பா⁴ஜம் பஶ்யதி பூ⁴போ(அ)த்⁴வகா³மினம் சௌரः ।**
**பிஶுனோ வ்யஸனப்ராப்திம் தா³யாதா³னாம் க³ணः கலஹம் ॥ 48 ॥**

**भूपः** = அரசன்,

**பூ⁴பः**

**अन्यायं** = நியாய வழியில் செல்லாத,

**அந்யாயம்**

**अर्थ भाजं** = பணக்காரனை,

**அர்த² பா⁴ஜம்**

**पश्यति** = பார்க்கிறான்,

**பஶ்யதி**

**अध्वगामिनं** = வழியில் செல்லும் அவனை,

**அத்⁴வகா³மினம்**

**चौरः** = திருடன்,

**சௌரः**

**पश्यति** = பார்க்கிறான்,

**பஶ்யதி**

**पिशुनः** = துஷ்டன்,

**பிஶுனः**

**व्यसनप्राप्तिं** = அவனுக்கு ஆபத்து விளைவதை,

**வ்யஸனப்ராப்திம்**

**पश्यति** = பார்க்கிறான்,

**பஶ்யதி**

**दायादानां गणः** = பங்காளிகளின் கூட்டம்,

**தா³யாதா³னாம் க³ண:**

**कलहं** = சண்டை ஏற்படுவதை,

**கலஹம்**

**पश्यति** = பார்க்கிறது.

**பஶ்யதி**

செல்வமுள்ளவன் நியாய நெறியில் செல்லாமலிருந்தால் அரசன் அவனுடைய செல்வத்தை அபகரித்துக்கொள்வதில் கவனம் செலுத்துகிறான். வழியில் செல்லும்போது கள்வன் அவனை வழி மறித்துப் பணத்தைப் பிடுங்கப்பார்க்கிறான். துஷ்டன் அப் பணக்காரனுக்குப் பல ஆபத்துக்களை உண்டாக்க விரும்புகிறான். பங்காளிகளின் கூட்டம் கலகத்தை விளைவிக்க விரும்புகிறது. இவ்வாறு பணக்காரன் பற்பல இன்னல்களுக்கு இலக்காகிறான். அதனால் பணத்தால் எங்ஙனம் இன்பமுண்டாகும்

**नास्ति ततः सुखलेशः सत्यम्**

**நாஸ்தி தத: ஸுக²லேஶ: ஸத்யம்**

என்று பஜகோவிந்தத்தில் ஸ்ரீ பகவத்பாதர் கூறியுள்ளார்.

**पातकभरैरनेकैरर्थं समुपार्जयन्ति राजानः ।**
**अश्वमतङ्गजहेतोः प्रतिक्षणं नाश्यते सोऽर्थः ॥ ४९ ॥**

**பாதகப⁴ரைரனேகைரர்த²ம் ஸமுபார்ஜயந்தி ராஜான: ।**
**அஶ்வமதங்க³ஜஹேதோ: ப்ரதிக்ஷணம் நாஶ்யதே ஸோ(அ)ர்த²: ॥ 49 ॥**

**राजानः** = அரசர்கள்,

**ராஜான:**

**अनेकैः** = பல,

**அனேகை:**

**पातकभरैः** = பாவச் செயல்களால்,

**பாதகப⁴ரை:**

**अर्थं** = செல்வத்தை,

**அர்த²ம்**

| | | |
|---|---|---|
| **समुपार्जयन्ति**<br>**ஸமுபார்ஜயந்தி** | = | சேமிக்கிருர்கள், |
| **सः अर्थः**<br>**ஸः அர்த²ः** | = | அந்தச் செல்வம், |
| **अश्वमतङ्गजहेतोः**<br>**அஶ்வமதங்க³ஜஹேதோः** | = | குதிரைகள் யாஜனகள், முதலியவைகளுக்காக, |
| **प्रतिक्षणं**<br>**ப்ரதிக்ஷணம்** | = | ஒவ்வொரு விநாடியும், |
| **नाश्यते**<br>**நாஶ்யதே** | = | அழிக்கப்படுகிறது. |

அரசர்கள் பல தீய வழிகளில் மிகுந்த செல்வத்தைச் சம்பாதிக்கிருர்கள். ஆஞல் அவர்கள் அவ்வாறு சம்பாதித்த பொருஜளக்கொண்டு பெரிய படையை அமைத்துக் காப்பாற்ற வேண்டியிருக்கிறது. அப் படையிலுள்ள யாஜனகள் குதிரைகள் முதலியவற்றைப் போஷிப்பதற்காக ஒவ்வொரு கணமும் மிகுந்த பொருள் செலவு செய்யப்படுகிறது. **(49)**

## राज्यान्तराभिगमनाद्रणभङ्गान्मन्त्रिभृत्यदोषाद्वा ।
## विषशस्त्रगुप्तघातान्मग्नाश्चिन्तार्णवे भूपाः ॥ ५० ॥

**ராஜ்யாந்தராபி⁴க³மநாத்³ ரண ப⁴ங்கா³ன் மந்த்ரி ப்⁴ருத்ய தோ³ஷாத்³வா ।**
**விஷ ஶஸ்த்ர கு³ப்த கா⁴தான் மக்³நாஶ் சிந்தார்ணவே பூ⁴பாः ॥ 50 ॥**

| | | |
|---|---|---|
| **भूपाः**<br>**பூ⁴பாः** | = | அரசர்கள், |
| **राज्यान्तर**<br>**ராஜ்யாந்தர** | = | பிற ராஜ்யத்துக்கு, |
| **अभिगमनात्**<br>**அபி⁴க³மஞத்** | = | செல்வதாலும், |
| **रणभङ्गात्**<br>**ரணப⁴ங்கா³த்** | = | போரில் முறியடிக்கப் படுவதாலும், |
| **वा**<br>**வா** | = | அல்லது, |
| **मन्त्रिभृत्यदोषात्**<br>**மந்த்ரிப்⁴ருத்யதோ³ஷாத்** | = | மந்திரிகள், வேலையாட்கள் இவர்களாலுண்டாகும் தோஷங்களாலும், |
| **विष**<br>**விஷ** | = | விஷம், |

| | | |
|---|---|---|
| **शस्त्र** ஶஸ்த்ர | = | ஆயுதம் முதலியவைகளால், |
| **गुप्तघातात्** கு³ப்தகா⁴தாத் | = | ரகசியமாகக் கொலை செய்தலாலும், |
| **चिन्तार्णवे** சிந்தார்ணவே | = | கவலை என்ற கடலில், |
| **मग्नाः** மக்³னா: | = | மூழ்கிவிடுகிறார்கள். |

மேலும் அரசர்கள் பலவிதமான கஷ்டங்களுக்கு உள்ளாகின்றனர். தங்களுடைய இராஜ்யங்களை இழந்து பிற ராஜ்யத்திற்குச் செல்லும்படி நேரிடுவதாலும் போரில் தோல்வியுறுதலாலும், மந்திரிகள், வேலையாட்கள் முதலியவர்களால் ஏற்படும் தோஷங்களாலும், விஷம், கத்தி முதலியவைகளால் இரகசியமாகக் கொல்லப்படுதலாலும் உண்டாகும் கவலைக்கடலில் அவர்கள் ஆழ்ந்து தத்தளிக்கிறார்கள். இதில்

**'राजान्तराभिगमनात्'**

**'ராஜாந்தராபி⁴க³மனாத்'**
என்ற பாடத்தில் பிற அரசர்களின் படையெடுப்பாலும் என்று பொருள் கொள்ளலாம்.

இவ்வாறு மனைவி மக்கள் செல்வம் முதலிய விஷயங்களால் உண்டாகும் துக்கங்களை ஒருவன் நன்கு சிந்தித்துப் பார்த்தால் அவனுக்கு அவற்றில் வைராக்யம் ஏற்படுவது திண்ணம். ஆகையால் விஷயங்களிலுள்ள தோஷங்களை எடுத்துக் காட்டுவது வைராக்யத்திற்குக் காரணமாக ஆகிறது. இதையே ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகள் விவேக சூடாமணி வ்யாக்யானத்தில் கீழ்க்கண்டவாறு விவரித்துக் கூறுகிறார்கள்: -

**आद्यन्तवत्व - बहुवित्तव्ययायाससाध्यत्व-- परिणतिविरसत्वादिदोषान् पुनः पुनः विषयेषु पश्यतः पुरुषस्य तत्र वैराग्यं नियतमिति विषयदोषदर्शनं वैराग्यहेतुरिति ॥**

**ஆத்³யந்தவத்வ - ப³ஹுவித்தவ்யயாயாஸஸாத்⁴யத்வ- பரிணதிவிரஸத்வாதி³தோ³ஷான் புன: புன: விஷயேஷு பஶ்யத: புருஷஸ்ய தத்ர வைராக்³யம் நியதமிதி விஷயதோ³ஷத³ர்ஶனம் வைராக்³யஹேதுரிதி ॥**

## ३. मनोनिन्दाप्रकरणम् ॥

### 3. மனோநிந்தா³ ப்ரகரணம் ॥

**(அவதாரிகை)** இந்தப் பிரகரணத்தில் மனத்தை பிசாசாகக் காட்டி அரக்கியுடன் சேர்ந்து அது படுத்தும் பாடுகளை விவரிக்கிறார்: -

**हसति कदाचिद्रौति भ्रान्तं सद्दश दिशो भ्रमति ।**
**हृष्टं कदापि रुष्टं शिष्टं दुष्टं च निन्दति स्तौति ॥ ५१ ॥**

**ஹஸதி கதா³சித்³ரௌதி ப்⁴ராந்தம் ஸத்³த³ஶ தி³ஶோ ப்⁴ரமதி ।**
**ஹ்ருஷ்டம் கதா³பி ருஷ்டம் ஶிஷ்டம் து³ஷ்டம் ச நிந்த³தி ஸ்தௌதி ॥ 51 ॥**

**किमपि द्वेष्टि सरोषं ह्यात्मानं श्लाघते कदाचिदपि ।**
**चित्तं पिशाचमभवद्राक्षस्या तृष्णया व्याप्तम् ॥ ५२ ॥**

**கிமபி த்³வேஷ்டி ஸரோஷம் ஹ்யாத்மானம் ஶ்லாக⁴தே கதா³சித³பி ।**
**சித்தம் பிஶாசமப⁴வத்³ராக்ஷஸ்யா த்ருஷ்ணயா வ்யாப்தம் ॥ 52 ॥**

| | | |
|---|---|---|
| **तृष्णया** த்ருஷ்ணயா | = | பேராசையாகிய, |
| **राक्षस्या** ராக்ஷஸ்யா | = | அரக்கியால், |
| **व्याप्तं** வ்யாப்தம் | = | வியாபிக்கப்பட்ட, |
| **चित्तं** சித்தம் | = | மனம், |
| **कदाचित्** கதா³சித் | = | ஒரு சமயம், |
| **हसति** ஹஸதி | = | சிரிக்கிறது, |
| **कदाचित्** கதா³சித் | = | ஒரு சமயம், |
| **रौति** ரௌதி | = | அழுகிறது, |
| **भ्रान्तं सत्** ப்⁴ராந்தம் ஸத் | = | பிரமையடைந்ததாக, |
| **दश** த³ஶ | = | பத்து, |
| **दिशः** தி³ஶ꞉ | = | திக்குகளிலும், |
| **भ्रमति** ப்⁴ரமதி | = | அலைகின்றது, |
| **कदापि** கதா³பி | = | ஒருசமயம், |

| | | |
|---|---|---|
| **हृष्टं**<br>**ஹ்ருஷ்டம்** | = | சந்தோஷ மடைந்ததாயும், |
| **कदापि**<br>**கதா³பி** | = | ஒருசமயம், |
| **रुष्टं**<br>**ருஷ்டம்** | = | கோபமடைந்ததாகவும், |
| **शिष्टं**<br>**ஶிஷ்டம்** | = | நல்ல ஸ்வபாவமுள்ளதாகவும், |
| **दुष्टं च**<br>**து³ஷ்டம் ச** | = | கெட்ட ஸ்வபாவமுள்ளதாகவும், |
| **निन्दति**<br>**நிந்த³தி** | = | சிலவற்றை இகழ்கிறது. |
| **स्तौति**<br>**ஸ்தௌதி** | = | சிலவற்றைப் புகழ்கிறது, |
| **किमपि**<br>**கிமபி** | = | எதையோ, |
| **सरोषं**<br>**ஸரோஷம்** | = | மிகுந்த சினத்துடன், |
| **द्वेष्टि**<br>**த்³வேஷ்டி** | = | வெறுக்கிறது, |
| **कदाचिदपि**<br>**கதா³சித³பி** | = | ஒரு சமயம், |
| **आत्मानं**<br>**ஆத்மானம்** | = | தன்னை, |
| **श्लाघते**<br>**ஶ்லாக⁴தே** | = | புகழ்ந்துகொள்கிறது, |
| **पिशाचमभवद्रात्**<br>**பிஶாசமப⁴வத்³ராத்** | = | இவ்வாறு மனம் பிசாசுத்தன்மை யுள்ளதாக ஆயிற்று. |

பேராசை என்பது ஒரு பெரிய அரக்கி. ஒருவனைப் பேய் பிடித்துக்கொண்டால் அவன் ஒருசமயம் சிரிக்கிறுன். மற்றொருசமயம் அழுகிறுன். எல்லா திக் திக்குகளி லும் அலைகிறுன் இவ்வாறு ஆசையென்ற அரக்கியால் பிடித்துக் கொள்ளப்பட்ட மனம் எண்ணம் கைகூடும்பொழுது சந்தோஷமடைகிறது. அப்பொழுது அது சிரிக்கிறது. இல்லாவிடில் அது அழுகிறது பிரமை கொண்டதாகப் பத்துத் திசைக ளிலும் அது அலைகின்றது. அது சில சமயத்தில் கோபமுள்ளதாகவும் பிறகு நல்ல ஸ்வபாவ முள்ள தாகவும் மாறுகின்றது. அது சிலவற்றை நிந்திக்கிறது. சிலவற் றைப் புகழ்கிறது. கோபமுள்ளதாகச் சில பொருள்களை வெறுக்கின்றது சில சமயத்

தில் அது தன்னையே புகழ்ந்துகொள்கிறது. இவ்வாறு மாறுபடும் தன்மை வாய்ந்த மனம் பிசாசாக ஆய்விட்டது. இதை அடக்குவது மிகவும் கடினம். **(52-53)**

(**அவதாரிகை**) மனத்தின் தோஷங்களைக் கூறுகிறார்: -

**दम्भाभिमानलोभैः कामक्रोधोरुमत्सरैश्चेतः ।**
**आकृष्यते समन्ताच्छ्वभिरिव पतितास्थिवन्मार्गे ॥ ५३ ॥**

**த³ம்பா⁴பி⁴மானலோபை⁴: காமக்ரோதோ⁴ருமத்ஸரைஶ்சேத: ।**
**ஆக்ருஷ்யதே ஸமந்தாச்ச்²வபி⁴ரிவ பதிதாஸ்தி²வன்மார்கே³ ॥ 53 ॥**

**मार्गे** **மார்கே³** = வழியில்,

**पतितास्थिवत्** **பதிதாஸ்தி²வத்** = விழுந்துகிடக்கின்ற, எலும்புத்துண்டுபோன்ற,

**चेतः** **சேத:** = மனம்,

**श्वभिरिव** **ஶ்வபி⁴ரிவ** = நாய்கள் போன்ற,

**दम्भाभिमानलोभैः** **த³ம்பா⁴பி⁴மானலோபை⁴:** = ஆடம்பரத்தாலும், நான் என்ற செருக்காலும், பேராசையாலும்,

**कामक्रोधोरुमत्सरैः** **காமக்ரோதோ⁴ருமத்ஸரை:** = காமம், கோபம், அஸூயை இவைகளாலும்,

**समन्तात्** **ஸமந்தாத்** = நான்கு பக்கங்களிலும்,

**आकृष्यते** **ஆக்ருஷ்யதே** = இழுக்கப்படுகிறது.

வழியில் விழுந்துகிடக்கும் எலும்புத் துண்டை பல நாய்கள் ஒன்றுகூடிக் கொண்டு பல திசைகளிலும் இழுப்பதுபோலவே இந்த மனம் பலவிதமான ஆடம்பரம், செருக்கு, பேராசை, காமம், கோபம், அஸூயை முதலிய பல துர்குணங்களாலும் அங்குமிங்கும் இழுக்கப்படுகின்றது. மனம் மிகவும் சஞ்சலமானது. நிலையற்றது. அதை அடக்குவது மிகவும் கடினமானது. **(53)**

(**அவதாரிகை**) மனதை அடக்க உபாயம் கூறுகிறார்: -

**तस्माच्छुद्धविरागो मनोभिलषितं त्यजेदर्थम् ।**
**तदनभिलषितं कुर्यान्निर्व्यापारं ततो भवति ॥ ५४ ॥**

**தஸ்மாச்சு²த்³த⁴விராகோ³ மனோபி⁴லஷிதம் த்யஜேத³ர்த²ம் ।**
**தத³னபி⁴லஷிதம் குர்யாந்நிர்வ்யாபாரம் ததோ ப⁴வதி ॥ 54 ॥**

| | | |
|---|---|---|
| **तस्मात्**<br>**தஸ்மாத்** | = | ஆகையால், |
| **शुद्धविरागः**<br>**ஶுத்³த⁴விராக³:** | = | தூய வைராக்யத்தை உடையவனாக, |
| **मनोभिलषितं**<br>**மனோபி⁴லஷிதம்** | = | மனம் விரும்பும், |
| **अर्थं**<br>**அர்த²ம்** | = | பொருளை, |
| **त्यजेत्**<br>**த்யஜேத்** | = | விட்டு விடவேண்டும், |
| **तत्**<br>**தத்** | = | அந்த மனதை, |
| **अनभिलषितं**<br>**அனபி⁴லஷிதம்** | = | ஆசையற்றதாக, |
| **कुर्यात्**<br>**குர்யாத்** | = | செய்யவேண்டும், |
| **ततः**<br>**தத:** | = | அதனால், |
| **निर्व्यापारं**<br>**நிர்வ்யாபாரம்** | = | செயலற்றதாக, |
| **भवति**<br>**ப⁴வதி** | = | ஆகிறது. |

ஒன்றிலும் பற்று இல்லாதவனாய், மனம் எந்த எந்தப் பொருளை விரும்புகிறதோ, அந்தப் அந்தப் பொருளை விட்டு விடவேண்டும். மனம் விரும்பிய பொருளைக் கொடுக்கக் கொடுக்க ஆசை வளருமே தவிற குறையாது. விரும்பிய பொருள் கிடையாததால் நிராசையாக ஆகும். இவ்விதமே அப்யாஸம் செய்து மனதில் ஆசையே தோன்றாமல் செய்ய வேண்டும். அப்பொழுது ஒருவித வியாபாரமும் இல்லாமல் மனம் அடங்கிவிடும். **(54)**

## ४. विषयनिग्रहप्रकरणम् ॥

### 4. விஷயநிக்³ரஹ ப்ரகரணம் ॥

**(அவதாரிகை)** விஷயங்களை விலக்குவதற்கு உபாயங்களை இந்த ப்ரகரணத்தில் கூறுகிறார். முதலில் தேஹத்தை ஓடமாகக் காட்டுகிறார்: -

**संसृतिपारावारे ह्यगाधविषयोदकेन सम्पूर्णे ।**
**नृशरीरमम्बुतरणं कर्मसमीरैरितस्ततश्चलति ॥ ५५ ॥**

**ஸம்ஸ்ருதிபாராவாரே ஹ்யகா³த⁴விஷயோத³கேன ஸம்பூர்ணே ।**
**ந்ருஶரீரமம்பு³தரணம் கர்மஸமீரைரிதஸ்ததஶ்சலதி ॥ 55 ॥**

| | | |
|---|---|---|
| **अगाध** அகா³த⁴ | = | மிகவும் ஆழமுள்ள, |
| **विषयोदकेन** விஷயோத³கேன | = | விஷயங்களாகிய தண்ணீரால், |
| **सम्पूर्णे** ஸம்பூர்ணே | = | நிறைந்த, |
| **संसृति** ஸம்ஸ்ருதி | = | ஸம்ஸாரமாகிய, |
| **पारावारे** பாராவாரே | = | ஸமுத்திரத்தில், |
| **नृशरीरं** ந்ருஶரீரம் | = | மானிட சரீரமாகிய, |
| **अम्बुतरणं** அம்பு³தரணம் | = | படகு, |
| **कर्मसमीरैः** கர்மஸமீரை: | = | முன்ஜன்ம வினைகளாகிய காற்றுக்களால், |
| **इतस्ततः** இதஸ்தத: | = | இங்குமங்கும், |
| **चलति** சலதி | = | சென்றுகொண்டிருக்கிறது. |

இவ்வுலக வாழ்க்கை என்பது ஒரு ஆழமான ஸமுத்திரம். இதில் விஷயங்கள் என்ற தண்ணீர் நிரம்பியுள்ளது. ஆதலால் இந்த ஸமுத்திரம் கடக்க முடியாததாக இருக்கிறது. இதைக் கடக்கும் பொருட்டு ஜீவனுக்கு முன் ஜன்மத்தின் வினைப்பயனாக மானிட சரீரம் கிடைத்துள்ளது. இந்தப் படகு முற்பிறவியின் வினைகளாகிய காற்றுக்களால் இங்கும் அங்கும் சென்று கொண்டிருக்கிறது. **(55)**

**(அவதாரிகை)** மானிட சரீரமாகிய ஓடம் கிடைத்தும் அக்கரை சேராததற்குக் காரணம் கூறுகிறார்: -

**छिद्रैर्नवभिरुपेतं जीवो नौकापतिर्महानलसः ।**
**छिद्राणामनिरोधाज्जलपरिपूर्णं पतत्यधः सततम् ॥ ५६ ॥**

**சி²த்³ரைர்னவபி⁴ருபேதம் ஜீவோ நௌகாபதிர்மஹானலஸ꞉ ।**
**சி²த்³ராணமநிரோதா⁴ஜ்ஜலபரிபூர்ண பதத்யத⁴꞉ ஸததம் ॥ 56 ॥**

**नवभि** = ஒன்பது,

**நவபி⁴**

**छिद्रै:** = ஓட்டைகளுடன்,

**சி²த்³ரை:**

**उपेतं** = கூடியது சரீர ஓடம்,

**உபேதம்**

**नौकापति:** = ஓடத்தின் யஜமானஞன,

**நௌகாபதி:**

**जीव:** = ஜீவன்,

**ஜீவ꞉**

**महान्** = பெரிய,

**மஹான்**

**अलस:** = சோம்பேறி,

**அலஸ꞉**

**छिद्राणां अनिरोधात्** = ஓட்டைகளை அடைக்காததால்,

**சி²த்³ராணம் அநிரோதா⁴த்**

**जलपरिपूर्ण** = ஜலம் நிறைந்ததாக சரீர ஓடம்,

**ஜலபரிபூர்ண**

**सततं** = எப்பொழுதும்,

**ஸததம்**

**अध:** = கீழே,

**அத⁴꞉**

**पतति** = செல்கிறது.

**பததி**

இந்த உடலில் கண்கள் 2, காதுகள் 2, மூக்குத்வாரங்கள் 2, வாய் 1, கீழே 2 ஆக 9 த்வாரங்கள் உள்ளன. இதன் யஜமானஞன ஜீவஞே பெரிய சோம்பேரியாக இருக்கிறுன். அக்கரை செல்வதற்காக கடலில் நாம் ஓடத்தில் ஏரி இருக்கும்பொழுது, அதில் அநேகம் துவாரங்கள் இருந்து, அவை அடைபடாமல், ஓடக்காரனும் சோம்பேரியாய் இருந்தால், நாம் அக்கரை சேரமுடியுமா? ஜலத்தில் மூழ்க வேண்டியதுதான். இதுபோல், சரீரத்திலுள்ள 9 துவாரங்களும் அடைபடாமல், இதில் கவனமில்லாமல் ஜீவனும் சோம்பேரியாக இருந்தால், எல்லா விஷயங்களும் இந்த துவாரங்களின் வழியாக உட்புகுந்து, மனதைக் கலக்கி விடும். அதஞல் பல தீய கார்யங்களைச்செய்து, புண்யத்தின் பயஞகக் கிடைத்த அரிய மானிடப் பிறவியைப் பாழாக்கிக்கொள்கிறுன். இதைவிடத் தாழ்ந்த பிறவியை அடைகிறுன். **(56)**

(**அவதாரிகை**) ஸம்ஸாரஸாகரம் தாண்ட உபாயம் கூறுகிறர்: -

**छिद्राणां तु निरोधात् सुखेन पारं परं याति ।**
**तस्मादिन्द्रियनिग्रहमृते न कश्चित्तरत्यनृतम् ॥ ५७ ॥**

**சி[2]த்[3]ராணும் து நிரோதா[4]த் ஸுகே[2]ன பாரம் பரம் யாதி ।**
**தஸ்மாதி[3]ந்த்[3]ரியநிக்[3]ரஹம்ருதே ந கஶ்சித்தரத்யந்ருதம் ॥ 57 ॥**

**तु** = ஆனுல்,
**து**
**छिद्राणां निरोधात्** = துவாரங்களை அடைப்பதனுல்,
**சி[2]த்[3]ராணும் நிரோதா[4]த்**
**सुखेन** = சுகமாக,
**ஸுகே[2]ன**
**परं पारं** = மறுகரையை,
**பரம் பாரம்**
**याति** = அடைகிறன்,
**யாதி**
**तस्मात्** = ஆகையால்,
**தஸ்மாத்**
**इन्द्रियनिग्रहमृते** = புலனடக்கவில்லையானுல்,
**இந்த்[3]ரியநிக்[3]ரஹம்ருதே**
**कश्चित्** = ஒருவனும்,
**கஶ்சித்**
**अनृतम्** = ஸம்ஸாரத்தை,
**அந்ருதம்**
**न तरति** = தாண்டுவதில்லை.
**ந தரதி**

ஸம்ஸாரமாகிய கடலைக் கடப்பதற்கு புலன்களை அடக்குவது மிகவும் இன்றியமையாத ஸாதனமாகும். புலன்களை வெளி விஷயங்களில் செல்லவிடாமல் தடுத்து அதன் அதன் நிலையில் இருக்கச்செய்வதுதான் புலனடக்கம் எனப்படும். இதற்கு மனதைக் கட்டுப்படுத்துவது அவசியமானது. இவ்வாறு புலனடக்கமுள்ள வன் மிகவும் எளிதாக இக்கடலைக் கடந்து மோக்ஷத்தை அடைகிறன். **(57)**

(**அவதாரிகை**) சப்தம் முதலான விஷயங்கள் இந்திரியங்களுடன் சேருவதால் உண்டாகும் துன்பங்களைக் கூறுகிறர்: -

**पश्यति परस्य युवतिं सकाममपि तन्मनोरथं कुरुते ।**
**ज्ञात्वैव तदप्राप्तिं व्यर्थं मनुजोऽतिपापभाग्भवति ॥ ५८ ॥**

**பஶ்யதி பரஸ்ய யுவதிம் ஸகாமமபி தன்மனோரத²ம் குருதே ।**
**ஜ்ஞாத்வைவ தத³ப்ராப்திம் வ்யர்த²ம் மனுஜோ(அ)திபாபபா⁴க்³ப⁴வதி ॥ 58 ॥**

**मनुजः** = மனிதன்,
**மனுஜः**
**परस्य** = பிறருடைய,
**பரஸ்ய**
**युवतिं** = இளமங்கையை,
**யுவதிம்**
**सकामं** = ஆசையுடன்,
**ஸகாமம்**
**पश्यति** = பார்க்கிறான்,
**பஶ்யதி**
**तन्मनोरथमपि** = அவளிடத்தில் விருப்பத்தையும்,
**தன்மனோரத²மபி**
**कुरुते** = கொள்கிறான்,
**குருதே**
**तदप्राप्तिं** = அவளை அடையமுடியாததை,
**தத³ப்ராப்திம்**
**ज्ञात्वैव** = அறிந்துகொண்டும்கூட,
**ஞாத்வைவ**
**व्यर्थं** = வீணாக,
**வ்யர்த²ம்**
**अतिपापभाक्** = மிகுந்த பாபத்தையே செய்தவனாக,
**அதிபாபபா⁴க்**
**भवति** = ஆகிறான்.
**ப⁴வதி**

காமம் என்பது ஒரு பெரிய சத்ரு இதனால் தூண்டப்பட்டு மனிதன் செய்யத் தகாத காரியங்களையும் செய்யத் துணிகிறான். காமத்தால் பிறர் மனைவியை ஆசையுடன் பார்க்கிறான். அவளை அடைவதற்கு விருப்பமும் கொள்கிறான். அவளை அடையமுடியாது என்று நிச்சயமாக அறிந்தும் வீணாகத் தீய எண்ணத்தினால் பாபத்தையே சம்பாதித்தவனாக ஆகிறான். **(58)**

(**அவதாரிகை**) கண்ணால் வரும் துன்பத்தைக் கூறிவிட்டு காதால் வரும் துன்பத்தைக் கூறுகிறார்: -

**पिशुनैः प्रकाममुदितां परस्य निन्दां शृणोति कर्णाभ्याम् ।**
**तेन परः किं म्रियते व्यर्थं मनुजोऽतिपापभाग्भवति ॥ ५९ ॥**

**பிஶுநை: ப்ரகாமமுதி³தாம் பரஸ்ய நிந்தா³ம் ஶ்ருணோதி கர்ணாப்⁴யாம் ।**
**தேந பர: கிம் ம்ரியதே வ்யர்த²ம் மனுஜோ(அ)திபாபபா⁴க்³ப⁴வதி ॥ 59 ॥**

**मनुजः** = மனிதன்,
**மனுஜ:**

**पिशुनैः** = கோட்சொல்லுகின்றவர்களால்,
**பிஶுநை:**

**प्रकामं** = மிகவும் சந்தோஷத்துடன்,
**ப்ரகாமம்**

**उदितां** = கூறப்பட்ட,
**உதி³தாம்**

**परस्य** = பிறருடைய,
**பரஸ்ய**

**निन्दां** = இகழை,
**நிந்தா³ம்**

**कर्णाभ्यां** = இருசெவிகளாலும்,
**கர்ணாப்⁴யாம்**

**शृणोति** = கேட்கிறான்,
**ஶ்ருணோதி**

**तेन** = அதனால்,
**தேந**

**परः** = மற்றவன்,
**பர:**

**म्रियते किं** = இறக்கிறானா என்ன?
**ம்ரியதே கிம்**

**मनुजः** = மனிதன்,
**மனுஜ:**

**व्यर्थं** = வீணாக,
**வ்யர்த²ம்**

**अतिपापभाक्** = பாபத்தைச் செய்கிறவனாக,
**அதிபாபபா⁴க்**

**भवति** = ஆகிறான்.
**ப⁴வதி**

முன்பு கண்களால் எவ்வாறு ஒரு மனிதன் பாபத்தை அடைகிறுன் என்று கூறப்பட்டுள்ளது. இங்கு செவிகள் எவ்வாறு பாபத்திற்குக் காரணமாகின்றன என்று காட்டப்படுகின்றது. துஷ்டர்கள் கோள் சொல்லுவதையே தங்களுடைய குறிக்கோ ளாகக் கொண்டு பெரியோர்களை இகழ்ந்து பேசுகின்றனர். அவ்வாறு கோட் சொல்லு கிறவர்களால் மிகவும் சந்தோஷத்துடன் கூறப்படும் நிந்தையான சொற்களை அகமகிழ்ச்சியுடன் செவி சாய்த்துக் கேட்கிறுன். அப்படிக் கேட்பதால் பெரியோர்க ளுக்கு என்ன நஷ்டம்? அவர்களுக்கு அதனுல் சாவு உண்டாகுமா? இல்லை. ஆனுல் அவ்வாறு கோள் சொல்லுகின்றவனுடைய வார்த்தைகளைக் கேட்கின்றவனுக்கே மிகுந்த பாபமுண்டாகிறது.

**'न केवलं यो महतोऽपभाषते शृणोति तस्मादपि सः स पापभाक्'**

**'ந கேவலம் யோ மஹதோ(அ)பபா⁴ஷதே ஶ்ருணோதி
தஸ்மாத³பி ஸ: ஸ பாபபா⁴க்'**

**अनृतं परापवादं रसना वदति प्रतिक्षणं तेन ।
परहा निर्लब्धा का व्यर्थ मनुजोऽतिपापभाग्भवति ॥ ६० ॥**

**அந்ருதம் பராபவாத³ம் ரஸனு வத³தி ப்ரதிக்ஷணம் தேன ।
பரஹா நிர்லப்³தா⁴ கா வ்யர்த² மனுஜோ(அ)திபாபபா⁴க்³ப⁴வதி ॥ 60 ॥**

| | | |
|---|---|---|
| **रसना** ரஸனு | = | நாக்கு, |
| **प्रतिक्षणं** ப்ரதிக்ஷணம் | = | ஒவ்வொருகணமும், |
| **अनृतं** அந்ருதம் | = | பொய்யையும், |
| **परापवादं** பராபவாத³ம் | = | பிறருடைய நிந்தையையும், |
| **वदति** வத³தி | = | பேசுகின்றது, |
| **तेन** தேன | = | அதனுல், |
| **का परहानिः** கா பரஹானி: | = | பிறருக்கு என்ன நஷ்டம், |
| **लब्धा** லப்³தா⁴ | = | கிடைத்தது? |
| **व्यर्थ** வ்யர்த² | = | வீணுக, |

| | | |
|---|---|---|
| **मनुजः**<br>**மனுஜ:** | = | மனிதன், |
| **अतिपापभाक् भवति**<br>**அதிபாபபா⁴க் ப⁴வதி** | = | மிகுந்த பாபத்திற்குப் பாத்திரனுக ஆகிறுன். |

நாக்கு ஒவ்வொரு நிமிஷமும் பொய் பேசுகிறது. பிறரைப் பற்றி இகழ்ந்து பேசுகிறது. இதனுல் பிறருக்கு யாதொரு தீங்கும் ஏற்படுவதில்லை. ஆனுல் இவ்வாறு இகழ்ந்து பேசுகிற மனிதனே மிகுந்த பாவத்திற்குள்ளாகிறுன். இதைத் தவிற பொய் சொல்கிறவனுக்கு வேறு ஒரு லாபமும் கிடையாது. **(60)**

**(அவதாரிகை)** ஸ்பர்ச ஸுகத்தைப் பற்றிக் கூறுகிறுர்: -

**विषयेन्द्रिययोर्योगे निमेषसमयेन यत्सुखं भवति।**
**विषये नष्टे दुःखं यावज्जीवं च तत्तयोर्मध्ये॥ ६१॥**

**விஷயேந்த்³ரியயோர்யோகே³ நிமேஷஸமயேன யத்ஸுக²ம் ப⁴வதி ।**
**விஷயே நஷ்டே து³:க²ம் யாவஜ்ஜீவம் ச தத்தயோர்மத்⁴யே ॥ 61 ॥**

**हेयमुपादेयं वा प्रविचार्य सुनिश्चितं तस्मात्।**
**अल्पसुखस्य त्यागादनल्पदुःखं जहाति सुधीः॥ ६२॥**

**ஹேயமுபாதே³யம் வா ப்ரவிசார்ய ஸுநிஶ்சிதம் தஸ்மாத் ।**
**அல்பஸுக²ஸ்ய த்யாகா³த³னல்பது³:க²ம் ஜஹாதி ஸுதீ⁴: ॥ 62 ॥**

| | | |
|---|---|---|
| **विषयेन्द्रिययोः**<br>**விஷயேந்த்³ரியயோ:** | = | விஷயங்களுக்கும் புலன்களுக்கும், |
| **योगे**<br>**யோகே³** | = | ஸம்பந்தம் ஏற்படும்பொழுது, |
| **निमेषसमयेन**<br>**நிமேஷஸமயேன** | = | ஒரு விநாடி நேரத்தில், |
| **यत्**<br>**யத்** | = | யாதொரு, |
| **सुखं**<br>**ஸுக²ம்** | = | இன்பம், |
| **भवति**<br>**ப⁴வதி** | = | உண்டாகிறதோ, |
| **तत्**<br>**தத்** | = | அந்த இன்பம், |

| | | |
|---|---|---|
| **विषये नष्टे**<br>**விஷயே நஷ்டே** | = | பொருள் நாசமடையும்பொழுது, |
| **यावज्जीवं च**<br>**யாவஜ்ஜீவம் ச** | = | உயிருள்ளவரையிலும், |
| **दुःखं**<br>**து³:க²ம்** | = | துன்பமாக, |
| **भवति**<br>**ப⁴வதி** | = | ஆய் விடுகின்றது, |
| **तस्मात्**<br>**தஸ்மாத்** | = | ஆகையால், |
| **तयोः मध्ये**<br>**தயோ: மத்⁴யே** | = | அவ்விரண்டுகளுக்குள், |
| **हेयं**<br>**ஹேயம்** | = | விடத்தகுந்ததையோ, |
| **उपादेयं वा**<br>**உபாதே³யம் வா** | = | ஏற்றுக்கொள்ளத்தக்கதையோ, |
| **सुनिश्चितं**<br>**ஸுநிஶ்சிதம்** | = | மிகவும் தீர்மானமாக, |
| **प्रविचार्य**<br>**ப்ரவிசார்ய** | = | நன்கு ஆலோசித்து, |
| **सुधीः**<br>**ஸுதீ⁴:** | = | புத்தியுள்ள மனிதன், |
| **अल्पसुखस्य**<br>**அல்பஸுக²ஸ்ய** | = | அற்ப சுகத்தினுடைய, |
| **त्यागात्**<br>**த்யாகா³த்** | = | தியாகத்தினல், |
| **अनल्पदुःखं**<br>**அனல்பது³:க²ம்** | = | மிகுந்த துன்பத்தை, |
| **जहाति**<br>**ஜஹாதி** | = | விட்டுவிடுகிறன். |

இந்திரியத்துக்கும் விஷயத்திற்கும் சேர்க்கை ஏற்படும் பொழுது ஒருக்ஷண நேரம் இன்பம் ஏற்படுகிறது. இது நீடித்து இருப்பதில்லை. இந்த விஷயம் நம்மை விட்டுப் பிரிந்து சென்றதும் இன்பம் போய்விடுகிறது. இதுமட்டுமா? விஷயம் பிரிந்து சென்றதாலும், இந்த ஸுகம் நீங்கியதாலும் துக்கம் ஏற்படுகிறது. இது நீடித்திருக்கிறது. விஷயத்தை நினைத்து நினைத்து வாழ்நாள் முழுவதும் துன்பப்படுகிறன். ஆகவே விஷய ஸுகத்தில் ஆசை, வெறுப்பு இவ்விரண்டிற்குள் எது விலக்கத்தக்கது, எது ஏற்றுக்கொள்ளத்தக்கது என்பதைத் தன் புத்தியால் உலக அனுபவங்களைக்கொண்டு

நன்கு விசாரித்துத் தீர்மானித்து, விஷயங்களில் ஆசைகொள்ளாமல் வெறுப்படைந்து, முதலில் வந்து சிறிதுநேரம் மட்டும் இருக்கும் விஷய ஸுகத்தை விலக்கிவிட்டால் பின்னுல் துக்கமே ஏற்படாது. அல்ப ஸுகத்தை த்யாகம் செய்வதால் அதிகமான துக்கத்தையும் வராமல் செய்துகொள்ளலாம். புத்திமான் இவ்விதம் தான் செய்வான்.

**'विषयेन्द्रियसंयोगाद्यत्तदग्रेऽमृतोपमम् ।**
**परिणामे विषमिव तत्सुखं राजसं स्मृतम्' ॥**

**'விஷயேந்த்³ரியஸம்யோகா³த்³யத்தத³க்³ரே(அ)ம்ருதோபமம் ।**
**பரிணாமே விஷமிவ தத்ஸுக²ம் ராஜஸம் ஸ்ம்ருதம்' ॥** (கீதை 18-38)

**'परीक्ष्य लोकान् ब्राह्मणो निर्वेदमायात्'**

**'பரீக்ஷ்ய லோகான் ப்³ராஹ்மணோ நிர்வேத³மாயாத்'** (முண்டகோபநிஷத்)

**धीवरदत्तमहामिषमश्नन्वैसारिणो म्रियते ।**
**तद्वद्विषयान्भुञ्जन्कलाकृष्टो नरः पतति ॥ ६३ ॥**

**தீ⁴வர த³த்த மஹாமிஷமஶ்னன் வைஸாரிணோ ம்ரியதே ।**
**தத்³வத்³ விஷயான் பு⁴ஞ்ஜன் கலாக்ருஷ்டோ நரः பததி ॥ 63 ॥**

**धीवर** = செம்படவனுல்,
**தீ⁴வர**
**दत्त** = கொடுக்கப்பட்ட,
**த³த்த**
**महामिषं** = பெரிய மாம்ஸத்துண்டை,
**மஹாமிஷம்**
**अश्नन्** = சாப்பிட்டுக்கொண்டு,
**அஶ்னன்**
**वैसारिणः** = மீன்,
**வைஸாரிணः**
**म्रियते** = உயிரை இழக்கின்றது,
**ம்ரியதே**
**तद्वत्** = அது போலவே,
**தத்³வத்**
**विषयान्** = சிற்றின்பங்களை,
**விஷயான்**
**भुञ्जन्** = அனுபவித்துக் கொண்டு,
**பு⁴ஞ்ஜன்**

**कालाकृष्टः** = காலனுல் இழுக்கப்பட்ட,

**காலாக்ருஷ்ட:**

**नरः** = மனிதன்,

**நர:**

**पतति** = வீழ்கிறுன்.

**பததி**

செம்படவன் மீனைப் பிடிப்பதற்காகத் தன்னுடைய தூண்டிலில் மாமிசத் துண்டை வைத்து அதைத் தண்ணீருக்குள் போடுகிறுன். அதைக் கண்டவுடன் மீன் அதனை அணுகி அதிலுள்ள மாமிசத்தை மிகுந்த மகிழ்ச்சியுடன் சாப்பிட ஆரம்பிக்கின்றது. அதனுல் அது தூண்டிலில் அகப்பட்டுக்கொண்டு செம்படவனுல் பிடித்துக் கொள்ளப்படுகிறது. இவ்வாறு விஷய சுகத்தின் ஆசையால் அம்மீன் தன்னுடைய உயிரையே இழக்கிறது. அதுபோலவே மனிதனும் பற்பல சிற்றின்பங்களை அனுபவித்துக்கொண்டு தன்னுடைய வாழ்க்கையின் இலக்ஷியத்தை மறந்துவிடுகிறுன். இதனுல் அவன் காலனுடைய வசத்தை அடைந்து தன்னையே நாசப்படுத்திக் கொண்டுவிடுகிறுன். அவன் தாழ்ந்த பிறவிகளில் விழுந்துவிடுகிறுன். அதனுல் அவனுக்கு உயர்ந்த சுகம் ஏற்படாமல் போய்விடுகிறது. **(63)**

**उरगग्रस्तार्धतनुर्भेकोऽश्नातीह मक्षिकाः शतशः ।**
**एवं गतायुरपि सन्विषयान् समुपार्जयत्यन्धः ॥ ६४ ॥**

**உரக³ க்³ரஸ்தார்த⁴ தனுர் பே⁴கோ(அ)ஶ்ஞதீஹ மக்ஷிகா: ஶதஶ: ।**
**ஏவம் க³தாயுரபி ஸன் விஷயான் ஸமுபார்ஜயத்யந்த⁴: ॥ 64 ॥**

**इह** = இவ்வுலகில்,

**இஹ**

**उरग** = பாம்பினுல்,

**உரக³**

**ग्रस्त** = விழுங்கப்பட்ட,

**க்³ரஸ்த**

**अर्धतनुः** = பாதி உடலை உடைய,

**அர்த⁴தனு:**

**भेकः** = தவளை,

**பே⁴க:**

**शतशः** = நூற்றுக்கணக்கான,

**ஶதஶ:**

**मक्षिकाः** = ஈக்களை,

**மக்ஷிகா:**

| | | |
|---|---|---|
| **अश्नाति**<br>**அச்னாதி** | = | தின்கின்றது, |
| **एवं**<br>**ஏவம்** | = | இம்மாதிரியாகவே, |
| **अन्धः**<br>**அந்த⁴꞉** | = | பகுத்தறிவற்றவன், |
| **गतायुः अपि सन्**<br>**க³தாயு꞉ அபி ஸன்** | = | தன் ஆயுள் சென்றுகொண்டே இருந்தாலும், |
| **विषयान्**<br>**விஷயான்** | = | விஷய சுகங்களையே, |
| **समुपार्जयति**<br>**ஸமுபார்ஜயதி** | = | சம்பாதிக்கிறான். |

ஒரு பாம்பு ஒரு தவளையைப் பிடித்து விழுங்கிக் கொண்டிருக்கிறது. அத் தவளையின் பாதி உடல் பாம்பின் வாய்க்குள் சென்று விட்டது. அப்பொழுது கூட அது தனக்கெதிரில் பறக்கின்ற ஈக்களை நூற்றுக்கணக்காகத் தின்று கொண்டிருக் கிறது. விஷயங்களை அனுபவிக்கும் பொழுது அது தன்னுடைய உயிர் போய்க் கொண்டிருப்பதைக்கூட எண்ணுவதில்லை அதுபோலவே பகுத்தறிவற்ற மனிதன் விஷய சுகங்களிலேயே பற்றுள்ளவனாக இருக்கிறான். ஒவ்வொரு நாளும் அவனு டைய உயிர் போய்க் கொண்டே இருக்கிறது. அவன் யமனுடைய வாயில் அகப் பட்டுக்கொண்டு விடுகிறான். அவ்வாறு இருந்தும் அவன் அதைப் பொருட்படுத்து வதில்லை. அவன் விஷய சுகங்களையே நாடுகிறான். **(64)**

## ५. मनोनिग्रहप्रकरणम् ॥

### 5. மனோநிக்³ரஹ ப்ரகரணம் ॥

**(அவதாரிகை)** மனத்தை அடக்குவதற்கு உபாயங்களைக் கூறுகிறார்: -

**स्वीयोद्गमतोयवहा सागरमुपयाति नीचमार्गेण ।**
**सा चेदुद्गम एव स्थिरा सती किं न याति वार्धित्वम् ॥ ६५ ॥**

**ஸ்வீயோத்³க³ம தோயவஹா ஸாக³ரமுபயாதி நீசமார்கே³ண ।**
**ஸா சேது³த்³க³ம ஏவ ஸ்தி²ரா ஸதீ கிம் ந யாதி வார்தி⁴த்வம் ॥ 65 ॥**

| | | |
|---|---|---|
| **स्वीयोद्गमतोयवहा**<br>**ஸ்வீயோத்³க³ம தோயவஹா** | = | தான் உற்பத்தியாகுமிடத்திலிருந்து பெருகும் நதி, |
| **नीचमार्गेण**<br>**நீசமார்கே³ண** | = | பள்ளத்தாக்கின் வழியாக, |

| | | |
|---|---|---|
| **सागरं** | = | சமுத்திரத்தை, |
| **ஸாக³ரம்** | | |
| **उपयाति** | = | அடைகிறது, |
| **உபயாதி** | | |
| **सा** | = | அது, |
| **ஸா** | | |
| **उद्गमे एव** | = | உண்டாகுமிடத்திலேயே, |
| **உத்³க³மே ஏவ** | | |
| **स्थिरा सती चेत्** | = | நிலையாக நீடித்திருக்குமாகில், |
| **ஸ்தி²ரா ஸதீ சேத்** | | |
| **वार्धित्वं** | = | சமுத்திரத்தின் தன்மையை, |
| **வார்தி⁴த்வம்** | | |
| **किं न याति** | = | ஏன் அடையாது? |
| **கிம் ந யாதி** | | |

ஒரு நதி மலையிலிருந்து கிளம்பிக் கீழ் நோக்கி ஓடுகின்றது. அதன் தண்ணீர் பள்ளத்தாக்குகளின் வழியாகச் சென்று ஸமுத்திரத்தில் போய் கலக்கிறது. ஆனால் அவ்வாறு அந்நீரை ஓடவிடாமல் தடுத்து அங்கேயே தேக்கி விட்டால் அதுவே ஒரு பெரிய ஸமுத்திரமாகி விடுகிறது. **(65)**

**एवं मनः स्वहेतुं विचारयत्सुस्थिरं भवेदन्तः ।**
**न बहिर्वोदेति तदा किं नात्मत्वं स्वयं याति ॥ ६६ ॥**

**ஏவம் மனः ஸ்வஹேதும் விசாரயத்ஸுஸ்தி²ரம் ப⁴வேத³ந்தः ।**
**ந ப³ஹிர்வோதே³தி ததா³ கிம் நாத்மத்வம் ஸ்வயம் யாதி ॥ 66 ॥**

| | | |
|---|---|---|
| **एवं** | = | இம்மாதிரி, |
| **ஏவம்** | | |
| **मनः** | = | மனம், |
| **மனः** | | |
| **स्वहेतुं** | = | தன்னுடைய காரணத்தை, |
| **ஸ்வஹேதும்** | | |
| **विचारयत्** | = | நன்கு விசாரணை செய்துகொண்டு, |
| **விசாரயத்** | | |
| **अन्तः** | = | உள்ளேயே, |
| **அந்தः** | | |
| **सुस्थिरं भवेत्** | = | நிலைபெற்று இருந்தால், |
| **ஸுஸ்தி²ரம் ப⁴வேத்** | | |

**बहिर्व नोदेति** = வெளியே செல்லாமலுமிருந்தால்,

**ப3ஹிர்வ நோதே3தி**

**तदा** = அப்பொழுது,

**ததா3**

**स्वयं** = தானே,

**ஸ்வயம்**

**आत्मत्वं** = ஆத்மாவின் தன்மையை,

**ஆத்மத்வம்**

**किं न याति** = ஏன் அடையாது?

**கிம் ந யாதி**

தண்ணீர் தன்னுடைய உத்பத்தி ஸ்தானத்திலிருந்து கீழ் நோக்கிச் செல்லுவது போல மனதும் தன் உத்பத்தி ஸ்தானமாகிய ஆத்மாவை விட்டுவிட்டு வெளி விஷயங்களை நோக்கிச் செல்கிறது. அவ்வாறு அதை வெளியே செல்ல விடாமல் தடுத்து தனக்குள்ளேயே நிலையாக இருக்கும்படி செய்து விட்டால், நதியே ஸமுத்திர மாக ஆவதுபோல் மனதும் ஆத்மாவின் தன்மையை அடைந்துவிடும். **(66)**

**(அவதாரிகை)** வைராக்யத்தால் மனதில் ஸத்வகுணம் மேலிடுவதை திருஷ் டாந்தத்தால் விளக்குகிறார்: -

**वर्षास्वम्भःप्रचयात् कूपे गुरुनिर्झरे पयः क्षारम् ।**
**ग्रीष्मेणैव तु शुष्के माधुर्य भजति तत्राम्भः ॥ ६७ ॥**

**வர்ஷாஸ்வம்ப4: ப்ரசயாத் கூபே கு3ரு நிர்ஜ2ரே பய: க்ஷாரம் ।**
**க்3ரீஷ்மேணைவ து ஶுஷ்கே மாது4ர்ய ப4ஜதி தத்ராம்ப4: ॥ 67 ॥**

**वर्षासु** = மழைகாலத்தில்,

**வர்ஷாஸு**

**आम्भःप्रचयात्** = தண்ணீர் பெருக்கால்,

**ஆம்ப4:ப்ரசயாத்**

**गुरुनिर्झरे** = ஊற்று அதிகமாக உள்ள,

**கு3ரு நிர்ஜ2ரே**

**कूपे** = கிணற்றில்,

**கூபே**

**पयः** = தண்ணீர்,

**பய:**

**क्षारं** = உப்பாக இருக்கிறது,

**க்ஷாரம்**

| | | |
|---|---|---|
| **तु**<br>**து** | = | ஆனால், |
| **ग्रीष्मेणैव**<br>**க்³ரீஷ்மேணைவ** | = | கோடையினாலேயே, |
| **शुष्के**<br>**ஶுஷ்கே** | = | வற்றும்பொழுது, |
| **तत्र**<br>**தத்ர** | = | அதில், |
| **अम्भः**<br>**அம்ப⁴꞉** | = | தண்ணீர், |
| **माधुर्य भजति**<br>**மாது⁴ர்ய ப⁴ஜதி** | = | இனிய சுவையை அடைகிறது. |

மழை காலத்தில் அதிகமாக மழை பெய்கிறது. அதனால் எல்லா இடங்களிலும் தண்ணீர் நிரம்பிவிடுகிறது. கிணற்றிலும் ஊற்றுப் பெருகுகிறது. இதனால் கிணற்றின் ஜலம் உவர்ப்பாக மாறிவிடுகிறது. ஆனால் கோடை காலத்தில் ஜலம் வற்ற ஆரம்பிக்கிறது. அப்பொழுது கிணற்றுத் தண்ணீர் இனிய சுவையை அடைகிறது. **(67)**

**तद्वद्विषयोद्रिक्तं तमः प्रधानं मनः कलुषम् ।**
**तस्मिन्विरागशुष्के शनकैराविर्भवेत्सत्वम् ॥ ६८ ॥**

**தத்³வத்³விஷயோத்³ரிக்தம் தம꞉ ப்ரதா⁴னம் மன꞉ கலுஷம் ।**
**தஸ்மின்விராக³ஶுஷ்கே ஶனகைராவிர்ப⁴வேத்ஸத்வம் ॥ 68 ॥**

| | | |
|---|---|---|
| **तद्वत्**<br>**தத்³வத்** | = | அது போலவே, |
| **बिषयोद्रिक्तं**<br>**பி³ஷயோத்³ரிக்தம்** | = | விஷயங்களில் ஈடுபட்ட, |
| **मनः**<br>**மன꞉** | = | மனம், |
| **कलुषं**<br>**கலுஷம்** | = | கலக்கமடைந்து, |
| **तमः प्रधानं**<br>**தம꞉ ப்ரதா⁴னம்** | = | தமோ குணத்தையே முக்கியமாகக்கொண்டதாக ஆகிறது, |
| **तस्मिन् विरागशुष्के**<br>**தஸ்மின் விராக³ஶுஷ்கே** | = | அது வைராக்யத்தால் வரண்டுபோகும் பொழுது, |

**शनकैः** = மெதுவாக,

**ஶனகை:**

**सत्वं** = ஸத்வகுணம்,

**ஸத்வம்**

**आविर्भवेत्** = மேலிடும்.

**ஆவிர்ப⁴வேத்**

அதுபோலவே பற்பல விஷயங்களில் ஈடுபடுவதால் மனதில் அநேக எண்ணங்கள் வந்து குடிகொள்கின்றன. அதனுல் மனம் கலங்கி தமோகுணம் நிறைந்ததாக ஆகிவிடுகின்றது. ஆனுல் ஒருவன் விஷயங்களில் வெறுப்படைந்து வைராக்யத்தை அடைந்தால் மனதில் குடிகொண்டுள்ள தமோகுணம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து பின்னர் ரஜோகுணமும் குறைந்துபோய் கடைசியாக ஸத்வகுணம் மேலிடுகின்றது. **(68)**

(**அவதாரிகை**) மனத்தால் ஏற்படும் துன்பத்தைக் கூறுகிறுர்: -

**यं विषयमपि लषित्वा धावति बाह्येन्द्रियद्वारा ।**
**तस्याप्राप्तौ खिद्यति तथा यथा स्वं गतं किंचित् ॥ ६९ ॥**

**யம் விஷயமபி லஷித்வா தா⁴வதி பா³ஹ்யேந்த்³ரிய த்³வாரா ।**
**தஸ்யாப்ராப்தௌ கி²த்³யதி ததா² யதா² ஸ்வம் க³தம் கிஞ்சித் ॥ 69 ॥**

**यं विषयमपि** = எந்த விஷயத்தையும்,

**யம் விஷயமபி**

**लषित्वा** = விரும்பி,

**லஷித்வா**

**बाह्येन्द्रियद्वारा** = வெளிப்பொறிகளின் மூலமாக,

**பா³ஹ்யேந்த்³ரிய த்³வாரா**

**धावति** = மனம் ஓடுகின்றது,

**தா⁴வதி**

**यथा** = எவ்வாறு,

**யதா²**

**गतं** = இழந்த,

**க³தம்**

**किंचित्** = சிறிது,

**கிஞ்சித்**

**स्वं** = செல்வத்தைக் குறித்து வருந்துகிறுனே,

**ஸ்வம்**

**तथा** = அவ்வாறு,

**ததா²**

**तस्य अप्राप्तौ** = அந்த விஷயம் கிடைக்காதபொழுது,

**தஸ்ய அப்ராப்தௌ**

**खिद्यति** = வருந்துகிறது.

**கி²த்³யதி**

மனம் விஷயங்களை விரும்பிக் கண் காது முதலிய பொறிகளின் வழியாக அவைகளை அடைவதற்கு வெளியில் ஓடுகிறது. ஆனுல் அப்பொருள் கிடைக்கா விடில், தன் ஸ்வல்ப பணத்தை இழந்த மனிதன் வருந்துவதுபோல் மனமும் மிகவும் வருத்தம் அடைகிறது. தான் விரும்பிய பொருள் கிட்டாதபொழுது தன்னிடம் இருக்கும் பொருளை இழந்ததுபோல் எண்ணித் துன்புறுகிறது. மேலும் இழந்த பொருள் சிறிதாயினும் வருத்தம் அதிகமாக ஏற்படுவது போல மனமும் கிட்டாத பொருளில் ஆசைகொண்டு அதிகத் துன்பத்தை அனுபவிக்கிறது. **(69)**

**नगनगरदुर्गदुर्गमसरितः परितः परिभ्रमच्चेतः ।**
**यदि नो लभते विषयं विषयन्त्रितमिव खिन्नमायाति ॥ ७० ॥**

**நக³நக³ரது³ர்க³து³ர்க³மஸரிதஃ பரிதஃ பரிப்⁴ரமச்சேதஃ ।**
**யதி³ நோ லப⁴தே விஷயம் விஷயந்த்ரிதமிவ கி²ன்னமாயாதி ॥ 70 ॥**

**चेतः** = மனம்,

**சேதஃ**

**नग** = மலை,

**நக³**

**नगर** = பட்டணம்,

**நக³ர**

**दुर्ग** = கோட்டை,

**து³ர்க³**

**दुर्गम** = போகமுடியாத,

**து³ர்க³ம**

**सरितः** = ஆறுகள் ஆகிய இடங்களில்,

**ஸரிதஃ**

**परितः** = சுற்றிலும்,

**பரிதஃ**

**परिभ्रमत्** = திரிந்துகொண்டு,

**பரிப்⁴ரமத்**

**विषयं** = பொருளை,

**விஷயம்**

**यदि नो लभते** = அடையாவிட்டால்,

**யதி3 நோ லப4தே**

**विषयन्त्रितं इव** = விஷத்திஞல் அடக்கப்பட்டதுபோல,

**விஷயந்த்ரிதம் இவ**

**खिन्नं** = வருத்தத்தை அடைந்து,

**கி2ன்னம்**

**आयाति** = திரும்பி விடுகிறது.

**ஆயாதி**

மனம் விஷயத்தை நாடி எல்லா இடங்களிலும் அலைந்து திரிகின்றது. அது மலைகளிலும் பட்டணங்களிலும் நுழைய முடியாத கோட்டைகளிலும் மற்றும் இறங்க முடியாத ஆறுகளிலும் பொருள்களை நாடி அலைகின்றது. அந்தப் பொருள் அதற்குக் கிடைக்காவிடில் அது விஷத்திஞல் கட்டுப்பட்டதுபோலத் திரும்பி விடுகிறது. **(70)**

(**அவதாரிகை**) மனதை நிலை நிறுத்துவது கடினமென்கிருர்: -

**तुम्बीफ्लं जलान्तर्बलादधः क्षिप्तमप्युपैत्यूर्ध्वम् ।**
**तद्वन्मनः स्वरूपे निहितं यत्नाद्बहिर्याति ॥ ७१ ॥**

**தும்பீ3ப2லம் ஜலாந்தர் ப3லாத3த4: க்ஷிப்தமப்யுபைத்யூர்த்4வம் ।**
**தத்3வன் மன: ஸ்வரூபே நிஹிதம் யத்நாத் 3ப3ஹிர் யாதி ॥ 71 ॥**

**तुम्बीफलं** = உலர்ந்த சுரைப்பழம்,

**தும்பீ3ப2லம்**

**जलान्तः** = தண்ணீருக்குள்,

**ஜலாந்த:**

**अधः** = கீழே,

**அத4:**

**बलात्** = பலமாக,

**ப3லாத்**

**क्षिप्तं अपि** = எறியப்பட்டாலும்கூட,

**க்ஷிப்தம் அபி**

**ऊर्ध्वं** = மேலே,

**ஊர்த்4வம்**

**उपैति** = வந்துவிடுகிறது,

**உபைதி**

**तद्वत्** = அதுபோலவே,

**தத்3வத்**

| | | |
|---|---|---|
| **मनः** | = | மனம், |
| **மன:** | | |
| **स्वरूपे** | = | ஆத்மாவினிடம், |
| **ஸ்வரூபே** | | |
| **यत्नात्** | = | முயற்சியுடன், |
| **யத்னத்** | | |
| **निहितं** | = | வைக்கப்பட்டாலும், |
| **நிஹிதம்** | | |
| **बहिः** | = | வெளியே, |
| **ப³ஹி:** | | |
| **याति** | = | சென்று விடுகிறது. |
| **யாதி** | | |

மனதை அடக்கி பரம் பொருளிடத்தில் நிலைக்கச் செய்வது மிகவும் கடினம். நன்றாக உலர்ந்துபோன ஒரு சுரைக்காயை எடுத்து அதை முழு பலத்துடன் தண்ணீருக்குள் அடிவரை போகும்படி எறிந்தாலும் அது அங்கு இருப்பதில்லை. அது விரைவில் மேலே வந்து விடுகின்றது. அது போலவே ஒருவன் எவ்வளவு சிரமப்பட்டு மனதை வெளி விஷயங்களில் செல்ல விடாமல் தடுத்து தன் ஸ்வரூபத்தில் நிலைக்கும்படியாகச் செய்தபோதிலும் அது அங்கிருந்து வேகமாக வெளியே சென்று விடுகின்றது. அதை அடக்குவது காற்றை அடக்குவதுபோல் மிகவும் கடினமானது. **(71)**

**(அவதாரிகை)** விஷயங்கள் வினைப்பயன் என்பதைக் கூறுகிறார்: -

**इह वा पूर्वभवे वा स्वकर्मणैवार्जितं फलं यद्यत् ।**
**शुभमशुभं वा तत्तद्भोगोऽप्यप्रार्थितो भवति ॥ ७२ ॥**

**இஹ வா பூர்வ ப⁴வே வா ஸ்வகர்மணைவார்ஜிதம் ப²லம் யத்³யத் ।**
**ஶுப⁴மஶுப⁴ம் வா தத்தத்³போ⁴கோ³(அ)ப்யப்ரார்தி²தோ ப⁴வதி ॥ 72 ॥**

| | | |
|---|---|---|
| **इह वा** | = | இப்பிறவியிலோ, |
| **இஹ வா** | | |
| **पूर्वभवे वा** | = | அல்லது முற்பிறவியிலோ, |
| **பூர்வ ப⁴வே வா** | | |
| **स्वकर्मणा एव** | = | தன்னுடைய வினையினாலேயே, |
| **ஸ்வகர்மணா ஏவ** | | |
| **यत् यत्** | = | எந்தெந்த, |
| **யத் யத்** | | |
| **फलं** | = | பலன், |
| **ப²லம்** | | |

| | | |
|---|---|---|
| आर्जितं<br>ஆர்ஜிதம் | = | சம்பாதிக்கப்பட்டிருக்கிறதோ, |
| शुभं वा<br>ஶுப⁴ம் வா | = | நல்லதாயினும், |
| अशुभं वा<br>அஶுப⁴ம் வா | = | தீயதாயினும், |
| तत् तत्<br>தத் தத் | = | அந்தந்தப் பலனின், |
| भोगः अपि<br>போ⁴க³꞉ அபி | = | அனுபவமும், |
| अप्रार्थितः<br>அப்ரார்தி²த꞉ | = | விரும்பப்படாமலேயே, |
| भवति<br>ப⁴வதி | = | ஏற்படுகிறது. |

ஒவ்வொருவனும் தான் செய்த வினையினுடைய பலனை அனுபவித்தே தீர வேண்டும் ஒருவன் இப்பிறவியிலாவது அல்லது முற்பிறவியிலாவது நல்ல கர்மாக்களைச் செய்திருந்தால் அதன் பயனாக அவனுக்குச் சுபம் ஏற்படுகின்றது. அது போலவே ஒருவன் தீய கார்யங்களைச் செய்திருந்தால் அதன் பயனாக அவன் துன்பங்களையே அனுபவிக்கிறான். ஆனால் ஒருவனும் தனக்குத் துன்பம் நேரிட வேண்டுமென்று கோருவது இல்லை. அவ்வாறு இருப்பினும் தீய கார்யங்களின் பயனாகக் கட்டாயம் துன்பம் ஏற்படுகிறது. இதைத் தடுக்க முடிவதில்லை. இது போலவே நல்வினை இருந்தால் அதன் பயனாக நல்ல விஷயங்களும் இன்பமும் கட்டாயம் ஏற்படும். நல்வினை இல்லாவிட்டால் எவ்வளவு முயற்சித்தும் இன்பம் கிட்டாது. ஆகவே விஷயத்தால் ஏற்படும் இன்பம் வினைப்பயனாக இருக்க, அதைத்தேடி அலைந்து வீணாக ஏன் சிரமப்படவேண்டும்? **(72)**

**(அவதாரிகை)** மனத்தை அடக்க வைராக்யத்தையே உபாயமாகக் கூறுகிறார்: -

**चेतःपशुमशुभपथं प्रधावमानं निराकर्तुम् ।**
**वैराग्यमेकमुचितं गलकाष्ठं निर्मितं धात्रा ॥ ७३ ॥**

**சேத꞉பஶுமஶுப⁴பத²ம் ப்ரதா⁴வமானம் நிராகர்தும் ।**
**வைராக்³யமேகமுசிதம் க³லகாஷ்ட²ம் நிர்மிதம் தா⁴த்ரா ॥ 73 ॥**

| | | |
|---|---|---|
| अशुभपथं<br>அஶுப⁴பத²ம் | = | தீயவழியில், |
| प्रधावमानं<br>ப்ரதா⁴வமானம் | = | வேகமாக ஓடிக்கொண்டிருக்கும், |

**चेतःपशुं** = மனதாகிய மிருகத்தை,

**சேதːபஶும்**

**निराकर्तुं** = தடுப்பதற்கு,

**நிராகர்தும்**

**धात्रा** = பிரம்மதேவரால்,

**தா⁴த்ரா**

**वैराग्यं** = பற்றின்மை என்ற,

**வைராக்³யம்**

**एकं** = ஒரு,

**ஏகம்**

**अचितं** = தகுதிவாய்ந்த,

**அசிதம்**

**गलकाष्ठं** = கழுத்துக் கட்டை,

**க³லகாஷ்ட²ம்**

**निर्मितं** = ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது.

**நிர்மிதம்**

மனம் என்பது கட்டுக்கடங்காத ஒரு பசு. மதங் கொண்ட அப்பசு தன்னிஷ்டப்படி அலைந்து திரிகின்றது. மாடு மேய்ப்பவன் அதை அடக்கிவைப்பதற்காக அதனுடைய கழுத்தில் ஒரு பெரும் கட்டையைக் கட்டிவிடுகிறுன். அதனுல் அது கட்டுப்பட்டு தன் இஷ்டப்படி ஓடமுடியாமல் அடங்கிவிடுகின்றது. அதுபோலவே பிரம்மதேவர் மனம் என்ற பசுவைக் கட்டுப்படுத்த பற்றின்மை என்ற கழுத்துக் கட்டை ஒன்றை ஏற்படுத்தியிருக்கிறுர். வைராக்யமுள்ளவனுடைய மனம் கட்டுப்பட்டு பரம்பொருளிடத்தில் ஈடுபடும் என்பது இதன் பொருள். **(73)**

**(அவதாரிகை)** விஷயமில்லாமலேயே இன்பம் ஏற்படுமென்று கூறுகிறுர்: -

**निद्रावसरे यत्सुखमेतत्किं विषयजं यस्मात् ।**
**न हि चेन्द्रियप्रदेशावस्थानं चेतसो निद्रा ॥ ७४ ॥**

**நித்³ராவஸரே யத்ஸுக²மேதத் கிம் விஷயஜம் யஸ்மாத் ।**
**ந ஹி சேந்த்³ரிய ப்ரதே³ஶாவஸ்தா²னம் சேதஸோ நித்³ரா ॥ 74 ॥**

**निद्रावसरे** = துயிலுங்காலத்தில்,

**நித்³ராவஸரே**

**यत्** = எந்த,

**யத்**

**सुखं** = சுகம், ஏற்படுகின்றதோ,

**ஸுக²ம்**

एतत् = இது,

ஏதத்

विषयजं किं = பொருள்களின் ஸம்பந்தத்தால் உண்டாகிறதா என்ன?

விஷயஜம் கிம்

यस्मात् = ஏனெனில்,

யஸ்மாத்

चेतसः = மனதின்,

சேதஸ꞉

इन्द्रियप्रदेशावस्थानं = இந்திரியங்களினிடத்தில் நிலைத்திருக்கும் நிலை,

இந்த்³ரியப்ரதே³ஶாவஸ்தா²னம்

नहि निद्रा = தூக்கமாகாது அல்லவா?

நஹி நித்³ரா

அயர்ந்து தூங்கும்பொழுது துக்கக் கலப்பு இல்லாத ஓர் ஆனந்தம் எல்லோருக்கும் ஏற்படுகிறது. விழித்துக் கொண்டவுடன் "நான் ஸுகமாகத் தூங்கினேன்" என்று கூறுவதால் தூக்கத்தில் ஸுகம் இருப்பது நிச்சயமாகத் தெரிகிறது இது விஷயத்தால் ஏற்பட்டதல்ல இந்திரியங்கள் விஷயங்களுடன் சேர்ந்து மனதும் சேர்ந்திருக்குமானால் அது தூக்கமாகாது. ஜாக்ரதவஸ்தைதான். தூக்கத்தில் இந்திரியம், மனம் எல்லாம் அடங்கிவிடுகிறது ஆகவே விஷயமில்லாமலே ஸுகம் ஏற்படுவதால் எதற்காக விஷயத்தைத்தேடி அலையவேண்டும்? இந்த நித்ரா ஸுகம் ஸ்வரூபானந்தம். அப்பொழுது அக்ஞானம் மூடியிருப்பதால் ஸ்பஷ்டமாகத் தெரியவில்லை. ஞானிகளுக்கு எப்பொழுதும் இது ஸ்பஷ்டமாகத்தெரியும். **(74)**

**(அவதாரிகை)** மனம் அடங்குவதை திருஷ்டாந்தத்தால் விளக்குகிறார்: -

**अद्वारतुङ्गकुड्ये गृहेऽवरुद्धो यथा व्याघ्रः ।**
**बहुनिर्गमप्रयत्नैः श्रान्तस्तिष्ठति पतञ्श्वसंश्च तथा ॥ ७५ ॥**

**அத்³வாரதுங்க³குட்³யே க்³ருஹே(அ)வருத்³தோ⁴ யதா² வ்யாக்⁴ர꞉ ।**
**ப³ஹுநிர்க³மப்ரயத்நை꞉ ஶ்ராந்தஸ்திஷ்ட²தி பதஞ்ஶ்வஸம்ஶ்ச ததா² ॥ 75 ॥**

**सर्वेन्द्रियावरोधादुद्योगशतैरनिर्गमं वीक्ष्य ।**
**शान्तं तिष्ठति चेतो निरुद्यमत्वं तदा याति ॥ ७६ ॥**

**ஸர்வேந்த்³ரியாவரோதா⁴து³த்³யோக³ஶதைரநிர்க³மம் வீக்ஷ்ய ।**
**ஶாந்தம் திஷ்ட²தி சேதோ நிருத்³யமத்வம் ததா³ யாதி ॥ 76 ॥**

अद्वार = வாயில் இல்லாமல்,

அத்³வார

| | | |
|---|---|---|
| **तुङ्ग**<br>**துங்க3** | = | உயரமான, |
| **कुड्ये**<br>**குட்3யே** | = | சுவர்களையுடைய, |
| **गृहे**<br>**க்3ருஹே** | = | வீட்டில், |
| **अवरुद्धः**<br>**அவருத்3த4:** | = | அடைத்துவைக்கப்பட்ட, |
| **व्याघ्रः**<br>**வ்யாக்4ர:** | = | புலி, |
| **यथा**<br>**யதா2** | = | எப்படி, |
| **बहुनिर्गमप्रयत्नैः**<br>**ப3ஹுநிர்க3மப்ரயத்னை:** | = | வெளியே செல்வதற்காகச் செய்யப்பட்ட பல முயற்சிகளால், |
| **श्रान्तः**<br>**ஶ்ராந்த:** | = | களைத்துப்போய், |
| **पतन्**<br>**பதன்** | = | கீழே விழுந்துகொண்டும், |
| **श्वसन् च**<br>**ஶ்வஸன் ச** | = | பெருமூச்சுவிட்டுக்கொண்டும், |
| **तिष्ठति**<br>**திஷ்ட2தி** | = | இருக்கிறதோ, |
| **तथा**<br>**ததா2** | = | அப்படியே, |
| **सर्वेन्द्रियावरोधात्**<br>**ஸர்வேந்த்3ரியாவரோதா4த்** | = | எல்லாப் பொறிகளையும் அடக்குவதால், |
| **उद्योगशतैः**<br>**உத்3யோக3ஶதை:** | = | வெளியே செல்லமுடியாமலிருப்பதை, |
| **वीक्ष्य**<br>**வீக்ஷ்ய** | = | பார்த்து, |
| **चेतः**<br>**சேத:** | = | மனம், |
| **शान्तं**<br>**ஶாந்தம்** | = | அமைதியாக, |
| **तिष्ठति**<br>**திஷ்ட2தி** | = | நிற்கிறது, |

| | | |
|---|---|---|
| **तदा**<br>**ததா³** | = | அப்பொழுது, |
| **निरुद्यमत्वं**<br>**நிருத்³யமத்வம்** | = | முயற்சியற்ற தன்மையை, |
| **याति**<br>**யாதி** | = | அடைகிறது. |

ஒரு புலியை ஒரு வீட்டிற்குள் அடைத்துவைத்து அவ்வீட்டின் வாயில்களை யெல்லாம் நன்றாக மூடிவைத்து விட்டால் அப்புலி வெளியே செல்லமுடியாது. மேலும் வீட்டின் சுவர்கள் மிகவும் உயரமாகவும் பலமுள்ளதாகவும் இருந்தால் அப்புலி அதைத் தாண்டிச்செல்ல இயலாமல் தவித்து நிற்கும் அப்புலி அங்கிருந்து வெளியே செல்லுவதற்குத் தன்னாலியன்ற எல்லா முயற்சிகளையும் செய்து பார்க்கும் கடைசியில் அது வெளியே செல்லமுடியாமல் ஓய்வுபெற்று பெருமூச்சு விட்டுக்கொண்டு அவ்வீட்டிற்குள்ளேயே அமைதியாக இருந்துவிடும். அதுபோலவே மனமும் கட்டுக்கடங்காத ஒரு புலியைப்போன்றது. அது இந்திரியங்கள் என்ற வாயில்களின் வழியாக வெளியே செல்லுகின்றது. அவ்வாறு அதை வெளியேற விடாமல் தடுப்பதற்கு முதலில் ஐம்பொறிகளாகிய வாசல்களை அடைத்துவிட வேண்டும். அதாவது இந்திரிய நிக்ரஹம் மனோநிக்ரஹத்திற்கு முதல்படியாகும். அவ்வாறு அதை வெளியே செல்லவிடாமல் தடுத்துவிட்டால் அது பலவாறு முயற்சித்தும் வெளியே செல்ல முடியாமல் கடைசியில் செயலற்றதாக அமைதி யை யடைந்து தன்னிடத்திலேயே அசையாமல் நின்றுவிடுகின்றது. **(75-76)**

**(அவதாரிகை)** மனோநிக்ரஹத்திற்கு மற்றும் பல உபாயங்களைக் கூறுகிறார்: -

**प्राणस्पन्दनिरोधात्सत्सङ्गाद्वासनात्यागात् ।**
**हरिचरणभक्तियोगान्मनः स्ववेगं जहाति शनैः ॥ ७७ ॥**

**ப்ராணஸ்பந்த³நிரோதா⁴த்ஸத்ஸங்கா³த்³வாஸனாத்யாகா³த் ।**
**ஹரிசரணப⁴க்தியோகா³ன்மன: ஸ்வவேக³ம் ஜஹாதி ஶனை: ॥ 77 ॥**

| | | |
|---|---|---|
| **प्राणस्पन्दनिरोधात्**<br>**ப்ராணஸ்பந்த³நிரோதா⁴த்** | = | பிராணவாயுவின் போக்கைக்கட்டுப் படுத்துவதாலும், |
| **सत्सङ्गात्**<br>**ஸத்ஸங்கா³த்** | = | சான்றோர்களின் சேர்க்கையாலும், |
| **वासनात्यागात्**<br>**வாஸனாத்யாகா³த்** | = | விஷய வாஸனைகளை விட்டுவிடுவதாலும், |
| **हरिचरणभक्तियोगात्**<br>**ஹரிசரணப⁴க்தியோகா³த்** | = | விஷ்ணுவின் பாதகமலங்களில் பக்தி வைப்பதாலும், |

| | | |
|---|---|---|
| **मनः** | = | மனம், |
| **மன:** | | |
| **शनैः** | = | கொஞ்சம் கொஞ்சமாக, |
| **ஶனை:** | | |
| **स्ववेगं** | = | தன் வேகத்தை, |
| **ஸ்வவேக³ம்** | | |
| **जहाति** | = | விட்டு விடுகிறது. |
| **ஜஹாதி** | | |

பிராணாயாமம் செய்வதாலும், நல்லவர்களுடைய ஸஹவாஸத்தாலும், விஷயவாஸனைகளையும் ஸங்கல்பங்களையும் குறைத்துக் கொள்வதாலும், பகவானுடைய பாதாரவிந்தங்களில் பக்தி வைப்பதாலும் காலக்ரமத்தில் மனம் தன்னுடைய வேகத்தை இழந்து விடுகிறது. **(77)**

## ६. वैराग्यप्रकरणम् ॥

### 6. வைராக்³ய ப்ரகரணம் ॥

**(அவதாரிகை)** முன் பிரகரணத்தில் கூறப்பட்ட மனோநிக்ரஹத்திற்குக் காரணமான வைராக்யத்தை இதில் விவரிக்கிறார். விஷயங்களில் அபிமானம் கொள்ளாதிருந்தால் மனம் அடங்கிவிடும் என்கிறார்: -

**परगृह गृहिणीपुत्रद्रविणानामागमे विनाशे वा ।**
**कथिते हर्षविषादौ किं वा स्यातां क्षणं स्थातुः ॥ ७८ ॥**

**பரக்³ருஹ க்³ருஹிணீபுத்ரத்³ரவிணாநாமாக³மே விநாஶே வா ।**
**கதி²தே ஹர்ஷவிஷாதௌ³ கிம் வா ஸ்யாதாம் க்ஷணம் ஸ்தா²து: ॥ 78 ॥**

| | | |
|---|---|---|
| **पर** | = | பிறருடைய, |
| **பர** | | |
| **गृह** | = | வீட்டில், |
| **க்³ருஹ** | | |
| **गृहिणी** | = | மனைவி, |
| **க்³ருஹிணீ** | | |
| **पुत्र** | = | புதல்வன், |
| **புத்ர** | | |
| **द्रविणानां** | = | செல்வம் இவற்றின், |
| **த்³ரவிணானம்** | | |
| **आगमे** | = | வருகையோ, |
| **ஆக³மே** | | |

| | | |
|---|---|---|
| **वा** | = | அல்லது, |
| **வா** | | |
| **विनाशे** | = | அழிவோ, |
| **விநாஶே** | | |
| **कथिते** | = | சொல்லப்பட்ட பொழுது, |
| **கதி²தே** | | |
| **क्षणं** | = | சிறிதுநேரம், |
| **க்ஷணம்** | | |
| **स्थातुः** | = | அங்கு இருக்கின்ற விருந்தாளிக்கு, |
| **ஸ்தா²து:** | | |
| **हर्षविषादौ** | = | அதனுல் இன்பதுன்பங்கள், |
| **ஹர்ஷவிஷாதௌ³** | | |
| **किं वा स्यातां** | = | ஏற்படுமா என்ன? |
| **கிம் வா ஸ்யாதாம்** | | |

பிறருடைய வீட்டில் விருந்தாளியாகச் சிறிது நேரம் மட்டும் இருக்கும் பொழுது அங்கு மஜனவி, மக்கள், செல்வம் முதலியவற்றின் மேன்மையோ அல்லது தாழ்வோ ஏற்பட்டால் அதனுல் இன்பமோ அல்லது துன்பமோ அந்த விருந்தாளிக்கு ஏற்படுமா? அவற்றில் தனது என்ற அபிமானம் இல்லாததால் அவ்விருந்தினனுக்கு அவற்றுல் சிறிதளவு இன்ப துன்பங்கூட உண்டாகாது அல்லவா?

**दैवात्स्थितं गतं वा यं कंचिद्विषयमीड्यमल्पं वा ।**
**नो तुष्यन्न च सीदन्वीक्ष्य गृहेष्वतिथिवन्निवसेत् ॥ ७९ ॥**

**தை³வாத்ஸ்தி²தம் க³தம் வா யம் கஞ்சித்³விஷயமீட்³யமல்பம் வா ।**
**நோ துஷ்யன்ன ச ஸீத³ன்வீக்ஷ்ய க்³ருஹேஷ்வதிதி²வந்நிவஸேத் ॥ 79 ॥**

| | | |
|---|---|---|
| **दैवात्** | = | விதிவசமாக, |
| **தை³வாத்** | | |
| **स्थितं** | = | இருக்கின்றதோ, |
| **ஸ்தி²தம்** | | |
| **वा** | = | அல்லது, |
| **வா** | | |
| **गतं** | = | சென்றதோ, |
| **க³தம்** | | |
| **ईड्यं** | = | போற்றத்தக்கதோ, |
| **ஈட்³யம்** | | |
| **वा** | = | அல்லது, |
| **வா** | | |

| | | |
|---|---|---|
| **अल्पं**<br>**அல்பம்** | = | குறைந்ததோஆன, |
| **यं कञ्चित् विषयं**<br>**யம் கஞ்சித் விஷயம்** | = | எந்த ஒரு பொருளையும், |
| **वीक्ष्य**<br>**வீக்ஷ்ய** | = | பார்த்து, |
| **नो तुष्यन्न**<br>**நோ துஷ்யன்ன** | = | ஸந்தோஷத்தையடையாமலும், |
| **न च सीदन्**<br>**ந ச ஸீத³ன்** | = | வருத்தப்படாமலும், |
| **गृहेषु**<br>**க்³ருஹேஷு** | = | தன் வீட்டிலும், |
| **अतिथिवत्**<br>**அதிதி²வத்** | = | விருந்தாளிபோல, |
| **निवसेत्**<br>**நிவஸேத்** | = | வஸிக்கவேண்டும். |

அதுபோலவே இல்லறம் நடத்துகின்ற அறிவாளி தன் இல்லத்திலும் விருந்தாளியைப்போல் வஸித்து வர வேண்டும். அப்பொழுது அவன் தெய்வச் செயலால் நிகழும் நன்மை தீமைகளாலும் செல்வங்களின் அபிவிருத்தி, நாசம் முதலியவற்றுலும் ஸந்தோஷத்தையோ, வருத்தத்தையோ அடையக்கூடாது. அவன் விஷயங்களில் பற்று அற்றவனுக இருந்துகொண்டு தனது இல்லறவாழ்வை நடத்தி வர வேண்டும். **(79)**

**ममताभिमानशून्यो विषयेषु पराङ्मुखः पुरुषः ।**
**तिष्ठन्नपि निजसदने न बाध्यते कर्मभिः क्वापि ॥ ८० ॥**

**மமதாபி⁴மானஶூன்யோ விஷயேஷு பராங்முக²ः புருஷः ।**
**திஷ்ட²ன்னபி நிஜஸத³னே ந பா³த்⁴யதே கர்மபி⁴ः க்வாபி ॥ 80 ॥**

| | | |
|---|---|---|
| **ममताभिमानशून्यः**<br>**மமதாபி⁴மானஶூன்யः** | = | என்னுடையது என்ற அபிமான மற்றவனுயும், |
| **विषयेषु**<br>**விஷயேஷு** | = | பொருள்களில், |
| **पराङ्मुखः**<br>**பராங்முக²ः** | = | பற்றற்றவனுயுமுள்ள, |
| **पुरुषः**<br>**புருஷः** | = | மனிதன், |

| | | |
|---|---|---|
| निजसदने<br>நிஜஸத³னே | = | தன்னுடைய வீட்டில், |
| तिष्ठन् अपि<br>திஷ்ட²ன் அபி | = | இருந்துகொண்டிருந்தாலும்கூட, |
| क्वापि<br>க்வாபி | = | எங்கும், |
| कर्मभिः<br>கர்மபி⁴: | = | வினைகளால், |
| न बाध्यते<br>ந பா³த்⁴யதே | = | பாதிக்கப்படுவதில்லை. |

ஒருவன் “நான்” என்றும் “என்னுடையது" என்றும் அபிமானமற்றவனுயும், இன்ப துன்பங்களில் விருப்பு வெறுப்பற்றவனுயும் தன்னுடைய இல்வாழ்வைச் செவ்வனே நடத்திவரவேண்டும். அவ்வாறு அவன் உண்மையான வைராக்யத்துடன் தன் கடமையை நன்கு அனுஷ்டித்து வந்தால் அவன் ஒருகாலத்திலும் கர்ம பந்தத்திற்கு உள்ளாகமாட்டான். **(80)**

**कुत्राप्यरण्यदेशे सुनीलतृणवालुकोपचिते ।**
**शीतलतरुतल भूमौ सुखं शयानस्य पुरुषस्य ॥ ८१ ॥**

**குத்ராப்யரண்யதே³ஶே ஸுநீலத்ருணவாலுகோபசிதே ।**
**ஶீதலதருதல பூ⁴மௌ ஸுக²ம் ஶயானஸ்ய புருஷஸ்ய ॥ 81 ॥**

**तरवः पत्रफलाढ्याः सुगन्धिशीतानिलाः परितः ।**
**कलकूजितवरविहगाः सरितो मित्राणि किं न स्युः ॥ ८२ ॥**

**தரவ: பத்ரப²லாட்⁴யா: ஸுக³ந்தி⁴ஶீதானிலா: பரித: ।**
**கலகூஜிதவரவிஹகா³: ஸரிதோ மித்ராணி கிம் ந ஸ்யு: ॥ 82 ॥**

| | | |
|---|---|---|
| कुत्रापि अरण्यदेशे<br>குத்ராபி அரண்யதே³ஶே | = | ஏதாவது ஒரு காட்டுப்பிரதேசத்தில், |
| सुनीलतृण<br>ஸுநீலத்ருண | = | மிகவும் பச்சையான புல்லும், |
| वालुकोपचिते<br>வாலுகோபசிதே | = | மணலும் நிறைந்த, |
| शीतल<br>ஶீதலத | = | குளிர்ச்சியான, |
| तरुतल<br>தருதல | = | மரத்தினடியிலுள்ள, |

भूमौ = பூமியில்,
பூ⁴மௌ
सुखं = சுகமாக,
ஸுக²ம்
शयानस्य = தூங்குகின்ற,
ஶயானஸ்ய
पुरुषस्य = மனிதனுக்கு,
புருஷஸ்ய
परित: = சுற்றிலும்,
பரித:
पत्रफलाढ्या: = நன்கு தழைத்துப் பழங்கள் நிறைந்த,
பத்ரப²லாட்⁴யா:
तरव: = மரங்களும்,
தரவ:
सुगन्धि = நறுமணமுள்ள,
ஸுக³ந்தி⁴
शीतानिला: = குளிர்ந்த காற்றுக்களும்,
ஶீதானிலா:
कलकूजित = இனிமையாகக் கூவுகின்ற,
கலகூஜித
वरविहगा: = சிறந்த பக்ஷிகளும்,
வரவிஹகா³:
सरित: = ஆறுகளும்,
ஸரித:
मित्राणि = நண்பர்களாக,
மித்ராணி
किं न स्यु: = ஆகமாட்டார்களா?
கிம் ந ஸ்யு:

வைராக்ய முள்ளவனுக்கு இயற்கையன்னையே சிறந்த உபசாரத்தையளிக்கிறுள். அவன் வனத்தில் பசுமையான புற்களும் மணல்களும் நிரம்பிய மரத்தின் அடியில் படுத்துச் சுகமாகத் தூங்குகின்றுன். அவ்வனத்திலுள்ள ஆறுகளும் மரங்களும், பறவைகளும், குளிர்ந்த காற்றும் அவனுக்கு உற்ற நண்பர்களாக விளங்குகின்றன. நன்றுகத் தழைத்துப் பழுத்து நிற்கும் மரங்கள் நிழலைக்கொடுத்து அவனது பசியைத் தீர்க்கின்றன. குளிர்ந்த காற்று அவனது சிரமத்தைப் போக்குகிறது இனிமையாகக் கூவுகின்ற பறவைகள் அவனுடைய மனதை மகிழ்விக்கின்றன. நீர் நிரம்பிய ஆறுகள் அவனது தாகத்தைத் தணிக்கின்றன. பற்றற்றவனுக்கு எங்கும் இன்பமே ஏற்படும். ஆகவே இயற்கையில் அமைந்துள்ள இவற்றுலேயே சரீர யாத்திரை

நடப்பதால் பின்னால் துன்பத்தைத் தரும் விஷயங்களை அபிமானத்துடன் சேகரித்து வைத்துக் கொள்ள வேண்டாம். **(81-82)**

## वैराग्यभाग्यभाजः प्रसन्नमनसो निराशस्य ।
## अप्रार्थितफलभोक्तुः पुंसो जन्मनि कृतार्थतेह स्यात् ॥ ८३ ॥

**வைராக்³யபா⁴க்³யபா⁴ஜ: ப்ரஸன்னமனஸோ நிராஶஸ்ய ।**
**அப்ரார்தி²தப²லபோ⁴க்து: பும்ஸோ ஜன்மனி க்ருதார்த²தேஹ ஸ்யாத் ॥ 83 ॥**

**वैराग्यभाग्यभाजः** = வைராக்யமாகிய பாக்யத்தையடைந்தவனையும்,
**வைராக்³யபா⁴க்³யபா⁴ஜ:**
**प्रसन्नमनसः** = சந்தோஷமடைந்த மனதை உடையவனையும்,
**ப்ரஸன்னமனஸ:**
**निराशस्य** = ஒன்றையும் எதிர்பாராதவனையும்,
**நிராஶஸ்ய**
**अप्रार्थित** = வேண்டிக்கொள்ளாமலே கிடைத்த,
**அப்ரார்தி²த**
**फल** = பலனை,
**ப²ல**
**भोक्तुः** = அனுபவிக்கின்றவனுமாகிய,
**போ⁴க்து:**
**पुंसः** = மனிதனுக்கு,
**பும்ஸ:**
**इह जन्मनि** = இப்பிறவியிலேயே,
**இஹ ஜன்மனி**
**कृतार्थता** = வாழ்க்கைப்பயன்,
**க்ருதார்த²தா**
**स्यात्** = ஏற்படுகின்றது.
**ஸ்யாத்**

வைராக்யமாகிய பெரும் பாக்யத்தை அடைந்தவனையும், மிகத் தூய மனதை உடையவனையும், எதிர்பார்க்காமலேயே நிகழ்கின்ற இன்ப துன்பங்களை மன மாறு பாடு இல்லாமல் அனுபவிக்கின்றவனுமான மனிதனுடைய வாழ்க்கை இகத்திலே யே பயனுள்ளதாகிறது. அவ்வாறு ஸம நிலையை எய்திய மனிதன் இம்மையிலேயே மோக்ஷ சுகத்தை அனுபவிக்கிறான். **(83)**

## द्रव्यं पल्लवतश्च्युतं यदि भवेत्क्वापि प्रमादात्तदा
## शोकायाथ तदर्पितं श्रुतवते तोषाय च श्रेयसे ।

**स्वातन्त्र्याद्विषयाः प्रयान्ति यदमी शोकाय ते स्युश्चिरं**
**संत्यक्ताः स्वयमेव चेत्सुखमयं निःश्रेयसं तन्वते ॥ ८४ ॥**

**த்3ரவ்யம் பல்லவதஶ்ச்யுதம் யதி3 ப4வேத்க்வாபி ப்ரமாதா3த்ததா3**
**ஶோகாயாத2 தத3ர்பிதம் ஶ்ருதவதே தோஷாய ச ஶ்ரேயஸே ।**
**ஸ்வாதந்த்ர்யாத்3விஷயாः ப்ரயாந்தி யத3மீ ஶோகாய தே ஸ்யுஶ்சிரம்**
**ஸந்த்யக்தாः ஸ்வயமேவ சேத்ஸுக2மயம் நிःஶ்ரேயஸம் தன்வதே ॥ 84 ॥**

| | | |
|---|---|---|
| **द्रव्यं**<br>**த்3ரவ்யம்** | = | பழுத்துக் கனிந்த ஒரு கனி, |
| **पल्लवत:**<br>**பல்லவத:** | = | காம்பிலிருந்து, |
| **च्युतं**<br>**ச்யுதம்** | = | நழுவி, |
| **प्रमादात्**<br>**ப்ரமாதா3த்** | = | கவனக்குறைவால், |
| **क्वापि**<br>**க்வாபி** | = | எங்காவது, |
| **यदि भवेत्**<br>**யதி3 ப4வேத்** | = | போய்விடுமானல், |
| **तदा**<br>**ததா3** | = | அப்பொழுது, |
| **शोकाया**<br>**ஶோகாயா** | = | மனவருத்தத்திற்காகவே (ஆகிறது), |
| **अथ**<br>**அத2** | = | அப்படியல்லாமல், |
| **तत्**<br>**தத்** | = | அது, |
| **श्रुतवते**<br>**ஶ்ருதவதே** | = | வேதங்களைக்கற்ற ஒருவனுக்கு, |
| **अर्पितं**<br>**அர்பிதம்** | = | கொடுக்கப்பட்டால், |
| **तोषाय**<br>**தோஷாய** | = | மகிழ்ச்சிக்காகவும், |
| **श्रेयसे च**<br>**ஶ்ரேயஸே ச** | = | (பின்னல்) நன்மைக்காகவும் (பயன்படுகிறது), |
| **अपि विषया:**<br>**அபி விஷயாः** | = | இந்த விஷயங்கள், |

| | | |
|---|---|---|
| **स्वातन्त्र्यात्** <br> **ஸ்வாதந்த்ர்யாத்** | = | தன்னிஷ்டப்படி, |
| **यत् प्रयान्ति** <br> **யத் ப்ரயாந்தி** | = | சென்றுவிடுமாஞல், |
| **ते** <br> **தே** | = | அவைகள், |
| **चिरं** <br> **சிரம்** | = | நீண்டகாலம், |
| **शोकाय** <br> **ஶோகாய** | = | துன்பத்தைத்தருவதாகவே, |
| **स्युः** <br> **ஸ்யு:** | = | இருக்கும், |
| **स्वयमेव** <br> **ஸ்வயமேவ** | = | தாஞகவே, |
| **संत्यक्ताः चेत्** <br> **ஸந்த்யக்தா: சேத்** | = | விடப்படுமாகில், |
| **सुखमयं** <br> **ஸுக²மயம்** | = | இன்பம் நிலவும், |
| **निःश्रेयसं** <br> **நி:ஶ்ரேயஸம்** | = | மோக்ஷத்தை, |
| **तन्वते** <br> **தன்வதே** | = | தருகின்றன. |

மரம் காய்த்துக் கனிந்து அந்தக் கனி காம்பிலிருந்து தாஞகவே கீழே விழுந்து உடையவனுக்குக் கிட்டாமல் போய்விட்டால் அது அவனுக்கு மிகுந்த மன வருத்தத்தை உண்டுபண்ணுகிறது. ஆஞல் அம்மரத்தின் சொந்தக்காரன் அக்கனியைத் தானே எடுத்து நன்கு கற்றுணர்ந்த ஒரு வேதியனுக்குக் கொடுத்து விட்டால் அது அவனுக்கு மிகுந்த சந்தோஷத்தைத் தருகிறது. அதஞல் அவனுக்கு நன்மையும் ஏற்படுகின்றது. அதுபோலவே ஒருவனிடமிருந்து விஷயங்கள் தாமாகவே விலகி விட்டால் அவன் அதஞல் நீண்டகாலம் துன்புறுகின்ருன். ஆஞல் அவைகளை அவன் தாஞகவே விலக்கிவிட்டால் அவன் நிரதிசயமான மோக்ஷ சுகத்தை அனுபவிக்கிருன். இதஞல் வைராக்ய நிலையை அடைந்தவன் பரிபூர்ணமான ஆனந்தத்தை அனுபவிக்கிருன் என்பது தெளிவாகிறது. **(84)**

**विस्मृत्यात्मनिवासमुत्कटभवाटव्यां चिरं पर्यटन्**

**संतापत्र यदीर्घदावदहनज्वालावलीव्याकुलः ।**

**वल्गन् फल्गुषु सुप्रदीप्तनयनश्चेतः कुरङ्गो बला-**
**दाशापाशवशीकृतोऽपि विषयव्याघ्रैर्मृषा हन्यते ॥ ८५ ॥**

**விஸ்ம்ருத்யாத்மநிவாஸமுத்கடப⁴வாடவ்யாம் சிரம் பர்யடன்**
**ஸந்தாபத்ர யதீ³ர்க⁴தா³வத³ஹனஜ்வாலாவலீவ்யாகுலः ।**
**வல்க³ன் ப²ல்கு³ஷு ஸுப்ரதீ³ப்தநயனஶ்வேதः குரங்கோ³ ப³லா-**
**தா³ஶா பாஶ வஶீக்ருதோ(அ)பி விஷய வ்யாக்⁴ரைர் ம்ருஷா ஹன்யதே**
**॥ 85 ॥**

| | | |
|---|---|---|
| **चेतः कुरङ्गः** **சேதः குரங்க³ः** | = | மனமாகிய மான், |
| **आत्मनिवासं** **ஆத்மநிவாஸம்** | = | தான் வசிக்குமிடமாகிய ஆத்மாவை, |
| **विस्मृत्य** **விஸ்ம்ருத்யா** | = | மறந்துவிட்டு, |
| **उत्कट** **உத்கட** | = | பெரிய, |
| **भवाटव्यां** **ப⁴வாடவ்யாம்** | = | பிறவியாகிய காட்டில், |
| **चिरं** **சிரம்** | = | நீண்டகாலம், |
| **पर्यटन्** **பர்யடன்** | = | சுற்றிக்கொண்டு, |
| **संतापत्रय** **ஸந்தாபத்ரய** | = | ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்ற மூன்றுவிதமான தாபங்களாகிய, |
| **दीर्घ** **தீ³ர்க⁴** | = | நீண்ட, |
| **दावदहन** **தா³வத³ஹன** | = | காட்டுத்தீயின், |
| **ज्वालावली** **ஜ்வாலாவலீ** | = | சுடர்களின் கூட்டங்களால், |
| **व्याकुलः** **வ்யாகுலः** | = | கலக்கத்தை அடைந்ததாய், |
| **फल्गुषु** **ப²ல்கு³ஷு** | = | அல்பமான பயன்களையுடைய விஷயங்களில், |
| **वल्गन्** **வல்க³ன்** | = | சுற்றிக்கொண்டு, |
| **सुप्रदीप्त** | = | நன்கு கொளுத்தப்பட்ட, |

**ஸுப்ரதீ³ப்த**
**नयन:** = கண்களை உடையதாய்,
**நயன:**
**बलात्** = பலாத்காரமாக,
**ப³லாத்**
**आशापाशवशीकृतोऽपि** = ஆசையென்ற கயறுகளால் கட்டப்பட்டதாயினும்,
**ஆஶாபாஶவஶீக்ருதோ(அ)பி**
**विषयव्याघ्रै:** = விஷயங்கள் என்ற புலிகளால்,
**விஷயவ்யாக்⁴ரைர்:**
**मृषा** = வீணுக,
**ம்ருஷா**
**हन्यते** = கொல்லப்படுகிறது.
**ஹன்யதே**

ஒரு மான் தன்னுடைய இருப்பிடத்தை மறந்து பெரிய காட்டில் அலைந்து கொண்டிருக்கிறது. அது போகும் வழியில் காட்டுத்தீ கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருக்கிறது. தெய்வச் செயலால் அதிலிருந்து தப்பித்துக் கொண்டு அது ஆகாரத்தைத் தேடிக்கொண்டு செல்கிறது. அப்பொழுது அது வேடர்களுடைய வலையில் சிக்கிக்கொள்கிறது. அது தன்னுடைய முயற்சியால் அதிலிருந்து தப்பித்துக்கொண்டு வெளியே செல்லும் பொழுது புலிகளால் பிடிக்கப்பட்டுக் கொல் லப்படுகின்றது. இதுபோல மனமும் தனது இருப்பிடமான ஆத்மாவை மறந்து பயங்கரமான பிறவி யென்னும் காட்டில் அலைகிறது. அங்கு ஆத்யாத்மிகம் முதலான மூன்றுவித தாபங்கள் மனதைக் கொளுத்துகின்றன அப்படி அப்படியிருந்தும் ஸார மில்லாத விஷயங்களில் ஆசைவைத்து, அந்த ஆசையினுலேயே கட்டுப்பட்டு விஷயங்களாலேயே நாசம் அடைகிறது. **(85)**

## ७. आत्मसिद्धिप्रकरणम्

### 7. ஆத்மஸித்³தி⁴ ப்ரகரணம்

**(அவதாரிகை)** ஆரம்பத்தில் முக்திக்கு ஸாதனமாகக் கூறப்பட்ட வைராக்யம், ஆத்மபோதம், பக்தி என்னும் இம்மூன்றில் முதலாவதான வைராக்யத்தை ஆறு ப்ரகரணங்களால் விரிவாகக்காட்டி இரண்டாவதான ஆத்மபோதத்தைப் பற்றி இனிக் கூறுகிறுர். தேஹாதி விலக்ஷணமான ஆத்மாவை உபதேசிக்கும் இப்பிரகரணத்தில் முதலில் குரு மஹிமையை வர்ணிக்கிறுர்: -

**उत्पन्नेऽपि विरागे विना प्रबोधं सुखं न स्यात् ।**
**स भवेद्गुरूपदेशात्तस्माद्गुरुमाश्रयेत् प्रथमम् ॥ ८६ ॥**

**உத்பன்னே(அ)பி விராகே³ வினா ப்ரபோ³த⁴ம் ஸுக²ம் ந ஸ்யாத் ।**
**ஸ ப⁴வேத்³கு³ரூபதே³ஶாத்தஸ்மாத்³கு³ருமாஶ்ரயேத் ப்ரத²மம் ॥ 86 ॥**

| | | |
|---|---|---|
| **विरागे उत्पन्ने अपि**<br>**விராகே3 உத்பன்னே அபி** | = | வைராக்யம் ஏற்பட்டாலும்கூட, |
| **प्रबोधं विना**<br>**ப்ரபோ3த4ம் விநா** | = | ஆத்மஞானமில்லாமல், |
| **सुखं**<br>**ஸுக2ம்** | = | பரிபூர்ணமான ஆனந்தம், |
| **न स्यात्**<br>**ந ஸ்யாத்** | = | உண்டாகாது, |
| **सः**<br>**ஸ:** | = | அந்த ஆத்மஞானம், |
| **गुरूपदेशात्**<br>**கு3ரூபதே3ஶாத்** | = | குருவினுடைய உபதேசத்தால் (தான்), |
| **भवेत्**<br>**ப4வேத்** | = | ஏற்படும், |
| **तस्मात्**<br>**தஸ்மாத்** | = | ஆகையால், |
| **प्रथमं**<br>**ப்ரத2மம்** | = | முதலில், |
| **गुरुं**<br>**கு3ரும்** | = | குருவை, |
| **आश्रयेत्**<br>**ஆஶ்ரயேத்** | = | அண்டவேண்டும். |

ஒருவனுக்கு பற்றற்ற நிலை ஏற்படினும் ஆத்மஞான முண்டாகாவிட்டால் அவனுக்கு இன்ப நிலை கிட்டாது.

**“ज्ञानादेव हि कैवल्यं”**

**“ஜ்ஞாநாதே3வ ஹி கைவல்யம்”**

என்று கூறப்பட்டுள்ளது. அந்த ஆத்மஞானம் குருவின் உபதேசத்தாலேயே ஏற்படுகின்றது. ஆதலால் தீவ்ர வைராக்யமுள்ளவன் ஆத்மஞானம் பெற வேண்டி சிறந்த குருவை முதலில் அணுகவேண்டும்

**'तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत् समित्पाणिः श्रोत्रियं ब्रह्मनिष्ठम्''**

**தத்3விஜ்ஞாநார்த2 ஸ கு3ருமேவாபி4க3ச்சே2த் ஸமித்பாணி: ஶ்ரோத்ரியம் ப்3ரஹ்மநிஷ்ட2ம்"**

**यद्यपि जलधेरुदकं यद्यपि वा प्रेरकोऽनिलस्तत्र ।**
**तदपि पिपासाकुलितः प्रतीक्षते चातको मेघम् ॥ ८७ ॥**

**யத்³யபி ஜலதே⁴ருத³கம் யத்³யபி வா ப்ரேரகோ(அ)நிலஸ்தத்ர ।**
**தத³பி பிபாஸாகுலித꞉ ப்ரதீக்ஷதே சாதகோ மேக⁴ம் ॥ 87 ॥**

**जलधेः** = ஸமுத்திரத்திலிருந்து,
**ஜலதே⁴꞉**

**उदकं यद्यपि** = நீர் கிடைத்த போதிலும்,
**உத³கம் யத்³யபி**

**तत्र** = அதில்,
**தத்ர**

**अनिलो वा** = காற்று,
**அனிலோ வா**

**प्रेरकः यद्यपि** = தூண்டுகோலாக இருந்தபோதிலும்,
**ப்ரேரக꞉ யத்³யபி**

**तदपि** = அவ்வாறு இருப்பினும்,
**தத³பி**

**पिपासाकुलितः** = தாகத்தால் துன்புறுத்தப்பட்ட,
**பிபாஸாகுலித꞉**

**चातकः** = சாதகப்பட்சி,
**சாதக꞉**

**मेघं** = மேகத்தை,
**மேக⁴ம்**

**प्रतीक्षते** = எதிர்பார்க்கின்றது.
**ப்ரதீக்ஷதே**

மேகம் ஸமுத்திரத்திலிருந்து நீரைப் பெற்றுக்கொள்கிறது. அந்த நீர் மழை யாகக் கீழே விழுகிறது. அவ்வாறு மழை பெய்வதற்குக் காற்று உதவி செய்கின்றது. இவ்வாறு ஸமுத்திரமும் காற்றும் மழைக்குக் காரணமாக இருந்தபோதிலும் தாகத்தால் வருந்திய சாதகப் பறவை நீரைக் குடிப்பதற்கு மேகத்தையே நாடி நிற்கின்றது. அது போலவே ஆத்மஞானம் பெறுவதற்கு உபநிஷத்துக்கள் இருப்பி னும் குருவையே நாடிச்செல்லவேண்டும்.

**(அவதாரிகை)** குரு உபதேசித்தாலும் தன் முயற்சியால்தான் அனுபவம் வரும் எனக் கூறுகிறுர்: -

**त्रेधा प्रतीतिरुक्ता शास्त्राद्गुरुतस्तथात्मनस्तत्र ।**
**शास्त्रप्रतीतिरादौ यद्वन्मधुरो गुडोऽस्तीति ॥ ८८ ॥**

**த்ரேதா⁴ ப்ரதீதிருக்தா ஶாஸ்த்ராத்³ கு³ருதஸ் ததா²த்மனஸ்தத்ர ।**
**ஶாஸ்த்ர ப்ரதீதிராதௌ³ யத்³வன் மது⁴ரோ கு³டோ³(அ)ஸ்தீதி ॥ 88 ॥**

**शास्त्रात्** = சாஸ்திரத்திலிருந்தும்,
**ஶாஸ்த்ராத்**

**गुरुतः** = குருவினிடமிருந்தும்,
**கு³ருத:**

**तथा** = அவ்வாறே,
**ததா²**

**आत्मनः** = தன்னிடமிருந்தும்,
**ஆத்மன:**

**त्रेधा** = மூன்றுவிதமாக,
**த்ரேதா⁴**

**प्रतीतिः** = அறிவு (உண்டாவதாக),
**ப்ரதீதி:**

**उक्ता** = கூறப்பட்டுள்ளது.
**உக்தா**

**तत्र** = அதில்,
**தத்ர**

**गुडः** = வெல்லம்,
**கு³ட³:**

**मधुरः** = இனிப்பாக,
**மது⁴ர:**

**अस्ति** = இருக்கிறது,
**அஸ்தி**

**इति यद्वत्** = என்பதுபோலத் தான்,
**இதி யத்³வத்**

**आदौ** = முதலில்,
**ஆதௌ³**

**शास्त्रप्रतीतिः** = சாஸ்திரத்தால் ஏற்படும் அறிவு.
**ஶாஸ்த்ரப்ரதீதி:**

சாஸ்திரம், குரு, ஆத்மா இம் மூன்றுலும் ஆத்மஞானம் ஏற்படுகிறது அவற்றுள் வெல்லத்தையே கண்டிராதவனுக்கு “வெல்லம் இனிப்பாக இருக்கும்" என்று பிறர் சொல்லும் வார்த்தையைக் கேட்டு எம்மாதிரி ஞானம் ஏற்படுமோ அம்மாதிரி

யாகத்தான் சாஸ்திரத்தால் ஏற்படும் ஆத்மஞானமும். அதாவது சாஸ்திரத்தால் பரோக்ஷஞானம் தான் ஏற்படும். **(88)**

## अग्रे गुरुप्रतीतिर्दूराद्गुडदर्शनं यद्वत् ।
## आत्मप्रतीतिरस्माद्गुडभक्षणजं सुखं यद्वत् ॥ ८९ ॥

**அக்³ரே கு³ருப்ரதீதிர் தூ³ராத்³ கு³ட³த³ர்ஶனம் யத்³வத் ।**
**ஆத்ம ப்ரதீதிரஸ்மாத்³ கு³ட³ப⁴க்ஷணஜம் ஸுக²ம் யத்³வத் ॥ 89 ॥**

**दूरात्** = தூரத்திலிருந்து,
**தூ³ராத்**

**गुडदर्शनं यद्वत्** = வெல்லத்தைக் காண்பதுபோல,
**கு³ட³த³ர்ஶனம் யத்³வத்**

**अग्रे** = முன்னால்,
**அக்³ரே**

**गुरुप्रतीति:** = ஆசிரியரிடமிருந்துபெறும் ஆத்மஞானம்,
**கு³ருப்ரதீதி**:

**गुडभक्षणजं** = வெல்லத்தைச் சாப்பிடுவதால் உண்டாகும்,
**கு³ட³ப⁴க்ஷணஜம்**

**सुखं यद्वत्** = இன்பத்தைப்போல,
**ஸுக²ம் யத்³வத்**

**अस्मात्** = இவனால் ஏற்படும்,
**அஸ்மாத்**

**आत्मप्रतीति:** = ஆத்மஞானம்.
**ஆத்ம ப்ரதீதி**:

வெல்லம் என்ற இனிப்பானபொருள் ஒன்று இருக்கிறது என்று பிறர் சொல்லிக் கேட்டுத் தெரிந்து கொண்டவன் பிறகு அதைச் சாப்பிடவேண்டிய ஆசை யால் வெல்லம் இருக்கும் இடம் தேடிச்சென்று அதை வாங்கிக் கண்ணால் பார்க்கிறான். இதுபோல சாஸ்திரங்களால் ஆத்மவஸ்து இருப்பதை அறிந்தவன் குருவைத் தேடிச்சென்று ஆத்ம ஞானோபதேசம் பெறுகிறான். வெல்லத்தைக் கண்ணால் பார்த்தாலும் அதன் இனிப்பு பரோக்ஷமாகத்தானிருக்கிறது. இதுபோல குருவின் உபதேசம் பெற்றபோதிலும் அது பரோக்ஷம்தான். வெல்லத்தை வாயில் போட்டு சாப்பிட்ட பிறகு ஆனந்தம் ஏற்படுவதுபோல மனன நிதித்யாஸனங்களால் ஆத்ம ப்ரத்யக்ஷம் ஏற்படும்பொழுது ஆனந்தானுபவம் ஏற்படுகிறது இங்கு வெல்லத் தைப் பற்றிக் கேள்விப்படாதவனும் அதை அடையாதவனும் மாதுர்யத்தை அனுபவி க்கமுடியாது, இதுபோல சாஸ்திரத்தாலும் குருவின் உபதேசத்தாலும் ஆத்மாவை அறிந்தவன் தான் தன் ப்ரயத்னத்தால் ஆத்மானந்தம் பெறமுடியும். **(89)**

**(அவதாரிகை)** தேஹாதிகள் ஆத்மா அல்ல என்பதைக் காட்டுகிறார்: -

**रसगन्धरूपशब्दस्पर्शा अन्ये पदार्थाश्च ।**
**कस्मादनुभूयन्ते नो देहान्नेन्द्रियग्रामात् ॥ ९० ॥**

**ரஸக³ந்த⁴ரூபஶப்³த³ஸ்பர்ஶா அன்யே பதா³ர்தா²ஶ்ச ।**
**கஸ்மாத³னுபூ⁴யந்தே நோ தே³ஹான்னேந்த்³ரியக்³ராமாத் ॥ 90 ॥**

**मृतदेहेन्द्रियवर्गो यतो न जानाति दाहजं दुःखम् ।**
**प्राणश्चेन्निद्रायां तस्करबाधां स किं वेत्ति ॥ ९१ ॥**

**ம்ருததே³ஹேந்த்³ரியவர்கோ³ யதோ ந ஜானாதி தா³ஹஜம் து³:க²ம் ।**
**ப்ராணஶ்சேந்நித்³ராயாம் தஸ்கரபா³தா⁴ம் ஸ கிம் வேத்தி ॥ 91 ॥**

**रस** = சுவை,
**ரஸ**

**गन्ध** = மணம்,
**க³ந்த⁴**

**रूप** = ரூபம்,
**ரூப**

**शब्द** = சப்தம்,
**ஶப்³த³**

**स्पर्शाः** = ஊறு என்னும் ஐம்புலன்களின் விஷயங்களும்,
**ஸ்பர்ஶா:**

**अन्ये** = மற்ற,
**அன்யே**

**पदार्थाः च** = பொருள்களும்,
**பதா³ர்தா²: ச**

**कस्मात्** = எதனால்,
**கஸ்மாத்**

**अनुभूयन्ते** = அனுபவிக்கப்படுகின்றன?
**அனுபூ⁴யந்தே**

**नो देहात्** = இவைகள் உடலால் அனுபவிக்கப்படுவது இல்லை,
**நோ தே³ஹாத்**

**इन्द्रियग्रामात् न** = ஐம்பொறிகளாலும் நுகரப்படுவது இல்லை,
**இந்த்³ரியக்³ராமாத் ந**

**यतः** = ஏனெனில்,
**யத:**

**मृत** = இறந்தவனுடைய,
**ம்ருத**

| | | |
|---|---|---|
| **देह**<br>**தே3ஹ** | = | உடலோ அல்லது, |
| **इन्द्रियवर्गः**<br>**இந்த்3ரியவர்க3:** | = | ஐம்பொறிகளோ, |
| **दाहजं**<br>**தா3ஹஜம்** | = | எரிப்பதால் உண்டாகின்ற, |
| **दुःखं**<br>**து3:க2ம்** | = | துன்பத்தை, |
| **न जानाति**<br>**ந ஜாநாதி** | = | அறிவதில்லை, |
| **प्राणः चेत्**<br>**ப்ராண: சேத்** | = | உயிர் அதை அறிகின்றது என்று சொல்வாயாகில் அது சரியல்ல, |
| **सः**<br>**ஸ:** | = | அவ்வுயிர், |
| **निद्रायां**<br>**நித்3ராயாம்** | = | உறங்கும்பொழுது, |
| **तस्करबाधां**<br>**தஸ்கரபா3தா4ம்** | = | திருடர்களால் உண்டாகும் துன்பத்தை, |
| **किं वेत्ति**<br>**கிம் வேத்தி** | = | அறிகிறதா? |

உலகில் ஒவ்வொரு பிராணியும் சுவை, மணம், உருவம், சப்தம், ஸ்பர்சம் இவைகளையும் மற்றும் உலகிலுள்ள எல்லாப் பொருள்களையும் அறிந்து கொள்கிறோம். இந்த அறிவு ஏற்படுவதற்குக் காரணம் என்ன? இதை விசாரித்தால் ஆத்மாவைத் தெரிந்துகொள்ளலாம். இந்த அறிவு ஸ்தூலமான சரீரத்தாலோ அல்லது கண் காது முதலான இந்திரியங்களாலோ ஏற்படுவதாகக் கூறமுடியாது. அப்படியானால் இறந்தபிறகு சரீரத்தை நெருப்பால் கொளுத்தும்பொழுது அதன் தாபத்தை சரீரமும் இந்திரியங்களும் ஏன் தெரிந்துகொள்ளவில்லை? தன்மேல் விழுந்த நெருப்பின் தாபத்தையே அறிய இயலாத தேஹேந்திரியங்கள் மற்ற விஷயங்களை எவ்வாறு தெரிந்துகொள்ளக் கூடும். இதே போல பிராணனும் இவற்றை அறிந்துகொள்வதாகக் கூற முடியாது. இரவில் தூங்கும்பொழுது திருடன் வந்து தொந்தரவு செய்வதை பிராணன் தெரிந்துகொள்வதில்லையே. ஆகவே நமக்கு ஏற்படும் ஞானத்திற்கு தேஹம், இந்திரியம், பிராணன் இவை காரணம் அல்ல. ஆகையால் இவை ஆத்மா அல்ல. **(90-91)**

**(அவதாரிகை)** மனம் காரணம் அல்ல என்பதைக் கூறுகிறார்: -

**मनसो यदि वा विषयस्तद्युगपत्किं न जानाति ।**
**तस्य पराधीनत्वाद्यतः प्रमादस्य कस्त्राता ॥ ९२ ॥**

**மனஸோ யதி³ வா விஷயஸ்தத்³யுக³பத் கிம் ந ஜாநாதி ।**
**தஸ்ய பராதீ⁴னத்வாத்³ யத꞉ ப்ரமாத³ஸ்ய கஸ்த்ராதா ॥ 92 ॥**

| | | |
|---|---|---|
| **वा**<br>**வா** | = | அல்லது, |
| **मनसः**<br>**மனஸ꞉** | = | மனதிற்கு, |
| **विषयः यदि**<br>**விஷய꞉ யதி³** | = | பொருள்களை உணரும் சக்தி உண்டு என்றால், |
| **तत्**<br>**தத்** | = | அம்மனம், |
| **युगपत्**<br>**யுக³பத்** | = | ஒரே சமயத்தில், |
| **किं**<br>**கிம்** | = | ஏன், |
| **न जानाति**<br>**ந ஜாநாதி** | = | அறிகிறதில்லை, |
| **यतः**<br>**யத꞉** | = | ஏனெனில், |
| **तस्य पराधीनत्वात्**<br>**தஸ்ய பராதீ⁴னத்வாத்** | = | அது மற்றொன்றின் வசத்தில் இருப்பதால் (அவ்வாறு உணர்வதில்லை), |
| **प्रमादस्य**<br>**ப்ரமாத³ஸ்ய** | = | அவ்வாறான கவனக்குறைவின், |
| **त्राता**<br>**த்ராதா** | = | காப்பாளன், |
| **कः**<br>**க꞉** | = | யார்? |

மனம் உணர்கிறது என்று சொல்வதும் சரியல்ல. ஏனெனில் ஒரே ஸமயத்தில் பற்பல புலன்களால் உண்டாகும் உணர்ச்சி நுகரப்படுவதில்லை. மனம் எப்பொழுதும் இருப்பதால் அவ்வுணர்ச்சிகள் ஒரே சமயத்தில் அனுபவிக்கப்படவேண்டும் ஆனால் அவ்வாறு ஏன் அனுபவிக்கப்படுகிறதில்லை? அவ்விஷயங்களில் மனத்தின் கவனம் செல்வதில்லை என்று இதற்குப் பதில் உரைக்கவேண்டும். அவ்வாறு மனதைக் கட்டுப்படுத்துவது யார்? அதுதான் ஆத்மா இதனால் ஆத்மா ஒன்றே எல்லாவற்றையும் அறியுமாற்றல் பெற்றது என்பது ஸித்தமாகிறது. **(92)**

**(அவதாரிகை)** ஆத்மாவினுல்தான் அறிவு ஏற்படுகிறது என்பதை திருஷ்டாந் தத்தால் விளக்குகிறுர்: -

**गाढध्वान्तगृहान्ततः क्षितितले दीपं निधायोज्ज्वलं**
**पञ्चच्छिद्रमधोमुखं हि कलशं तस्योपरि स्थापयेत् ।**
**तद्बाह्ये परितोऽनुरन्ध्रममलां वीणां च कस्तूरिकां**
**सद्रत्नं व्यजनं न्यसेच्च कलशच्छिद्राध्वनिर्गच्छताम् ॥ ९३ ॥**

**கா³ட⁴த்⁴வாந்தக்³ருஹாந்தத: க்ஷிதிதலே தீ³பம் நிதா⁴யோஜ்ஜ்வலம்**
**பஞ்சச்சி²த்³ரமதோ⁴முக²ம் ஹி கலஶம் தஸ்யோபரி ஸ்தா²பயேத் ।**
**தத்³பா³ஹ்யே பரிதோ(அ)னுரந்த்⁴ரமமலாம் வீணாம் ச கஸ்தூரிகாம்**
**ஸத்³ரத்னம் வ்யஜனம் ந்யஸேச்ச கலஶச்சி²த்³ராத்⁴வநிர்க³ச்ச²தாம் ॥ 93 ॥**

**तेजोंशेन पृथक्पदार्थनिवहज्ञानं हि यज्जायते**
**तद्रन्ध्रैः कलशेन वा किमु मृदो भाण्डेन तैलेन वा ।**
**किं सूत्रेण न चैतदस्ति रुचिरं प्रत्यक्षबाधादतो**
**दीपज्योतिरिहैकमेव शरणं देहे तथात्मा स्थितः ॥ ९४ ॥**

**தேஜோம்ஶேன ப்ருத²க்பதா³ர்த²னிவஹஜ்ஞானம் ஹி யஜ்ஜாயதே**
**தத்³ரந்த்⁴ரை: கலஶேன வா கிமு ம்ருதோ³ பா⁴ண்டே³ன தைலேன வா ।**
**கிம் ஸூத்ரேண ந சைதத³ஸ்தி ருசிரம் ப்ரத்யக்ஷபா³தா⁴த³தோ**
**தீ³பஜ்யோதிரிஹைகமேவ ஶரணம் தே³ஹே ததா²த்மா ஸ்தி²த: ॥ 94 ॥**

**गाढध्वान्त** = அடர்த்தியான இருள் நிறைந்த,
**கா³ட⁴த்⁴வாந்த**

**गृहान्ततः** = வீட்டிற்குள்,
**க்³ருஹாந்தத:**

**क्षितितले** = தரையின் மீது,
**க்ஷிதிதலே**

**उज्ज्वलं** = அதிகமான பிரகாசத்தையுடைய,
**உஜ்ஜ்வலம்**

**दीपं** = விளக்கை,
**தீ³பம்**

**निधाय** = வைத்து,
**நிதா⁴ய**

**तस्योपरि** = அதன்மேல்,
**தஸ்யோபரி**

**अधोमुखं** = தலைகீழாக,
**அதோ4முக2ம்**

**पञ्चच्छिद्रं** = ஐந்து துவாரங்களுள்ள,
**பஞ்சச்சி2த்3ரம்**

**कलशं** = குடத்தை,
**கலஶம்**

**स्थापयेत्** = வைக்க வேண்டும்,
**ஸ்தா2பயேத்**

**तद्बाह्ये** = அதற்கு வெளியில்,
**தத்3பா3ஹ்யே**

**परित:** = சுற்றிலும்,
**பரித:**

**अनुरन्ध्रं** = ஒவ்வொரு துவாரத்திற்குப் பக்கத்திலும்,
**அனுரந்த்4ரம்**

**अमलां** = நெல்லிக்கனியையும்,
**அமலாம்**

**वीणां** = வீணையையும்,
**வீணாம்**

**कस्तूरिकां च** = கஸ்தூரியையும்,
**கஸ்தூரிகாம் ச**

**सद्रत्नं** = உயர்ந்த ரத்னத்தையும்,
**ஸத்3ரத்னம்**

**व्यजनं च** = விசிறியையும்,
**வ்யஜனம் ச**

**न्यसेत्** = வைக்கவேண்டும்,
**ந்யஸேத்**

**कलश** = குடத்தினுடைய,
**கலஶ**

**छिद्राध्व** = துவாரத்தின் வழியாக,
**சி2த்3ராத்4வ**

**निर्गच्छता** = வெளியே செல்கின்ற,
**நிர்க3ச்ச2தா**

**तेजोंशेन** = ஒளியின் பகுதியால்,
**தேஜோம்ஶேன**

**यत्** = எந்த,
**யத்**

| | | |
|---|---|---|
| **पृथक्पदार्थनिवह**<br>**ப்ருத²க்பதா³ர்த²னிவஹ** | = | தனித்தனியாக பொருள்களின், |
| **ज्ञानं**<br>**ஞானம்** | = | அறிவு, |
| **जायते**<br>**ஜாயதே** | = | உண்டாகிறதோ, |
| **तत्**<br>**தத்** | = | அது, |
| **रन्ध्रैः**<br>**ரந்த்⁴ரைः** | = | ஓட்டைகளால் ஏற்படுகிறதா? |
| **कलशेन वा**<br>**கலஶேன வா** | = | அல்லது குடத்தினால் உண்டாகிறதா? |
| **किमु मृदो भाण्डेन वा**<br>**கிமு ம்ருதோ³ பா⁴ண்டே³ன வா** | = | அல்லது மண் அகல் பாத்ரத்தாலா? |
| **तैलेन वा**<br>**தைலேன வா** | = | அல்லது எண்ணெயாலா? |
| **किं सूत्रेण**<br>**கிம் ஸூத்ரேண** | = | அல்லது திரியாலா? |
| **प्रत्यक्षबाधात्**<br>**ப்ரத்யக்ஷபா³தா⁴த்** | = | பிரத்யக்ஷ ப்ரமாணத்திற்கு விருத்தமாக இருப்பதால், |
| **एतत्**<br>**ஏதத்** | = | இவ்வாறு கூறுவது, |
| **न च रुचिरं अस्ति**<br>**ந ச ருசிரம் அஸ்தி** | = | அழகாக இல்லை, |
| **अतः**<br>**அதः** | = | ஆகையால், |
| **इह**<br>**இஹ** | = | இந்த விஷயத்தில், |
| **दीपज्योतिः एकमेव**<br>**தீ³பஜ்யோதிः ஏகமேவ** | = | விளக்கின் ஜ்வாலை ஒன்றே, |
| **शरणं**<br>**ஶரணம்** | = | காரணமாக ஆகின்றது, |
| **तथा**<br>**ததா²** | = | அதுபோலவே, |
| **देहे**<br>**தே³ஹே** | = | உடலில், |

**आत्मा** = ஆத்மா,

**ஆத்மா**

**स्थित:** = இருக்கின்றது.

**ஸ்தி²த:**

வீட்டில் இருள் சூழ்ந்த ஒரு அறையில் தரையின் மீது ஒரு விளக்கை ஏற்றிவைத்து அதை ஐந்து துவாரங்கள் கொண்ட ஒரு குடத்தினுல் மூடி வைக்க வேண்டும். அக்குடத்திலுள்ள ஒவ்வொரு துவாரத்திற்கும் எதிராக வீணை, விசிறி, ரத்தினம், நெல்லிக்கனி, கஸ்தூரி என்ற ஐந்து பொருள்களையும் வைக்கவேண்டும். (இவ்வைந்தும் சப்தம் ஸ்பர்சம் முதலான ஐந்து விஷயங்களைக் காட்டுகிறது) குடத்தின் துவாரங்களின் மூலமாக அப்பொருள்களின் மீது விழும் ஒளியினுல் அவைகளை நாம் நன்கு தெரிந்து கொள்கிறோம். இந்த அறிவு நமக்கு எதனுல் ஏற்படுகிறது? துவாரங்களாலா? குடத்தாலா? உள்ளே இருக்கும் விளக்கினுலா? எண்ணெயாலா? திரியாலா? விளக்கின் ஜ்வாலையாலா? இதை நாம் நன்கு ஆராய்ந் தால் தீப ஜ்வாலையாலேயே அப்பொருள்கள் விளங்குகின்றன என்பது நன்கு தெரிகி ன்றது. இதுபோலவே அக்ஞான இருள் அடர்ந்த ஸம்ஸாரம் என்னும் வீட்டில் ஆத்மா என்னும் தீபம் பிரகாசிக்கிறது இந்திரியங்கள் என்னும் ஐந்து துவாரங்களு ள்ள சரீரம் என்னும் குடம் ஆத்ம தீபத்தை மூடிக்கொண்டிருக்கிறது. கண், காது முதலான இந்திரியங்களின் வழியாக ஆத்ம பிரகாசம் வெளியில் வந்து விஷயங் களை பிரகாசப் படுத்துகிறது. உடனே நமக்கு ஞானம் ஏற்படுகிறது. ஆதலால் நமக்கு ஏற்படும் ஞானத்திற்கு இந்திரியங்களோ, தேஹமோ, விளக்குபோன்றதான ஹிருதய மோ, திரிபோன்ற மனமோ, எண்ணை போன்ற பிராணனோ காரணம் அல்ல. ஆத்ம பிரகாசம் தான் காரணம். ஆகவே தேஹாதிகளைக் காட்டிலும் விலக்ஷணமான ஸ்வயம்ப்ரகாசமான ஆத்மவஸ்து ஒன்று இருக்கிறது. **(94)**

## ८. मायासिद्धिप्रकरणम् ॥

### 8. மாயாஸித்³தி⁴ ப்ரகரணம் ॥

**(அவதாரிகை)** ஆத்மாவை அறியவொட்டாமல் மறைக்கும் மாயையையும், அதன் காரியங்களையும் விவரிக்கிறார்: -

**चिन्मात्र: परमात्मा ह्यपश्यदात्मानमात्मतया ।**
**अभवत्सोऽहंनामा तस्मादासीद्धिदो मूलम् ॥ ९५ ॥**

**சின்மாத்ர꞉ பரமாத்மா ஹ்யபஶ்யதா³த்மானமாத்மதயா ।**
**அப⁴வத்ஸோ(அ)ஹம்நாமா தஸ்மாதா³ஸீத்³பி⁴தோ³ மூலம் ॥ 95 ॥**

**चिन्मात्र:** = சித்ஸ்வரூபியான,

**சின்மாத்ர꞉**

| | | |
|---|---|---|
| **परमात्मा**<br>**பரமாத்மா** | = | பரமாத்மா (விராட்), |
| **आत्मानं**<br>**ஆத்மானம்** | = | ஆத்மாவை, |
| **आत्मतया**<br>**ஆத்மதயா** | = | தானாக (நான் என்று), |
| **अपश्यत्**<br>**அபஶ்யத்** | = | பார்த்துக்கொண்டார், |
| **सः**<br>**ஸ:** | = | அவர், |
| **अहंनामा**<br>**அஹம்நாமா** | = | அஹம் என்ற பெயரை உடையவராக, |
| **अभवत्**<br>**அப⁴வத்** | = | ஆனார், |
| **तस्मात्**<br>**தஸ்மாத்** | = | அதிலிருந்து, |
| **भिदः**<br>**பி⁴த³:** | = | வேற்றுமையின், |
| **मूलं**<br>**மூலம்** | = | காரணம், |
| **आसीत्**<br>**ஆஸீத்** | = | ஏற்பட்டது. |

**द्वेधैव भाति तस्मात्पतिश्च पत्नी च तौ भवेतां वै ।**
**तस्मादयमाकाशः स्त्रियैव परिपूर्यते सततम् ॥ ९६ ॥**

**த்³வேதை⁴வ பா⁴தி தஸ்மாத் பதிஶ்ச பத்னீ ச தௌ ப⁴வேதாம் வை ।**
**தஸ்மாத³யமாகாஶ: ஸ்த்ரியைவ பரிபூர்யதே ஸததம் ॥ 96 ॥**

(அது)

| | | |
|---|---|---|
| **द्वेधैव**<br>**த்³வேதை⁴வ** | = | இரண்டாகவே, |
| **भाति**<br>**பா⁴தி** | = | ஆகிறது, |
| **तस्मात्**<br>**தஸ்மாத்** | = | அதனால், |
| **पति च**<br>**பதி ச** | = | கணவனும், |

| | | |
|---|---|---|
| पत्नी च<br>பத்னீ ச | = | மனைவியும் என்ற, |
| तौ<br>தௌ | = | அவைகள், |
| भवेतां<br>ப⁴வேதாம் | = | உண்டாகின்றன, |
| तस्मात्<br>தஸ்மாத் | = | ஆகையால், |
| सततं<br>ஸததம் | = | எப்பொழுதும், |
| अयं<br>அயம் | = | இந்த, |
| आकाशः<br>ஆகாஶ꞉ | = | ஆகாசம், |
| स्त्रिया एव<br>ஸ்த்ரியா ஏவ | = | பெண்ரூபத்தாலேயே, |
| परिपूर्यते<br>பரிபூர்யதே | = | நிரப்பப்படுகிறது. |

**सोऽयमपीक्षां चक्रे ततो मनुष्या अजायन्त ।**
**इत्युपनिषदः प्राहुर्दयितां प्रति याज्ञवल्क्योक्त्या ॥ ९७ ॥**

**ஸோ(அ)யமபீக்ஷாம் சக்ரே ததோ மனுஷ்யா அஜாயந்த ।**
**இத்யுபநிஷத³꞉ ப்ராஹுர்த³யிதாம் ப்ரதி யாஜ்ஞவல்க்யோக்த்யா ॥ 97 ॥**

| | | |
|---|---|---|
| सः अयम्<br>ஸ꞉ அயம் | = | அந்தப் பரமாத்மா, |
| ईक्षां चक्रे<br>ஈக்ஷாம் சக்ரே | = | ஸங்கல்பம் செய்து கொண்டார், |
| ततः<br>தத꞉ | = | அதனிடத்திலிருந்து, |
| मनुष्या<br>மனுஷ்யா | = | மானிடர்கள், |
| अजायन्त<br>அஜாயந்த | = | தோன்றினர், |
| इति<br>இதி | = | என்று, |

**दयितां प्रति** = தன்னுடைய மனைவியைக் குறித்து,

**த³யிதாம் ப்ரதி**

**याज्ञवल्क्योक्त्या** = யாக்ஞவல்க்யர் உபதேசித்ததாக,

**யாஜ்ஞவல்க்யோக்த்யா**

**उपनिषदः** = உபநிடதங்கள்,

**உபநிஷத³:**

**प्राहुः** = கூறுகின்றன.

**ப்ராஹு:**

பிருஹதாரண்ய உபநிஷத்தில் முதல் அத்யாயம் 4 வது ப்ராஹ்மணத்தில் சிருஷ்டியைக் கூறும் இடத்தில் இவ்விஷயம் காணப்படுகிறது. ஸிருஷ்டிக்கு முன்னால் விராட் ஸ்வரூபமான பரமாத்மா ஒருவர் தான் இருந்தார். அவர் தன்னை ஸர்வாத்மாவாகப் பார்த்தார். தன்னைத் தவிர வேறு ஒன்றையும் அவர் காணவில்லை. 'அஹமஸ்மி' என்று சொல்லிக்கொண்டதால் அவருக்கு 'அஹம்' என்ற பெயர் ஏற்பட்டது. அதிலிருந்து வேற்றுமை தோன்ற ஆரம்பித்தது. அவர் இரண்டாகத் தோன்றினர். ஒரே வஸ்துவாக இருந்த அவர் கணவன், மனைவி என்ற இரு வ்யக்திகளாக ஆய்விட்டார். ஒரு பாதி கணவன் மற்றொரு பாதி பெண். ஆகையால் ஸ்திரீ ரூபத்தால்தான் மற்றொரு பாதி பூர்த்தியாகிறது. அவர் ஸிருஷ்டி செய்வதற்கு ஸங்கல்பம் செய்தார். அதனால் மனுஷ்யர்கள் உண்டானார்கள். இந்த விஷயத்தை யாக்ஞவல்க்யர் தம் மனைவிக்குக் கூறுவதாக உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது **(95-97)**

**चिरमानन्दानुभवात्सुषुप्तिरिव काप्यवस्थाभूत् ।**
**परमात्मनस्तु तस्मात्स्वप्नवदेवोत्थिता माया ॥ ९८ ॥**

**சிரமானந்தா³னுப⁴வாத்ஸுஷுப்திரிவ காப்யவஸ்தா²பூ⁴த் ।**
**பரமாத்மனஸ்து தஸ்மாத்ஸ்வப்னவதே³வோத்தி²தா மாயா ॥ 98 ॥**

**चिरं** = நீண்டகாலம்,

**சிரம்**

**अनन्दानुभवात्** = ஆனந்தத்தை அனுபவிப்பதால்,

**அனந்தா³னுப⁴வாத்**

**सुषुप्तिरिव** = ஸுஷுப்திபோன்ற,

**ஸுஷுப்திரிவ**

**काऽपि** = ஒரு,

**கா(அ)பி**

**अवस्था** = நிலை,

**அவஸ்தா²**

**परमात्मनः** = பரமாத்மாவிற்கு,

**பரமாத்மன:**

| | | |
|---|---|---|
| **अभूत्**<br>**அபூ⁴த்** | = | ஏற்பட்டது, |
| **तस्मात्**<br>**தஸ்மாத்** | = | அதிலிருந்து, |
| **स्वप्नवत् एव**<br>**ஸ்வப்னவத் ஏவ** | = | ஸ்வப்நம் போன்றதாகவே |
| **माया**<br>**மாயா** | = | மாயை, |
| **उत्थिता**<br>**உத்தி²தா** | = | கிளம்பியது. |

ஸிருஷ்டிக்கு முன்னல் வெகுகாலம் ஆனந்தத்தை அனுபவித்துக் கொண்டிருந்த பரமாத்மாவுக்கு ஸுஷுப்தி போன்ற (தன்ஜே மறந்த) ஓர் நிஜல ஏற்பட்டது. ஜீவர்களுக்கு ஸுஷுப்திக்குப் பின் ஸ்வப்னம் ஏற்படுவதுபோல் பரமாத்மாவுக்கும் அந்நிஜலயிலிருந்து விக்ஷேப சக்தியோடு கூடிய மாயை கிளம்பியது. இங்கு மாயையை ஸ்வப்னத்திற்குச் சமமாகக் கூறுவதால் ஸ்வப்னத்தில் காணும் பொருள்க ஊப் போல மாயையும் அதன் கார்யங்களும் வாஸ்தவமல்ல என்று தெரிகிறது. **(98)**

**(அவதாரிகை)** மாயையின் லக்ஷணம் கூறுகிருர்: -

**सदसद्विलक्षणाऽसौ परमात्मसदाश्रयाऽनादिः ।**
**सा च गुणत्रयरूपा सूते सचराचरं विश्वम् ॥ ९९ ॥**

**ஸத³ஸத்³விலக்ஷணு(அ)ஸௌ பரமாத்மஸதா³ஶ்ரயா(அ)நாதி³: ।**
**ஸா ச கு³ணத்ரயரூபா ஸூதே ஸசராசரம் விஶ்வம் ॥ 99 ॥**

| | | |
|---|---|---|
| **असौ**<br>**அஸௌ** | = | அந்த மாயை, |
| **सदसद्विलक्षणा**<br>**ஸத³ஸத்³விலக்ஷணு** | = | ஸத்தும் அல்ல, அஸத்தும் இல்ஜல, |
| **परमात्मसदाश्रया**<br>**பரமாத்மஸதா³ஶ்ரயா** | = | பரமாத்மா என்னும் உண்மைப்பொருஊ ஆச்ரயித்துள்ளது, |
| **अनादिः**<br>**அநாதி³:** | = | ஆதியற்றது, |
| **गुणत्रयरूपा**<br>**கு³ணத்ரயரூபா** | = | ஸத்வம், ரஜஸ், தமஸ், என்ற முக்குண உருவமான, |
| **सा च**<br>**ஸா ச** | = | அது, |

**सचराचरं** = ஸ்தாவர ஜங்கமங்களோடுகூடிய,

**ஸசராசரம்**

**विश्वं** = உலகை,

**விஶ்வம்**

**सूते** = உண்டுபண்ணுகிறது.

**ஸூதே**

இந்த மாயையானது என்றும் நிலைத்துள்ள உண்மைப் பொருள் என்று கூறமுடியாது. ஏனெனில் தத்துவ ஞானம் ஏற்பட்டவுடன் அது மறைந்துவிடுகிறது. அப்பொழுது எங்கும் நிறைந்துள்ள பரம்பொருளைத் தவிர வேறு ஒன்றும் தோன்றுவதில்லை. மேலும் அதை அஸத் என்று கூறுவதும் தவறு. ஏனெனில் அஸத்தான பொருள் ஒருபொழுதும் தோன்றாது. மாயையோ தோன்றுகிறது. ஆதலால் அம்மாயை ஸதஸத்விலக்ஷணம். அது ஸத்வம், அது ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்கள் கொண்டது. அது பரம்பொருளை ஆச்ரயித்துள்ளது. அப்பொருளுடைய சேர்க்கையால் அது உலகமனைத்தையும் படைக்கிறது. **(99)**

**(அவதாரிகை)** மாயையைப்பற்றிய ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானம் கூறுகிறார்: -

## माया तावददृश्या दृश्यं कार्यं कथं जनयेत् ।
## तन्तुभिरदृश्यरूपैः पटोऽत्र दृश्यः कथं भवति ॥ १०० ॥

**மாயா தாவத³த்³ருஶ்யா த்³ருஶ்யம் கார்யம் கத²ம் ஜனயேத் ।**
**தந்துபி⁴ரத்³ருஶ்யரூபைः படோ(அ)த்ர த்³ருஶ்ய: கத²ம் ப⁴வதி ॥ 100 ॥**

**माया तावत्** = மாயையோ எனில்,

**மாயா தாவத்**

**अदृश्या** = புலன்களுக்கு எட்டாதது,

**அத்³ருஶ்யா**

**कथं** = எவ்வாறு,

**கத²ம்**

**दृश्यं** = இந்திரியங்களுக்குப் புலனாகும்,

**த்³ருஶ்யம்**

**कार्यं** = பொருளை,

**கார்யம்**

**जनयेत्** = உண்டுபண்ணும்?

**ஜனயேத்**

**अदृश्यरूपैः** = கண்ணுக்குத் தென்படாத,

**அத்³ருஶ்யரூபைः**

**तन्तुभि:** = நூல்களால்,

**தந்துபி⁴:**

**दृश्य: पट:** = கண்ணுக்குத் தென்படும் வஸ்திரம்,

**த்³ருஶ்ய: பட:**

**अत्र** = இங்கு,

**அத்ர**

**कथं** = எப்படி,

**கத²ம்**

**भवति** = உண்டாகிறது?

**ப⁴வதி**

பிரபஞ்சத்திற்கு மாயையைக் காரணமாகக் கூறுவது சரியல்ல. மாயை அத்ருச்யம், இந்திரியங்களுக்குப் புலனுகாதது. பிரபஞ்சம் த்ருச்யம், புலனுகக் கூடியது. ஆகவே கார்ய காரணங்களுக்கு வைலக்ஷண்யம் இருப்பதால் அத்ருச்ய மான மாயை த்ருச்யமான பிரபஞ்சத்திற்குக் காரணமாக முடியாது. கண்ணுக்குத் தெரியும் நூலிலிருந்து தானே துணி உண்டாகிறது. கண்ணுக்குத் தெரியாத நூலிலி ருந்து துணி உண்டாவதில்ஐலயே! **(100)**

**स्वप्ने सुरतानुभवात्छुक्रद्रावोयथा शुभे वसने ।**
**अनृतं रतं प्रबोधे वसनोपहतिर्भवेत्सत्या ॥ १०१ ॥**

**ஸ்வப்னே ஸுரதானுப⁴வாத் சு²க்ர த்³ராவோ யதா² ஶுபே⁴ வஸனே ।**
**அந்ருதம் ரதம் ப்ரபோ³தே⁴ வஸனுேபஹதிர் ப⁴வேத் ஸத்யா ॥ 101 ॥**

**स्वप्ने पुरुष: सत्यो योषिदसत्या तयोर्युतिश्च मृषा ।**
**शुक्रद्रावस्सत्यस्तद्वत्प्रकृतेऽपि संभवति ॥ १०२ ॥**

**ஸ்வப்னே புருஷ: ஸத்யோ யோஷித³ஸத்யா தயோர் யுதிஶ்ச ம்ருஷா ।**
**ஶுக்ரத்³ராவஸ் ஸத்யஸ் தத்³வத் ப்ரக்ருதே(அ)பி ப்ரக்ருதே(அ)பி ஸம்ப⁴வதி ॥102॥**

**स्वप्ने** = கனவில்,

**ஸ்வப்னே**

**सुरतानुभवात्** = ஸ்திரீயுடன் ஸம்போக ஸுகத்தை அனுபவித் ததால்,

**ஸுரதானுப⁴வாத்**

**शुभे वसने** = சுத்தமான ஆடையில்,

**ஶுபே⁴ வஸனே**

**यथा** = எவ்வாறு,

**யதா²**

| | | |
|---|---|---|
| **शुकद्राव:** | = | ரேதஸ்கலனம் ஏற்பட்டு விடுகிறதோ, |
| **ஶுகத்³ராவ:** | | |
| **रतं** | = | ஸ்திரீபோகம், |
| **ரதம்** | | |
| **अनृतं** | = | பொய் ஆயினும், |
| **அந்ருதம்** | | |
| **प्रबोधे** | = | விழித்துக் காண்டபின், |
| **ப்ரபோ³தே⁴** | | |
| **वसनोपहति:** | = | ஆடை அசுத்தமானது, |
| **வஸனோபஹதி:** | | |
| **सत्या** | = | உண்மையாக, |
| **ஸத்யா** | | |
| **भवेत्** | = | இருக்கும். |
| **ப⁴வேத்** | | |
| **स्वप्ने** | = | கனவில், |
| **ஸ்வப்னே** | | |
| **पुरुषः** | = | புருஷன், |
| **புருஷ:** | | |
| **सत्यः** | = | உண்மையானவன், ஆனால், |
| **ஸத்ய:** | | |
| **योषित्** | = | ஸ்திரீ, |
| **யோஷித்** | | |
| **असत्या** | = | பொய்யானவள், |
| **அஸத்யா** | | |
| **तयो:** | = | அந்த ஆண் பெண் இருவர்களுடைய, |
| **தயோ:** | | |
| **युतिश्च** | = | சேர்க்கையும், |
| **யுதிஶ்ச** | | |
| **मृषा** | = | பொய்யானது, ஆனால், |
| **ம்ருஷா** | | |
| **शुक्रद्राव:** | = | ரேதஸ்கலனம், |
| **ஶுக்ரத்³ராவ:** | | |
| **सत्यः** | = | உண்மையானது, |
| **ஸத்ய:** | | |
| **तद्वत्** | = | அதுபோலவே, |
| **தத்³வத்** | | |

**प्रकृतेऽपि** = இந்த இடத்திலும்,

**ப்ரக்ருதே(அ)பி**

**संभवति** = பொருத்தமாகிறது.

**ஸம்ப⁴வதி**

திருஷ்டாந்தத்தைக் காட்டி விலக்ஷணமாக இருந்தாலும் கார்ய காரண பாவம் ஏற்படலாம் என்று கூறுகிறார். ஒரு ஆடவன் கனவில் ஒரு ஸ்திரீயுடன் போகம் செய்வதாகக் காண்கிறான். அதனால் ரேதஸ்கலனம் ஏற்பட்டு அவனுடைய சுத்தமான ஆடை கெட்டுப்போய்விடுகிறது. அவன் விழித்துக்கொண்டவுடன் தன்னுடைய அனுபவம் முற்றிலும் உண்மையல்ல என்று அவன் தெரிந்துகொள்கிறான். அப்படியிருப்பினும் அவனுடைய ஆடை கெட்டுப் போனது உண்மையே. கனவிலும் அவ்வாடவன் இருப்பது உண்மையே. ஆனால் கனவில் தோன்றிய பெண்ணும், அவளுடன் போகமும் பொய்யே. பொய்யான அம்மாதுடன் ஏற்பட்ட பொய்யான கலவியால் அவனுக்கு ஏற்பட்ட ரேதஸ்கலனம் உண்மையே. இதனால் பொய்யான காரணத்தால் உண்மையான கார்யம் உண்டாகும் என்று ஏற்படு கிறது. ஆகவே காரியமும் காரணமும் விலக்ஷணமாக இருக்கலாம். **(101-102)**

**एवमदृश्या माया तत्कार्यं जगदिदं दृश्यम् ।**
**माया तावदियं स्याद्या स्वविनाशेन हर्षदा भवति ॥ १०३ ॥**

**ஏவமத்³ருஶ்யா மாயா தத்கார்யம் ஜக³தி³த³ம் த்³ருஶ்யம் ।**
**மாயா தாவதி³யம் ஸ்யாத்³யா ஸ்வவிநாஶேன ஹர்ஷதா³ ப⁴வதி ॥ 103 ॥**

**एवं** = இம்மாதிரி,

**ஏவம்**

**माया** = மாயை,

**மாயா**

**अदृश्या** = இந்திரியங்களுக்கு எட்டாதது,

**அத்³ருஶ்யா**

**तत्कार्यं** = அதனுடைய கார்யமாகிய,

**தத்கார்யம்**

**इदं जगत्** = இந்த உலகம்,

**இத³ம் ஜக³த்**

**दृश्यम्** = காணத்தகுந்தது.

**த்³ருஶ்யம்**

**तावत्** = மேலும்,

**தாவத்**

**या** = எது,

**யா**

| | | |
|---|---|---|
| **स्वविनाशेन** **ஸ்வவிநாஶேன** | = | தன்னுடைய மறைவினுல், |
| **हर्षदा** **ஹர்ஷதா³** | = | ஸந்தோஷத்தையளிக்கக்கூடியதாக, |
| **भवति** **ப⁴வதி** | = | ஆகிறதோ, |
| **इयं** **இயம்** | = | இது, |
| **माया** **மாயா** | = | மாயையாக, |
| **स्यात्** **ஸ்யாத்** | = | ஆகும். |

அதுபோலவே மாயை என்பது இந்திரியங்களால் அறியமுடியாததாக இருந்தாலும் அதனுல் படைக்கப்படும் இவ்வுலகம் நமக்குப் பிரத்யக்ஷமாகத் தோன்றலாம். இப்பேற்பட்ட மாயை இருக்கும்வரை நமக்குத் துன்பம் தான். இது அழிந்தால்தான் ஸுகம். தன் விநாசத்தால் நமக்கு ஸுகத்தைத் தருகிறது மாயை. **(103)**

**रजनीवातिदुरन्ता न लक्ष्यतेऽत्र स्वभावोऽस्याः ।**
**सौदामिनीव नश्यति मुनिभिः सम्प्रेक्ष्यमाणैव ॥ १०४ ॥**

**ரஜனீவாதிது³ரந்தா ந லக்ஷ்யதே(அ)த்ர ஸ்வபா⁴வோ(அ)ஸ்யா꞉ ।**
**ஸௌதா³மினீவ நஶ்யதி முனிபி⁴꞉ ஸம்ப்ரேக்ஷ்யமாணைவ ॥ 104 ॥**

| | | |
|---|---|---|
| **रजनी इव** **ரஜனீ இவ** | = | இரவுபோல, |
| **अतिदुरन्ता** **அதிது³ரந்தா** | = | (மாயை) மிகுந்த தீமையைத்தருவது, |
| **अत्र** **அத்ர** | = | இங்கு, |
| **अस्याः** **அஸ்யா꞉** | = | இதனுடைய, |
| **स्वभावः** **ஸ்வபா⁴வ꞉** | = | தன்மை, |
| **न लक्ष्यते** **ந லக்ஷ்யதே** | = | அறியப்படுகிறதில்லை, |
| **मुनिभिः** **முனிபி⁴꞉** | = | முனிவர்களால், |

**सम्प्रेक्ष्यमाणा एव** = பார்க்கப்படும்பொழுதே,
**ஸம்ப்ரேக்ஷ்யமாணு ஏவ**

**सौदामिनी इव** = மின்னல் கொடிபோல,
**ஸௌதா³மினீ இவ**

**नश्यति** = மறைந்து விடுகிறது.
**நஶ்யதி**

இந்த மாயை இரவுபோல் அறியாமை என்னும் இருள் நிரம்பியது. பல இன்னல்களை விளைவிக்கக்கூடியது. சாதாரணமான மனிதர்கள் இதன் ஸ்வபாவத்தை அறிய முடியாது. ஆனுல் முனிவர்கள் ஆத்ம ஞானத்தால் பார்க்கும் பொழுதே மின்னல் கொடிபோல் உடனேயே மறைந்து விடுகின்றது. அதனுல் இதை

**दृष्टनष्टस्वभावा**

**த்³ருஷ்டநஷ்டஸ்வபா⁴வா**

அதாவது விசாரிக்க ஆரம்பிக்கும் பொழுதே மறைந்து போகும் தன்மையுள்ளது, பொய்யானது என்று பெரியோர்கள் கூறுகிருர்கள். **(104)**

**माया ब्रह्मोपगताऽविद्या जीवाश्रया प्रोक्ता ।**
**चिदचिद्ग्रन्थिचेतस्तदक्षयं ज्ञेयमा मोक्षात् ॥ १०५ ॥**

**மாயா ப்³ரஹ்மோபக³தா(அ)வித்³யா ஜீவாஶ்ரயா ப்ரோக்தா ।**
**சித³சித்³க்³ரந்தி²சேதஸ் தத³க்ஷயம் ஜ்ஞேயமா மோக்ஷாத் ॥ 105 ॥**

**माया** = மாயை,
**மாயா**

**ब्रह्मोपगता** = பிரம்மத்தை ஒட்டியது என்றும்,
**ப்³ரஹ்மோபக³தா**

**अविद्या** = அவித்யை,
**அவித்³யா**

**जीवाश्रया** = ஜீவனை ஒட்டியது என்றும்,
**ஜீவாஶ்ரயா**

**प्रोक्ता** = கூறப்பட்டுள்ளது,
**ப்ரோக்தா**

**चेत:** = சேதஸ் (மனம்) என்பது,
**சேத:**

**चिदचिद्ग्रन्थि:** = சித்தினுடையவும் அசித்தினுடையவும்
**சித³சித்³க்³ரந்தி²** இணைப்பால் உண்டானது,

तत् = அந்த மனம்,
தத்

आ मोक्षात् = மோக்ஷமுண்டாகும் வரையில்,
ஆ மோக்ஷாத்

अक्षयं = அழியாததாக,
அக்ஷயம்

ज्ञेयम् = அறியத்தக்கது.
ஜ்ஞேயம்

மாயை என்பது பிரம்மமென்ற வஸ்துவை ஆச்ரயித்துள்ளது. அவித்யை என்பது ஜீவனையண்டி நிற்கின்றது. இவற்றுள் விக்ஷேபம் என்ற சக்தியை முக்யமாகக் கொண்டது மாயை. அதாவது அஃது ஒரு பொருளை மற்றென்றாகக் காட்டும் தன்மை வாய்ந்தது. ஆவரண சக்தியை முக்யமாகக் கொண்டது அவித்யை அதாவது அஃது உள்ள பொருளை மறைத்து விடுகிறது இதுதான் மாயைக்கும் அவித்யைக்கும் உள்ள வேறுபாடு ஜீவனிடத்தில் சேதஸ் அதாவது மனம் என்ற ஒரு தத்வம் உள்ளது. இதை அந்தக்கரணம் என்றும் கூறுவர் இது சித் அசித் என்பவைகளுடைய இணைப்பினால் ஏற்படுகின்றது. இதில் சித் என்பது சைதன்யம் அசித் என்பது அவித்யை எனப்படும் இவ்வாறு உண்டாகும் சேதஸ் என்பது பரம புருஷார்த்த மாகிய மோக்ஷம் ஏற்படும் வரை அழிவற்றதாக இருக்கும். **(105)**

## घटम ठकुड्यैरावृतमाकाशं तत्तदाह्वयं भवति ।
## तद्वदविद्यावृतमिह चैतन्यं जीव इत्युक्तः ॥ १०६ ॥

**க⁴டம ட²குட்³யைராவ்ருதமாகாஶம் தத்ததா³ஹ்வயம் ப⁴வதி ।**
**தத்³வத³வித்³யாவ்ருதமிஹ சைதன்யம் ஜீவ இத்யுக்தঃ ॥ 106 ॥**

घट = குடம்,
க⁴ட

मठ = மடம்,
மட²

कुड्यैः = சுவர் இவைகளால்,
குட்³யை

आवृतं = சூழப்பட்ட,
ஆவ்ருதம்

आकाशं = இடைவெளி,
ஆகாஶம்

तत्तदाह्वयं = அவ்வப்பெயரை, உடையதாக,
தத்ததா³ஹ்வயம்

**भवति** = ஆகிறது,
**ப⁴வதி**

**तद्वत्** = அதுபோலவே,
**தத்³வத்**

**इह** = இங்கு,
**இஹ**

**अविद्यावृतं** = அவித்யையால் மறைக்கப்பட்ட,
**அவித்³யாவ்ருதம்**

**चैतन्यं** = ஆத்மா,
**சைதன்யம்**

**जीव इति** = ஜீவன் என்று,
**ஜீவ இதி**

**उक्तः** = கூறப்பட்டது.
**உக்த:**

ஆகாசம் எங்கும் பரந்துள்ளது. அழிவற்றது. ஆனல் அது ஒரு குடத்திற்குள் அடைபட்டிருக்கும் பொழுது கடாகாசம் என்றும் மடத்திற்குள் இருக்கும்பொழுது மடாகாசம் என்றும் சுவர்களுக்கிடையில் இருக்கும்பொழுது குட்யாகாசம் என்றும் கூறப்படுகிறது. ஆனல் அதை அடைத்திருக்கும் ஆவரணங்கள் விலகியவுடன் ஆகாசம் ஒன்று தான் எஞ்சுகிறது. அதுபோலவே இந்த ஆத்மா எங்கும் நிறைந்துள் ளது. நித்யமானது. அது அவித்யையால் மறைக்கப்படும்பொழுது ஜீவன் என்ற பெயரை அடைகிறது. (106)

**ननु कथमावरणं स्यादज्ञानं ब्रह्मणो विशुद्धस्य ।**
**सूर्यस्येव तमिस्रं रात्रिभवं स्वप्रकाशस्य ॥ १०७ ॥**

**நனு கத²மாவரணம் ஸ்யாத³ஜ்ஞானம் ப்³ரஹ்மணோ விஶுத்³த⁴ஸ்ய ।**
**ஸூர்யஸ்யேவ தமிஸ்ரம் ராத்ரிப⁴வம் ஸ்வப்ரகாஶஸ்ய ॥ 107 ॥**

**विशुद्धस्य** = சுத்த சேதனனுன,
**விஶுத்³த⁴ஸ்ய**

**ब्रह्मणः** = பரமாத்மாவிற்கு,
**ப்³ரஹ்மண:**

**कथं** = எவ்வாறு,
**கத²ம்**

**अज्ञानं** = அஞ்ஞானம்,
**அஜ்ஞானம்**

**स्वप्रकाशस्य** = தானுக விளங்கும் தன்மைவாய்ந்த,
**ஸ்வப்ரகாஶஸ்ய**

**सूर्यस्य** = கதிரவனுக்கு,

**ஸூர்யஸ்ய**

**रात्रिभवं** = இரவில் உண்டாகும்,

**ராத்ரிப⁴வம்**

**तमिस्रं इव** = இருள்போல,

**தமிஸ்ரம் இவ**

**आवरणं** = மறைப்பாக,

**ஆவரணம்**

**ननु स्यात्** = ஆகும்?

**நனு ஸ்யாத்**

தானாகவே ஒளிரும் தன்மைவாய்ந்த கதிரவன் உதிக்கும்பொழுதே இரவில் மிளிரும் இருள் தானாகவே அகன்றுவிடுகின்றது. அவ்விருள் சூரியனை மறைக்கும் தன்மை வாய்ந்ததாக எங்ஙனம் ஆக முடியும்? அதேபோல ஸ்வத: ப்ரகாசமான ஆத்மாவை அஞ்ஞானம் எவ்வாறு மறைக்க முடியும்? **(107)**

**दिनकरकिरणोत्पन्नैर्मेघैराच्छाद्यते यथा सूर्यः ।**
**न खलु दिनस्य दिनत्वं तैर्विकृतैः सान्द्रसंघातैः ॥ १०८ ॥**

**தி³னகர கிரணோத்பன்னைர் மேகை⁴ராச்சா²த்³யதே யதா² ஸூர்ய: ।**
**ந க²லு தி³னஸ்ய தி³னத்வம் தைர் விக்ருதை: ஸாந்த்³ர ஸங்கா⁴தை: ॥ 108 ॥**

**यथा** = எவ்வாறு,

**யதா²**

**दिनकर** = சூர்யனுடைய,

**தி³னகர**

**किरण** = கதிர்களால்,

**கிரண**

**उत्पन्नैः** = உண்டான,

**உத்பன்னை:**

**मेघैः** = மேகங்களால்,

**மேகை⁴:**

**सूर्यः** = சூர்யன்,

**ஸூர்ய:**

**आच्छाद्यते** = மறைக்கப்படுகிறானோ (ஆனாலும்),

**ஆச்சா²த்³யதே**

**सान्द्रसंघातैः** = மிகவும் அடர்த்தியான,

**ஸங்கா⁴தை:**

| | | |
|---|---|---|
| **विकृतैः** | = | காரியங்களான, |
| **விக்ருதைஃ** | | |
| **तैः** | = | அந்த மேகங்களால், |
| **தைஃ** | | |
| **दिनस्य** | = | பகலின், |
| **தி³னஸ்ய** | | |
| **दिनत्वं** | = | பகல் தன்மை, |
| **தி³னத்வம்** | | |
| **न खलु** | = | மறைக்கப்படுகிறதில்லையோ. |
| **ந க²லு** | | |

சூரியனுடைய கிரணங்களே தண்ணீரை உட்கொள்வதால் மேகங்களாக ஆகின்றன. அத்தகைய மேகங்களே சூரியன் பிரகாசிக்கும் பகல் காலத்தில் சூரியனை நமக்குத் தென்படாமலிருக்கும்படி மறைக்கின்றன. ஆயினும் அது பகல் காலம் என்பதை என்பதை மறைப்பதில்லை. சூரியன் நம் கண்ணுக்குப் புலப்படாவிட்டாலும் பகல் என்பதை நாம் தெரிந்துகொள்கிறோம். **(108)**

## अज्ञानेन तथाऽऽत्मा शुद्धोऽपि च्छाद्यते सुचिरम् ।
## न परं तु लोकसिद्धा प्राणिषु तच्चेतनाशक्तिः ॥ १०९ ॥

**அஜ்ஞானேன ததா²(ஆ)த்மா ஶுத்³தோ⁴(அ)பி ச்சா²த்³யதே ஸுசிரம் ।**
**ந பரம் து லோகஸித்³தா⁴ ப்ராணிஷு தச்சேதநாஶக்திஃ ॥ 109 ॥**

| | | |
|---|---|---|
| **तथा** | = | அதுபோலவே, |
| **ததா²** | | |
| **आत्मा** | = | ஆத்மாவானது, |
| **ஆத்மா** | | |
| **शुद्धोऽपि** | = | சுத்தமாக இருப்பினும், |
| **ஶுத்³தோ⁴(அ)பி** | | |
| **अज्ञानेन** | = | அவித்யையால், |
| **அஜ்ஞானேன** | | |
| **सुचिरं** | = | வெகு காலம், |
| **ஸுசிரம்** | | |
| **छाद्यते** | = | மறைக்கப்படுகிறது, |
| **சா²த்³யதே** | | |
| **परं तु** | = | ஆனால், |
| **பரம் து** | | |

**प्राणिषु** = பிராணிகளிடத்தில்,

**ப்ராணிஷு**

**लोकसिद्धा** = உலகத்தில் பிரசித்திபெற்ற,

**லோகஸித்³தா⁴**

**तच्चेतनाशक्तिः** = அதனுடைய ஞானசக்தி,

**தச்சேதநாஶக்திः**

**न छाद्यते** = மறைக்கப்படுவதில்லை.

**ந சா²த்³யதே**

மேகங்களால் ஸூரியன் மறைக்கப்படுவதுபோல சுத்தமான ஆத்மாவும் அக்ஞானத்தால் மறைக்கப்படுகிறது. ஆனாலும் அதன் சைதன்ய சக்தி மறைக்கப்படாமல் இருப்பதால் அதன் உதவியைக் கொண்டு சேதனர்கள் எல்லா விஷயங்களையும் தெரிந்து கொள்கின்றனர். **(109)**

## ९. लिङ्गदेहादिनिरूपणप्रकरणम् ॥

### 9. லிங்க³தே³ஹாதி³நிரூபண ப்ரகரணம் ॥

(**அவதாரிகை**) மாயையைப் பற்றி விரிவாகக் கூறிவிட்டு ப்ரஹ்மத்திற்கு மாயையால் ஜீவபாவம் ஏற்படுவதையும், ஜீவனுடைய உபாதிகளான சரீரங்களையும் கூறுகிறார்: -

**स्थूलशरीरस्यान्तर्लिङ्गशरीरं च तस्यान्तः ।**
**कारणमस्याप्यन्तस्ततो महाकारणं तुर्यम् ॥ ११० ॥**

**ஸ்தூ²லஶரீரஸ்யாந்தர்லிங்க³ஶரீரம் ச தஸ்யாந்தः ।**
**காரணமஸ்யாப்யந்தஸ்ததோ மஹாகாரணம் துர்யம் ॥ 110 ॥**

**स्थूलशरीरस्या अन्तः** = ஸ்தூல சரீரத்திற்குள்,

**ஸ்தூ²லஶரீரஸ்யா அந்தः**

**लिङ्गशरीरं च** = லிங்க சரீரமும்,

**லிங்க³ஶரீரம் ச**

**तस्य अन्तः** = அதற்குள்,

**தஸ்ய அந்தः**

**कारणं** = காரண சரீரமும்,

**காரணம்**

**ततः** = பிறகு,

**ததः**

**अस्यापि अन्तः** = அதற்கும் உள்ளாக,

**அஸ்யாபி அந்தः**

| | | |
|---|---|---|
| **तुर्यं**<br>**துர்யம்** | = | நான்காவதான, |
| **महाकारणं**<br>**மஹாகாரணம்** | = | மஹாகாரண சரீரமும் (உள்ளன). |

ஸ்தூல சரீரம், அதனுள் உள்ள லிங்க சரீரம் (ஸூக்ஷ்ம சரீரம்) இதற்கும் உள்பட்ட காரண சரீரம், இதனுளுள்ள மஹாகாரண சரீரம் என்று ஜீவனுக்கு நான்கு சரீரங்கள் உள்ளன. **(110)**

**स्थूलं निरूपितं प्रागधुना सूक्ष्मादितो ब्रूमः ।**
**अंगुष्ठमात्रः पुरुषः श्रुतिरिति यत्प्राह तत्सूक्ष्मम् ॥ १११ ॥**

**ஸ்தூ²லம் நிரூபிதம் ப்ராக³து⁴னா ஸூக்ஷ்மாதி³தோ ப்³ரூமː ।**
**அங்கு³ஷ்ட²மாத்ரː புருஷː ஶ்ருதிரிதி யத்ப்ராஹ தத்ஸூக்ஷ்மம் ॥ 111 ॥**

**सूक्ष्माणि महाभूतान्यसवः पञ्चेन्द्रियाणि पञ्चैव ।**
**षोडशमन्तःकरणं तत्संघातो हि लिंगतनुः ॥ ११२ ॥**

**ஸூக்ஷ்மாணி மஹாபூ⁴தான்யஸவː பஞ்சேந்த்³ரியாணி பஞ்சைவ ।**
**ஷோட³ஶமந்தːகரணம் தத்ஸங்கா⁴தோ ஹி லிங்க³தனுː ॥ 112 ॥**

| | | |
|---|---|---|
| **प्राक्**<br>**ப்ராக்** | = | முன்னால், |
| **स्थूलं**<br>**ஸ்தூ²லம்** | = | ஸ்தூல சரீரம், |
| **निरूपितं**<br>**நிரூபிதம்** | = | நிரூபிக்கப்பட்டது, |
| **अधुना**<br>**அது⁴னா** | = | இப்பொழுது, |
| **सूक्ष्मादितः**<br>**ஸூக்ஷ்மாதி³தः** | = | சூக்ஷ்ம சரீரத்திலிருந்து துவங்கி, |
| **ब्रूमः**<br>**ப்³ரூமः** | = | கூறுகிறோம். |
| **पुरुषः**<br>**புருஷः** | = | புருஷன், |
| **अंगुष्ठमात्रः**<br>**அங்கு³ஷ்ட²மாத்ரः** | = | கட்டைவிரல் அளவுள்ளவன், |
| **इति**<br>**இதி** | = | என்று, |

| | | |
|---|---|---|
| **यत्**<br>**யத்** | = | எதை, |
| **श्रुतिः**<br>**ஶ்ருதி:** | = | வேதம், |
| **प्राह**<br>**ப்ராஹ** | = | கூறுகிறதோ, |
| **तत्**<br>**தத்** | = | அது, |
| **सूक्ष्मम्**<br>**ஸூக்ஷ்மம்** | = | ஸூக்ஷ்மசரீரம். |
| **सूक्ष्माणि**<br>**ஸூக்ஷ்மாணி** | = | சூக்ஷ்மமான, |
| **महाभूतानि**<br>**மஹாபூ4தானி** | = | ஐந்து மஹாபூதங்கள், |
| **पञ्च**<br>**பஞ்ச** | = | ஐந்து, |
| **असवः**<br>**அஸவ:** | = | பிராணன்கள், |
| **पञ्च**<br>**பஞ்ச** | = | ஐந்து, |
| **इन्द्रियाणि**<br>**இந்த்3ரியாணி** | = | புலன்கள், |
| **षोडशं**<br>**ஷோட3ஶம்** | = | பதினாறுவதான, |
| **अन्तःकरणं**<br>**அந்த:கரணம்** | = | மனம், |
| **तत्संघातः एव**<br>**தத்ஸங்கா4த: ஏவ** | = | அவைகளின் தொகுதிதான், |
| **लिंगतनुः हि**<br>**லிங்க3தனு: ஹி** | = | லிங்க சரீரம் என்று கூறப்படுகின்றது. |

முதலாவதான தேஹநிந்தா ப்ரகரணத்தில் (சு.19) ஸ்தூல சரீரத்தைப்பற்றிக் கூறியுள்ளோம். இப்பொழுது லிங்க சரீரம் என்ற சூக்ஷ்ம சரீரம் முதலியவற்றைப் பற்றிக் கூறுவோம்.

**'अंगुष्ठमात्रः पुरुषः'**

**'அங்கு3ஷ்ட2மாத்ர: புருஷ:'**

என்ற வேத வசனம் எதைக்கொண்டு அபரிச்சின்னமான ஆத்மாவை 'கட்டை விரல் ப்ரமாணம்' என்று கூறுகிறதோ அதுதான் சூக்ஷ்ம சரீரம். ஆத்மாவின் உபாதி ஸூக்ஷ்ம சரீரம். **(111)**

ஐந்து ஸூக்ஷ்மமான மஹா பூதங்கள், அதாவது பஞ்சதன்மாத்திரைகள், பிராணன், அபானன், வியானன், உதானன் ஸமானன், என்ற பஞ்ச பிராணன்கள், காது, த்வக், கண், நாக்கு, மூக்கு என்ற ஐந்து இந்திரியங்கள் மனம் இவை சேர்ந்து சூக்ஷ்ம சரீரம் எனப்படும். **(112)**

**तत्कारणं स्मृतं यत्तस्यान्तर्वासनाजालम् ।**
**तस्य प्रवृत्तिहेतुर्बुद्ध्याश्रयमत्र तुर्यं स्यात् ॥ ११३ ॥**

**தத் காரணம் ஸ்ம்ருதம் யத் தஸ்யாந்தர் வாஸனுஜாலம் ।**
**தஸ்ய ப்ரவ்ருத்திஹேதுர் பு³த்³த்⁴யாஶ்ரயமத்ர துர்யம் ஸ்யாத் ॥ 113 ॥**

**तस्यान्तः** = அந்த லிங்கசரீரத்திற்குள்,
**தஸ்யாந்தః**
**यत्** = எந்த,
**யத்**
**वासनाजालं** = வாஸனைக் கூட்டம் உண்டோ,
**வாஸனுஜாலம்**
**तत्** = அது,
**தத்**
**कारणं स्मृतं** = காரணசரீரம் எனப்படும்,
**காரணம் ஸ்ம்ருதம்**
**तस्य** = அந்த வாஸனுஜாலம்,
**தஸ்ய**
**प्रवृत्तिहेतुः** = ப்ரவ்ருத்திப்பதற்குக் காரணமான,
**ப்ரவ்ருத்திஹேது**
**बुद्ध्याश्रयं** = புத்தியை ஆச்ரயித்த அக்ஞானம்,
**பு³த்³த்⁴யாஶ்ரயம்**
**अत्र** = இங்கு,
**அத்ர**
**तुर्यं स्यात्** = நான்காவதாக ஆகும்.
**துர்யம் ஸ்யாத்**

நாம் செய்யும் நல்வினை, தீவினைகள், அறியும் விஷயங்கள் எல்லாம் ஸூக்ஷ்ம ரூபமாக நம் மனதில் அடங்கி இருக்கிறது. இதற்கு வாஸனை என்று பெயர். இவை பல பிறவிகளில் சேர்ந்துள்ளது ஏராளமாக இருக்கிறது. இந்த வாஸனு

ஜாலம் காரண சரீரம் எனப்படும். இந்த வாஸனை ஏற்படுவதற்குக் காரணமான அக்ஞானம் நான்காவதான மஹாகாரணம் எனப்படும். ஸாதாரணமாக அக்ஞானத்தைக் காரண சரீரமாகக் கூறி மூன்று சரீரங்கள் சொல்லுவது உண்டு. இங்கு வாஸனையைக் காரணமாகவும் அக்ஞானத்தை மஹா காரணமாகவும் கூறி நான்கு சரீரங்களை காட்டுகிறுர். **(113)**

**(அவதாரிகை)** ஜீவஸ்வரூபத்தைக் காட்டுகிறுர்: -

**तत्सारभूतबुद्धौ यत्प्रतिफलितं तु शुद्धचैतन्यम् ।**
**जीवः स उक्तः आद्यैर्योहमिति स्फूर्तिकृद्वपुषि ॥ ११४ ॥**

**தத்ஸாரபூ4தபு3த்3தௌ4 யத்ப்ரதிப2லிதம் து ஶுத்3த4சைதன்யம் ।**
**ஜீவ: ஸ உக்த: ஆத்3யைர்யோஹமிதி ஸ்பூ2ர்திக்ருத்3வபுஷி ॥ 114 ॥**

**तत्सारभूत** = அந்த சரீரத்தில் முக்கியமாகத் திகழ்கின்ற,
**தத்ஸாரபூ4தபு3த்3**

**बुद्धौ** = புத்தியில்,
**பு3த்3தௌ4**

**यत्** = எந்த,
**யத்**

**शुद्धचैतन्यं** = சுத்த சைதன்யம்,
**ஶுத்3த4சைதன்யம்**

**प्रतिफलितं** = பிரதிபலித்துள்ளதோ,
**ப்ரதிப2லிதம்**

**सः** = அது,
**ஸ:**

**जीवः** = ஜீவனுக,
**ஜீவ:**

**आद्यैः** = முன்னேர்களால்,
**ஆத்3யை:**

**उक्तः** = சொல்லப்பட்டது,
**உக்த:**

**यः** = எவன்,
**ய:**

**वपुषि** = சரீரத்தில்,
**வபுஷி**

**अहमिति** = நான் என்று,
**அஹமிதி**

| | | |
|---|---|---|
| **स्फूर्तिकृत्**<br>**ஸ்பூ²ர்திக்ருத்** | = | அபிமானம் கொள்கிருனே (அவனே ஜீவன்). |

கீழே கூறப்பட்ட சரீரங்களில் ஸாரமான புத்தியில் சுத்த சைதன்யம் ப்ரதிபலிக்கிறது. புத்தியுடன் கூடிய இந்த பிரதிபிம்பம் தான் ஜீவன் எனப்படும். இந்த ஜீவன் தான் சரீரத்தில் நான் என்று அபிமானம் கொள்கிறன். **(114)**

## चरतरतरङ्गसङ्गात्प्रतिबिम्बं भास्करस्य च चलं स्यात् ।
## अस्ति तथा चञ्चलता चैतन्ये चित्तचाञ्चल्यात् ॥ ११५ ॥

**சரதரதரங்க³ஸங்கா³த்ப்ரதிபி³ம்ப³ம் பா⁴ஸ்கரஸ்ய ச சலம் ஸ்யாத் ।**
**அஸ்தி ததா² சஞ்சலதா சைதன்யே சித்தசாஞ்சல்யாத் ॥ 115 ॥**

| | | |
|---|---|---|
| **भास्करस्य**<br>**பா⁴ஸ்கரஸ்ய** | = | சூரியனுடைய, |
| **प्रतिबिम्बं**<br>**ப்ரதிபி³ம்ப³ம்** | = | பிரதிபிம்பம், |
| **चरतर**<br>**சரதர** | = | மிகவும் அசைகின்ற, |
| **तरङ्ग**<br>**தரங்க³** | = | அலைகளின், |
| **सङ्गात्**<br>**ஸங்கா³த்** | = | சேர்க்கையால், |
| **चलं**<br>**சலம்** | = | அசைவதாக, |
| **स्यात्**<br>**ஸ்யாத்** | = | ஆகும், |
| **तथा**<br>**ததா²** | = | அதுபோலவே, |
| **चित्तचाञ्चल्यात्**<br>**சித்தசாஞ்சல்யாத்** | = | புத்தியினுடைய சலனத்திஞல், |
| **चैतन्ये**<br>**சைதன்யே** | = | சைதன்யத்தில், |
| **चञ्चलता**<br>**சஞ்சலதா** | = | அசையும் தன்மை, |
| **अस्ति**<br>**அஸ்தி** | = | இருக்கிறது. |

ஸமுத்திரத்தில் அலைகள் எப்பொழுதும் அசைந்து கொண்டே இருக்கின்றன. அதனுல் அவைகளில் பிரதி பலிக்கும் சூரியனும் அசைவதுபோல் காணப்படுகின்றது. ஆனுல் உண்மையில் ஆகாசத்தில் உள்ள சூரியன் அசைவதில்லை. ஜலத்தின் அசைவு ஸூர்யனிடம் காணப்படுகிறது. அதுபோல சுத்த சைதன்யம் அசைவற்றது. ஆனுலும் சலிக்கும் புத்தியில் ப்ரதிபலிப்பதால் புத்தியிலுள்ள சலனம் ஆத்மாவிலும் தோன்றுகிறது. உண்மையில் புத்திக்குத்தான் சாஞ்சல்யமே தவிற ஆத்மாவுக்குச் சலனம் கிடையாது. **(115)**

## नन्वर्कप्रतिबिम्बः सलिलादिषुयः स चावभासयति ।
## किमितरपदार्थनिवहं प्रतिबिम्बोऽप्यात्मनस्तद्वत् ॥ ११६ ॥

**நன்வர்க ப்ரதிபி³ம்ப³ꞏ ஸலிலாதி³ஷுயꞏ ஸ சாவபா⁴ஸயதி ।**
**கிமிதர பதா³ர்த²  னிவஹம் ப்ரதிபி³ம்போ³(அ)ப்யாத்மனஸ் தத்³வத் ॥ 116 ॥**

**सलिलादिषु** = தண்ணீர் முதலியவற்றில்,

**ஸலிலாதி³ஷு**

**यः** = யாதொரு,

**யꞏ**

**अर्कप्रतिबिम्बः** = சூரியனுடைய பிரதிபிம்பம் தோன்றுகின்றதோ,

**அர்கப்ரதிபி³ம்ப³ꞏ**

**सः** = அது,

**ஸ:**

**इतरपदार्थनिवहं** = மற்றப்பொருள்களின் கூட்டத்தை,

**இதரபதா³ர்த²னிவஹம்**

**अवभासयति किं** = விளங்கச் செய்கின்றதா?

**அவபா⁴ஸயதி கிம்**

**तद्वत्** = அது போலவே,

**தத்³வத்**

**आत्मनः** = ஆத்மாவினுடைய,

**ஆத்மனꞏ**

**प्रतिबिम्बः अपि** = பிரதி பிம்பமும்,

**ப்ரதிபி³ம்ப³ꞏ அபி**

**ननु** = அல்லவா?

**நனு**

ஆகாசத்தில் பிரகாசிக்கின்ற சூர்யன் எல்லாப் பொருள்களையும் பிரகாசிக்கச் செய்கின்றது. ஆனுல் தண்ணீரில் பிரதிபலிக்கும் சூரிய பிரதிபிம்பம் மற்றப் பொருள்களை நன்ருக விளங்கச் செய்வதில்லை. ஆகவே ஸூரிய பிரதிபிம்ப திருஷ்டாந்தத்தைக் கொண்டு அந்தக்கரண பிரதி பிம்பம் ஜீவன் என்று கூறினுல்

ஸூர்ய பிரதிபிம்பத்தைப் போலவே ஜீவனுக்கும் ஒன்றையும் பிரகாசப்படுத்தும் சக்தி இல்லை என்று ஆகிவிடுமே, இது சரியல்லவே! **(116)**

## प्रतिफलितं यत्तेजः सवितुः कांस्यादिपात्रेषु ।
## तदनुप्रविष्टमन्तर्गृहमन्यानर्थान् प्रकाशयति ॥ ११७ ॥

**ப்ரதிப²லிதம் யத்தேஜ: ஸவிது: காம்ஸ்யாதி³பாத்ரேஷு ।**
**தத³னுப்ரவிஷ்டமந்தர்க்³ருஹமன்யானர்தா²ன் ப்ரகாஶயதி ॥ 117 ॥**

**सवितुः** = சூரியனுடைய,
**ஸவிது:**
**यत्** = எந்த,
**யத்**
**तेजः** = ஒளி,
**தேஜ:**
**कांस्यादिपात्रेषु** = வெண்கலம் முதலிய பாத்திரங்களில்,
**காம்ஸ்யாதி³பாத்ரேஷு**
**प्रतिफलितं** = பிரதிபலித்துள்ளதோ,
**ப்ரதிப²லிதம்**
**अनुप्रविष्टं** = ப்ரதிபலித்த,
**அனுப்ரவிஷ்டம்**
**तत्** = அந்த ஒளி,
**தத்**
**अन्तर्गृहं** = வீட்டிற்குள்,
**அந்தர்க்³ருஹம்**
**अन्यान्** = மற்ற,
**அன்யான்**
**अर्थान्** = பொருள்களை,
**அர்தா²ன்**
**प्रकाशयति** = விளக்குகின்றது.
**ப்ரகாஶயதி**

முன்பு எழுப்பப்பட்ட ஆக்ஷேபத்திற்கு இங்கு வேறு ஒரு உதாஹரணத்தைக் கொண்டு ஸமாதானம் கூறப்படுகின்றது. சூரியனுடைய ஒளி வெண்கலப் பாத்திரம், வெள்ளிப் பாத்திரம் முதலியவற்றில் பிரதிபலிக்கிறது. அதனால் அப்பாத்திரங்கள் ஒளி பொருந்தியவைகளாக ஆகின்றன. அவ்வாறு அவைகளில் பிரதிபலிக்கப்பட்ட ஒளியே வீட்டிற்குள் உள்ள எல்லாப் பொருள்களையும் பிரகாசப்படுத்துகின்றது. **(117)**

**चित्प्रतिबिम्बस्तद्वद्बुद्धिषु यो जीवतां प्राप्तः ।**
**नेत्रादीन्द्रियमार्गैर्बहिरर्थान्सोऽवभासयति ॥ ११८ ॥**

**சித்ப்ரதிபி³ம்ப³ஸ் தத்³வத்³ பு³த்³தி⁴ஷு யோ ஜீவதாம் ப்ராப்த꞉ ।**
**நேத்ராதீ³ந்த்³ரிய மார்கை³ர் ப³ஹிரர்தா²ன் ஸோ(அ)வபா⁴ஸயதி ॥ 118 ॥**

**तद्वत्** = அதுபோல்,
**தத்³வத்**

**बुद्धिषु** = புத்திகளில்,
**பு³த்³தி⁴ஷு**

**यः** = யாதொரு,
**ய꞉**

**चित्प्रतिबिम्बः** = சுத்த சைதன்யத்தின் பிரதிபிம்பம்,
**சித்ப்ரதிபி³ம்ப³꞉**

**जीवतां** = ஜீவனின் தன்மையை,
**ஜீவதாம்**

**प्राप्तः** = அடைந்ததோ,
**ப்ராப்த꞉**

**सः** = அது,
**ஸ꞉**

**नेत्रादीन्द्रियमार्गैः** = கண் முதலான பொறிகளின் வழியாக,
**நேத்ராதீ³ந்த்³ரிய மார்கை³꞉**

**बहिरर्थान्** = வெளியே உள்ள பொருள்களை,
**ப³ஹிரர்தா²ன்**

**अवभासयति** = விளக்குகிறது.
**அவபா⁴ஸயதி**

அதுபோலவே சுத்த சைதன்யமும் புத்தியில் பிரதி பலிக்கிறது. அதனால் அது ஜீவன் என்ற நிலையை அடைந்தது. அந்த ஜீவசைதன்யம் கண் முதலான ஐம்புலன்களின் வழியாக வெளியில் உள்ள எல்லாப் பொருள்களையும் விளங்கச் செய்கிறது. **(118)**

## १०. अद्वैतप्रकरणम्

### 10. அத்³வைத ப்ரகரணம்

**(அவதாரிகை)** ஒரே ப்ரஹ்ம தத்வம்தான் உபாதிகளால் பலவாகத் தோன்று கிறது என்னும் அத்வைத ஸித்தாந்தத்தை பிரமாணங்களால் விவரிக்கிறார்: -

**तदिदं य एवमार्यो वेद ब्रह्माहमस्मीति ।**
**स इदं सर्वं च स्यात्तस्य हि देवाश्च नेशतेऽभूत्यै ॥ ११९ ॥**

**ததி3த3ம் ய ஏவமார்யோ வேத3 ப்3ரஹ்மாஹமஸ்மீதி ।**
**ஸ இத3ம் ஸர்வம் ச ஸ்யாத்தஸ்ய ஹி தே3வாஶ்ச நேஶதே(அ)பூ4த்யை ॥ 119 ॥**

**एषां स भवत्यात्मा योऽन्यामथ देवतामुपास्ते ।**
**अहमन्योऽसावन्यश्चेत्थं यो वेद पशुवत्सः ॥ १२० ॥**

**ஏஷாம் ஸ ப4வத்யாத்மா யோ(அ)ந்யாமத2 தே3வதாமுபாஸ்தே ।**
**அஹமன்யோ(அ)ஸாவன்யஶ்சேத்த2ம் யோ வேத3 பஶுவத்ஸ: ॥ 120 ॥**

**इत्युपनिषदामुक्तिस्तथा श्रुतिर्भगवदुक्तिश्च ।**
**ज्ञानी त्वात्मैवेयं मतिर्ममेत्यत्र युक्तिरपि ॥ १२१ ॥**

**இத்யுபநிஷதா3முக்திஸ்ததா2 ஶ்ருதிர்ப4க3வது3க்திஶ்ச ।**
**ஜ்ஞானீ த்வாத்மைவேயம் மதிர்மமேத்யத்ர யுக்திரபி ॥ 121 ॥**

| | | |
|---|---|---|
| **य:**<br>**ய:** | = | எந்த, |
| **आर्य:**<br>**ஆர்ய:** | = | மஹான், |
| **तदिदं**<br>**ததி3த3ம்** | = | அந்த இந்த எல்லா பிராணிகளுடைய புத்தியில் நுழைந்துள்ள சுத்த ப்ரஹ்ம சைதன்யத்தை, |
| **अहं ब्रह्म अस्मि**<br>**அஹம் ப்3ரஹ்ம அஸ்மி** | = | நான் ப்ரஹ்ம சைதன்யமாக இருக்கிறேன், |
| **इति एवं**<br>**இதி ஏவம்** | = | என்றிவ்வாறு, |
| **वेद**<br>**வேத3** | = | அறிந்து கொள்கிறானோ, |
| **स:**<br>**ஸ:** | = | அவன், |
| **इदं सर्वं च**<br>**இத3ம் ஸர்வம் ச** | = | இது எல்லாமாகவும், |
| **स्यात्**<br>**ஸ்யாத்** | = | ஆவான், |
| **तस्य**<br>**தஸ்ய** | = | அவனுக்கு, |

| | | |
|---|---|---|
| **अभूत्यै**<br>**அபூ4த்யை** | = | ஸர்வாத்மபாவம் ஏற்படாதபடி செய்ய, |
| **देवाश्च**<br>**தே3வாஶ்ச** | = | தேவர்களும், |
| **नेशते**<br>**நேஶதே** | = | சக்தி உள்ளவர்கள் அல்ல, |
| **एषां**<br>**ஏஷாம்** | = | இந்த தேவர்களுக்கு, |
| **सः**<br>**ஸ:** | = | அவன், |
| **आत्मा**<br>**ஆத்மா** | = | ஆத்மாவாக, |
| **भवति**<br>**ப4வதி** | = | ஆகிறுன், |
| **अथ**<br>**அத2** | = | இப்படியல்லாமல், |
| **यः**<br>**ய:** | = | எவன், |
| **देवतां**<br>**தே3வதாம்** | = | பரமாத்வை, |
| **अन्यां**<br>**அன்யாம்** | = | வேறுக, |
| **उपास्ते**<br>**உபாஸ்தே** | = | உபாஸிக்கிறுனே, |
| **यः**<br>**ய:** | = | எவன், |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **अन्यः**<br>**அன்ய:** | = | வேறு, |
| **असौ च**<br>**அஸௌ ச** | = | அவரும், |
| **अन्यः**<br>**அன்ய:** | = | வேறு, |
| **इत्थं**<br>**இத்த2ம்** | = | இவ்வாறு, |

वेद = அறிகிருனே,
வேத³
सः = அவன்,
ஸ:
पशुवत् = பசுவுக்குத் துல்யமானவன்,
பஶுவத்
इति = என்று,
இதி
उपनिषदां = உபநிஷத்துக்களின்,
உபநிஷதா³ம்
उक्तिः = வசனம்,
உக்தி:
तथा = அவ்வாறு,
ததா²
श्रुतिः = ச்ருதியும்,
ஶ்ருதி:
ज्ञानी तु = ஞானியோவெனில்,
ஞானீ து
आत्मैव = ஆத்மாதான்,
ஆத்மைவ
इयं = இது,
இயம்
मम = என்னுடைய,
மம
मतिः = தீர்மானம்,
மதி:
इति = என்ற,
இதி
भगवदुक्तिश्च = பகவானுடைய வசனமும் காணப்படுகின்றது,
ப⁴க³வது³க்திஶ்ச
अत्र = இந்த விஷயத்தில்,
அத்ர
युक्तिरपि = யுக்தியும் இருக்கிறது.
யுக்திரபி

பிருஹதாரண்யக உபநிஷத்தில் 1 - வது அத்யாயம் 4 - வது ப்ராஹ்மணத்தில் பின் வரும் மந்திரம் காணப்படுகிறது.

**तदिदमप्येतर्हि य एवं वेदाऽहं ब्रह्मास्मीति स इद सर्वं भवति तस्य ह न देवाश्चनाभूत्या ईशत।**
**आत्मा ह्येषा स भवति अथ योऽन्यां देवतामुपास्तेऽन्योऽसावन्योऽहमस्मीति न स वेद यथा पशु:**

**ததி³த³மப்யேதர்ஹி ய ஏவம் வேதா³(அ)ஹம் ப்³ரஹ்மாஸ்மீதி ஸ இத³ ஸர்வம் ப⁴வதி தஸ்ய ஹ ந தே³வாஶ்சநாபூ⁴த்யா ஈஶத।**
**ஆத்மா ஹ்யேஷா ஸ ப⁴வதி அத² யோ(அ)ன்யாம் தே³வதாமுபாஸ்தே (அ)ன்யோ (அ)ஸாவன்யோ(அ)ஹமஸ்மீதி ந ஸ வேத³ யதா² பஶு:**

இந்த மந்திரத்திலுள்ள பதங்கள் இந்த சுலோகங்களில் காணப்படுகின்றன. "இப்பொழுதும் எவன் ஸர்வாத்மாவான ப்ரஹ்மம் நான் என்று அறிந்து கொள்கிறனே அவன் வாமதேவர்போல ஸர்வாத்மாவாக ஆகி விடுகிறன். இந்த ஞானி தேவர்களுக்கும் ஆத்மாவாக இருக்கிறபடியால் இவனுக்கு ப்ரஹ்மபாவம் ஏற்படாமல் தடுக்க தேவர்களாலும் முடியாது. அத்வைதமான ப்ரஹ்ம தத்வத்தை நான் என்று அறிந்து கொள்ளாமல் அவர் வேறு, தான் வேறு என்று எண்ணிக்கொண்டு தன்னைக்காட்டிலும் வேறுக உபாஸிக்கிறவன் உண்மை அறிவு கொண்டவன் அல்ல அவன் பசுவுக்குத் துல்யமானவன்." என்பது இம் மந்திரத்தின் கருத்து. இதில் "ப்ரஹ்மதத்வம் ஒன்றே உண்மைப் பொருள். அதுவே எல்லாமாகத் தோன்றுகிறது. ஜீவனும் அந்த ப்ரஹ்மம் தான்" என்ற அத்வைத ஸித்தாந்தம் காட்டப்பட்டிருக்கிறது. இந்த உபநிஷத் அத்வைதத்திற்கு ப்ரமாணம். இதுமட்டுமல்ல. மற்றும் பல சுருதிகள் இதே கருத்தைக் காட்டுகின்றன.

**'ज्ञानी त्वात्मैव मे मतम्'**

**'ஜ்ஞானீ த்வாத்மைவ மே மதம்'**

(ஞானியோவெனில் நான்தான் என்பது என் தீர்மானம்) என்ற பகவத் கீதாவாக்யமும் இதற்கு ப்ரமாணம். இதற்குத் தகுந்த யுக்திகளும் இருக்கின்றன. **(119-121)**

**ऋजु वक्रं वा काष्ठं हुताशदग्धं सदग्नितां याति ।**
**तत्किं हस्तग्राह्यं ऋजुवाकारसत्वेऽपि ॥ १२२ ॥**

**ருஜு வக்ரம் வா காஷ்ட²ம் ஹுதாஶத³க்³த⁴ம் ஸத³க்³னிதாம் யாதி ।**
**தத்கிம் ஹஸ்தக்³ராஹ்யம் ருஜுவாகாரஸத்வே(அ)பி ॥ 122 ॥**

| | | |
|---|---|---|
| **ऋजு**<br>**ருஜு** | = | நேராகவோ, |
| **वा**<br>**வா** | = | அல்லது, |
| **वक्रं**<br>**வக்ரம்** | = | கோணலாகவோ உள்ள, |
| **काष्ठं**<br>**காஷ்ட²ம்** | = | கட்டை, |

| | | |
|---|---|---|
| **हुताशदग्धं**<br>**ஹுதாஶத³க்³த⁴ம்** | = | நெருப்பினுல் கொளுத்தப்பட்டதாக, |
| **सत्**<br>**ஸத்** | = | இருந்துகொண்டு, |
| **अग्नितां**<br>**அக்³னிதாம்** | = | நெருப்பின் தன்மையை, |
| **याति**<br>**யாதி** | = | அடைகிறது, |
| **ऋजुवाकारसत्वे अपि**<br>**ருஜுவாகாரஸத்வே அபி** | = | நேர் அல்லது கோணலான தோற்றத்தைப் பெற்றதாயினும், |
| **तत्**<br>**தத்** | = | அது, |
| **हस्तग्राह्यं किं**<br>**ஹஸ்தக்³ராஹ்யம் கிம்** | = | கையினுல் பிடிக்கத்தக்கதாக ஆகின்றதா? |

நேராகவோ அல்லது கோணலாகவோ உள்ள கட்டை கையினுல் எடுக்கத் தக்கதாக இருக்கின்றது. நெருப்புபற்றி எரியும்பொழுது அக்கட்டை அக்னிமயமாக ஆகிவிடுகின்றது. ஆனுல் அதனுடைய தோற்றம் மாறுபடுவதில்லை. அது முன் போலவே நேராகவோ அல்லது வளைந்தோ நிற்கின்றது. ஆனுல் அது அக்னிமயமாக இருக்கும்பொழுது அதைக் கையால் எடுக்கமுடிகின்றதா? இல்லை என்பது திண்ணம். **(122)**

**एवं य आत्मनिष्ठो ह्यात्माकारश्च जायते पुरुषः ।**
**देही दृश्यतेऽसौ परं त्वसौ केवलो ह्यात्मा ॥ १२३ ॥**

**ஏவம் ய ஆத்மநிஷ்டோ² ஹ்யாத்மாகாரஶ்ச ஜாயதே புருஷ: ।**
**தே³ஹீ த்³ருஶ்யதே(அ)ஸௌ பரம் த்வஸௌ கேவலோ ஹ்யாத்மா ॥ 123 ॥**

| | | |
|---|---|---|
| **एवं**<br>**ஏவம்** | = | இம்மாதிரியே, |
| **यः पुरुषः**<br>**ய: புருஷ:** | = | எந்த மனிதன், |
| **आत्मनिष्ठः**<br>**ஆத்மநிஷ்ட²:** | = | ஆத்மாவிலேயேநிலைத்துநின்று, |
| **आत्माकारः च**<br>**ஆத்மாகார: ச** | = | ஆத்ம ஸ்வரூபியாகவே, |
| **जायते**<br>**ஜாயதே** | = | ஆகிவிடுகின்றுனே, |

**असौ** = அவன்,
**அஸௌ**

**देही इव** = சரீரத்துடன் கூடியவன் போல்,
**தே3ஹீ இவ**

**दृश्यते** = காணப்படுகிறுன்,
**த்3ருஶ்யதே**

**परन्तु** = ஆனுல்,
**பரந்து**

**असौ** = அவன்,
**அஸௌ**

**केवलः आत्मा हि** = சுத்தசைதன்யமான பரமாத்மாதான் அல்லவா?
**கேவலः ஆத்மா ஹி**

அதுபோலவே அநேக காலமாக ஆத்மானுஸந்தானம் செய்ததின் பயனுக பரமாத்மாவினிடத்திலேயே ஈடுபட்டு, நிஜலகொண்டு தன்மயமாக நிற்கின்ற ஒரு மகாபுருஷன் வெளித் தோற்றத்தால் மற்றவர்களைப்போலவே தேஹத்துடன் கூடிய வனுக விளங்கினுலும், அவன் அஞ்ஞானம் நீங்கியதால் சுத்தமான பரமாத்மாவே என்பது நிச்சயம். **(123)**

**(அவதாரிகை)** ஒரே தத்வம் உபாதி பேதத்தால் பலவாறுகத் தோன்றுவதற்குப் பல திருஷ்டாந்தங்களைக் கூறுகிறுர்: -

**प्रतिफलति भानुरेकोऽनेकशरावोदकेषु यथा ।**
**तद्वदसौ परमात्मा ह्येकोऽनेकेषु देहेषु ॥ १२४ ॥**

**ப்ரதிப2லதி பா4னுரேகோ(அ)னேகஶராவோத3கேஷு யதா2 ।**
**தத்3வத3ஸௌ பரமாத்மா ஹ்யேகோ(அ)னேகேஷு தே3ஹேஷு ॥ 124 ॥**

**यथा** = எவ்வாறு,
**யதா2**

**अनेकशरावोदकेषु** = பல பாத்திரங்களிலுள்ள தண்ணீர்களில்,
**அனேகஶராவோத3கேஷு**

**एकः भानुः** = ஒரு சூரியன்,
**ஏகः பா4னுः**

**प्रतिफलति** = (பலவாக) பிரதிபலிக்கின்றதோ,
**ப்ரதிப2லதி**

**तद्वत्** = அவ்வாறே,
**தத்3வத்**

**एक:** = ஒன்ருகிய,

**ஏக:**

**असौ परमात्मा** = அந்தப் பரம்பொருள்,

**அஸெள பரமாத்மா**

**अनेकेषु** = பல,

**அனேகேஷு**

**देहेषु** = தேகங்களில்,

**தே³ஹேஷு**

**प्रतिफलति** = (பலவாக) தோன்றுகின்றது.

**ப்ரதிப²லதி**

ஆகாயத்தில் இருக்கும் சூரியன் ஒருவனுயிருந்தாலும் தண்ணீர் நிறைந்த பல பாத்திரங்களில் பிரதிபலிக்கும் பொழுது பல சூர்யன்களாகத் தோற்றமளிக்கின்ருன். அதுபோலவே எங்கும் நிறைந்த பரமாத்மா ஒன்ருயிருந்தாலும் பல சரீரங்களின் சம்பந்தத்தால் பலவாகக் காணப்படுகிருன். **(124)**

**(அவதாரிகை)** உபாதி தர்மங்கள் பிம்பத்தைச் சேராது: -

**दैवादेकशरावे भग्ने किं वा विलीयते सूर्यः ।**
**प्रतिबिम्बचञ्चलत्वादर्कः किं चञ्चलो भवति ॥ १२५ ॥**

**தை³வாதே³க ஶராவே ப⁴க்³னே கிம் வா விலீயதே ஸூர்ய: ।**
**ப்ரதிபி³ம்ப³ சஞ்சலத்வாத³ர்க: கிம் சஞ்சலோ ப⁴வதி ॥ 125 ॥**

**दैवात्** = தெய்வச்செயலாக,

**தை³வாத்**

**एकशरावे भग्ने** = ஒரு பாத்திரம் உடைந்தவுடன்,

**ஏகஶராவே ப⁴க்³னே**

**सूर्यः** = கதிரவன்,

**ஸூர்ய:**

**किं वा विलीयते** = அழிந்து விடுகிருனு என்ன?

**கிம் வா விலீயதே**

**प्रतिबिम्बचञ्चलत्वात्** = பிரதிபிம்பம் அசையும் தன்மை வாய்ந்துள்ள

**ப்ரதிபி³ம்ப³சஞ்சலத்வாத்** தாயின்,

**अर्कः** = சூரியன்,

**அர்க:**

**किं चञ्चलः भवति** = அசைகின்றவனுக ஆகின்ருனு?

**கிம் சஞ்சல: ப⁴வதி**

துரதிருஷ்ட வசமாக அப்பாத்திரங்களில் ஒன்று உடைந்துவிட்டால் சூரியன் நாசமடைந்துவிடுகின்றுனு? இல்ஜல அல்லவா அதுபோலவே சரீரங்களில் ஒன்று அழிந்து விட்டாலும் ஆத்மா நாசம் அடைவதில்ஜல பாத்திரத்திலுள்ள பிரதிபிம்பம் அசைவதால் சூரியன் அசைகிறுனு? இல்ஜல அல்லவா அதுபோல பிரதிபிம்பமான ஜீவனிடம் காணப்படும் விகாரங்கள் பிம்பமான ஆத்மாவுக்குக் கிடையாது. **(125)**

**(அவதாரிகை)** ஒரே ஆத்மாவினுலேயே உலகில் எல்லா வியவஹாரங்களும் நடைபெறும்: -

**स्वव्यापारं कुरुते यथैकसवितुः प्रकाशेन ।**
**तद्वच्चराचरमिदं ह्येकात्मसत्तया चलति ॥ १२६ ॥**

**ஸ்வவ்யாபாரம் குருதே யதை²கஸவிது꞉ ப்ரகாஶேன ।**
**தத்³வச்சராசரமித³ம் ஹ்யேகாத்ம ஸத்தயா சலதி ॥ 126 ॥**

**यथा** = எவ்வாறு,
**யதா²**
**चराचरं इदं** = ஸ்தாவர ஜங்கமாத்மகமான இந்த உலகம்,
**சராசரம் இத³ம்**
**एकसवितुः** = ஒரே சூரியனுடைய,
**ஏகஸவிது꞉**
**प्रकाशेन** = ஒளியால்,
**ப்ரகாஶேன**
**स्वव्यापारं** = தன்னுடைய தொழிஜல,
**ஸ்வவ்யாபாரம்**
**कुरुते** = செய்கின்றதோ,
**குருதே**
**तद्वत्** = அதுபோலவே,
**தத்³வத்**
**एकात्मसत्तया** = ஒரே பரமாத்மாவினுடைய ஸத்தையால்,
**ஏகாத்மஸத்தயா**
**चलति** = (பிரபஞ்சம்) இயங்குகின்றது.
**சலதி**

ஒரே சூரியனுடைய ஒளியால் உலகிலுள்ள அஜனத்தும் தன் தன் கார்யங் கஜளச் செய்கிறது அதுபோலவே ஒரே ஒரு பரமாத்மா இருப்பதாலேயே இந்த சராசரப் பிரபஞ்சம் முழுவதும் இயங்குகிறது. **(126)**

**(அவதாரிகை)** விருத்தமான பல காரியங்கள் ஒன்றிலிருந்து ஏற்படலாம்: -

## येनोदकेन कदली चम्पकजात्यादयः प्रवर्धन्ते ।
## मूलकपलाण्डुलशुनास्तेनैवैते विभिन्नरसगन्धाः ॥ १२७ ॥

**யேனோத$^{3}$கேன கத$^{3}$லீ சம்பக ஜாத்யாத$^{3}$ய: ப்ரவர்த$^{4}$ந்தே ।**
**மூலக பலாண்டு$^{3}$ லஶுனாஸ்தேனைவைதே விபி$^{4}$ன்ன ரஸக$^{3}$ந்தா$^{4}$: ॥ 127 ॥**

| | | |
|---|---|---|
| **येन उदकेन**<br>**யேன உத$^{3}$கேன** | = | எந்த ஜலத்தால், |
| **कदली**<br>**கத$^{3}$லீ** | = | வாழை, |
| **चम्पक**<br>**சம்பக** | = | சண்பகம், |
| **जात्यादयः**<br>**ஜாத்யாத$^{3}$ய:** | = | ஜாதி முதலியவைகள், |
| **प्रवर्धन्ते**<br>**ப்ரவர்த$^{4}$ந்தே** | = | வளருகின்றனவோ, |
| **तेनैव**<br>**தேனைவ** | = | அந்த ஜலத்தாலேயே, |
| **विभिन्नरसगन्धाः**<br>**விபி$^{4}$ன்ன ரஸக$^{3}$ந்தா$^{4}$:** | = | வெவ்வேறான ருசி, வாசனைகளுடன்கூடிய, |
| **एते**<br>**ஏதே** | = | இந்த, |
| **मूलक**<br>**மூலக** | = | முள்ளங்கி, |
| **पलाण्डु**<br>**பலாண்டு$^{3}$** | = | வெங்காயம், |
| **लशुनाः**<br>**லஶுனா:** | = | பூண்டு, இவைகளும், |
| **प्रवर्धन्ते**<br>**ப்ரவர்த$^{4}$ந்தே** | = | வளர்கின்றன. |

வாழை, சண்பகம், ஜாதி, முல்லை, முள்ளங்கி, வெங்காயம், பூண்டு மற்றும் முள்ள பலவற்றிற்கும் ஒரே விதமான நீர்தான் பாய்கிறது. ஆயினும் அவைகளின் சுவை, வாசனை முதலியன வேறுபட்டிருக்கின்றன. அதுபோலவே ஒரே ஒரு பரம் பொருள் தான் எல்லா ஜீவ ராசிகளுக்குள்ளும் நிறைந்து நிற்கின்றது அவ்வாறு இருப்பினும் அவைகளின் ஸ்வபாவம் வேறுபட்டுள்ளது. **(127)**

**एको हि सूत्रधारः काष्ठप्रकृतीरनेकशो युगपत् ।**
**स्तम्भाग्रपट्टिकायां नर्तयतीह प्रगूढतया ॥ १२८ ॥**

**ஏகோ ஹி ஸூத்ரதா⁴ர: காஷ்ட²ப்ரக்ருதீரனேகஶோ யுக³பத் ।**
**ஸ்தம்பா⁴க்³ரபட்டிகாயாம் நர்தயதீஹ ப்ரகூ³ட⁴தயா ॥ 128 ॥**

**एकः** = ஒரே,
**ஏக:**
**सूत्रधारः** = பொம்மலாட்டக்காரன்,
**ஸூத்ரதா⁴ர:**
**प्रगूढतया** = தன்னை மறைத்துவைத்துக்கொண்டு,
**ப்ரகூ³ட⁴தயா**
**स्तम्भाग्रपट्टिकायां** = தூணின்மேல் தொங்கவிடப்பட்டுள்ள பட்டிகை
**ஸ்தம்பா⁴க்³ரபட்டிகாயாம்** யில்,
**इह** = இங்கு,
**இஹ**
**युगपत्** = ஒரே சமயத்தில்,
**யுக³பத்**
**काष्ठप्रकृतीः** = மரத்தால் செய்யப்பட்ட பல பொம்மைகளை,
**காஷ்ட²ப்ரக்ருதீ:**
**अनेकशः** = பலவாறுக,
**அனேகஶ:**
**नर्तयति हि** = ஆட்டிவைக்கிறுன் அல்லவா?
**நர்தயதி ஹி**

ஒரே பொம்மலாட்டக்காரன் திரைக்குப் பின்னுல் மறைந்து நின்றுகொண்டு நூலைமட்டும் பிடித்துக்கொண்டு பல பொம்மைகளை ஒரே சமயத்தில் பலவாறுக ஆட்டிவைக்கிறுன். சூத்ரதாரன் கண்ணுக்குத் தெரிவதில்லை. அதனுல் அசேதனமான பொம்மைகளே வெளியில் வந்து ஆடுவது போலத் தோன்றுகின்றன. அதுபோலவே பரமாத்மாவின் ஸம்பந்தத்தால்தான் ஜடமான சரீரங்கள் பற்பல காரியங்களில் ஈடுபடுகின்றன. ஆனுலும் ஆத்மா புலன்களுக்குப் புலப்படாததால் அவைகள் தாமே இயங்குபவனபோல் தோன்றுகின் றன. உண்மையில் பரமாத்மாதான் அனைத்தையும் ஆட்டிவைக்கிறுன். **(128)**

**(அவதாரிகை)** விலக்ஷணமான பல வஸ்துக்களுக்கு மூலகாரணம் ஒன்று தான்: -

**गुडखण्डशर्कराद्या भिन्नाः स्युर्विकृतयो यथैकेक्षोः ।**
**केयूरकङ्कणाद्या यथैकहेम्नो भिदाश्च पृथक् ॥ १२९ ॥**

**கு³ட³க²ண்ட³ ஶர்கராத்³யா பி⁴ன்னா: ஸ்யுர் விக்ருதயோ யதை²கேக்ஷோ: ।
கேயூர கங்கணாத்³யா யதை²கஹேம்னோ பி⁴தா³ஸ்ச ப்ருத²க் ॥ 129 ॥**

## एवं पृथक्स्वभावं पृथगाकारं पृथग्वृत्ति ।
## जगदुच्चावच मुच्चैरेकेनैवात्मना चलति ॥ १३० ॥

**ஏவம் ப்ருத²க் ஸ்வபா⁴வம் ப்ருத²கா³காரம் ப்ருத²க்³வ்ருத்தி ।
ஜக³து³ச்சாவச முச்சைரேகேனைவாத்மனா சலதி ॥ 130 ॥**

**यथा** = எவ்வாறு,
**யதா²**

**गुड** = வெல்லம்,
**கு³ட³**

**खण्ड** = கற்கண்டு,
**க²ண்ட³**

**शर्कराद्या:** = சர்க்கரை முதலியன,
**ஶர்கராத்³யா:**

**एकेक्षो:** = ஒரே கரும்பினுடைய,
**ஏகேக்ஷோ:**

**भिन्ना:** = வெவ்வேறான,
**பி⁴ன்னா:**

**विकृतय:** = மாறுபட்ட ரூபங்களாக,
**விக்ருதய:**

**स्यु** = ஆகுமோ,
**ஸ்யு**

**यथा** = எவ்வாறு,
**யதா²**

**केयूर** = தோள்வளை,
**கேயூர**

**कङ्कणाद्या:** = கங்கணம் முதலியவைகள்,
**கங்கணாத்³யா**

**एकहेम्न:** = ஒரே தங்கத்தினுடைய,
**ஏகஹேம்ன:**

**पृथक्** = தனித்தனியான,
**ப்ருத²க்**

**भिदा:** = மாறுபட்ட நகைகளாக,
**பி⁴தா³:**

**स्युः** = ஆகுமோ,

**ஸ்யு**

**एवं** = இம்மாதிரியாகவே,

**ஏவம்**

**पृथक्स्वभावं** = தனித்தனியான தன்மை வாய்ந்ததும்,

**ப்ருத2க் ஸ்வபா4வம்**

**पृथगाकारं** = தனித்தனியான தோற்றத்தைப் பெற்றதும்,

**ப்ருத2கா3காரம்**

**पृथग्वृत्ति** = தனித்தனியான செயலுள்ளதும்,

**ப்ருத2க்3வ்ருத்தி**

**उच्चावचं** = மேலும் கீழுமாக உள்ள,

**உச்சாவசம்**

**जगत्** = உலகம்,

**ஜக3த்**

**एकेन आत्मना एव** = ஒரு பரமாத்மாவினாலேயே,

**ஏகேன ஆத்மனா ஏவ**

**उच्चैः** = நன்கு,

**உச்சைः**

**चलति** = இயங்குகின்றது.

**சலதி**

ஒரே கரும்பிலிருந்து வெல்லம், கற்கண்டு, சர்க்கரை முதலான வெவ்வேறான காரியங்கள் ஏற்படுவது போலவும் ஒரே தங்கத்திலிருந்து தோள்வளை, காப்பு முதலான வெவ் வேறான உருவமுள்ள பல பொருள்கள் ஏற்படுவது போலவும், ஒரே ஆத்மாவிலிருந்து வெவ்வேறான தன்மை, உருவம், செயல் இவை கொண்டதும் உயர்ந்ததும் தாழ்ந்த்துமான பலவித பிரபஞ்சம் முழுவதும் உண்டாகி இயங்குகிறது. **(129-130)**

**स्कन्धधृतसिद्धमन्नं यावन्नाश्नाति मार्गगस्तावत् ।**
**स्पर्शभयक्षुत्पीडे तस्मिन्भुक्ते न ते भवतः ॥ १३१ ॥**

**ஸ்கந்த4 த்4ருத ஸித்3த4மன்னம் யாவந்நாஶ்னாதி மார்க3க3ஸ்தாவத் ।**
**ஸ்பர்ஶ ப4ய க்ஷுத்பீடே3 தஸ்மின் பு4க்தே ந தே ப4வதः ॥ 131 ॥**

**मार्गगः** = வழிப்போக்கன்,

**மார்க3க3**:

**यावत्** = எதுவரையில்,

**யாவத்**

| | | |
|---|---|---|
| **स्कन्धधृत**<br>**ஸ்கந்த4 த்4ருத** | = | தோளில் சுமந்துகொண்டிருக்கிற, |
| **सिद्धमन्नं**<br>**ஸித்3த4மன்னம்** | = | கட்டுச் சோற்றை, |
| **न अश्नाति**<br>**ந அஶ்னுதி** | = | சாப்பிடவில்லையோ, |
| **तावत्**<br>**தாவத்** | = | அது வரையில், |
| **स्पर्शभयक्षुत्पीडे**<br>**ஸ்பர்ஶ ப4ய க்ஷுத்பீடே3** | = | பிறர் தொடுவதில் பயம் பசிப்பிணி இவை உண்டாகின்றன, |
| **तस्मिन् भुक्ते**<br>**தஸ்மின் பு4க்தே** | = | அது சாப்பிடப்பட்டவுடன், |
| **ते**<br>**தே** | = | அவைகள், |
| **न भवतः**<br>**ந ப4வத:** | = | உண்டாகிறதில்லை. |

வழிப்போக்கன் வழிச்சாப்பாட்டுக்காகச் சோற்று மூட்டையைத் தோளில் சுமந்து செல்கிறான். அதன் பாரத்தால் அவன் துன்புறுகிறான். கீழே வைத்தால் யாராவது தீண்டிவிடுவார்களோ, அல்லது எடுத்துச் சென்றுவிடுவார்களோ என்ற பயம். வழியில் செல்லச் செல்ல பசித் துன்பம் வேறு. அந்த உணவு தன்னைக் காட்டிலும் வேறாக இருக்கும்வரை இவ்வளவு துன்பமும் உண்டு. இந்த உணவைச் சாப்பிட்டுவிட்டால் அதன் பாரம் தெரிவதில்லை. பிறர் எடுத்துச்செல்வார்களோ என்ற பயமும் இல்லை. பசியும் நீங்கிவிடுகிறது. அந்த உணவு தன்னைக்காட்டிலும் வேறாக இருக்கும்வரை துன்பம்தான். தன்னுடன் ஒன்றாகக் கலந்துவிட்டால் துன்பம் இல்லை.

**'उदरमन्तरं कुरुते अथ तस्य भयं भवति'**

**'உத3ரமந்தரம் குருதே அத2 தஸ்ய ப4யம் ப4வதி'**

இதுபோல பரமாத்மாவை வேறாகத் தெரிந்துகொண்டிருக்கும்வரை துன்பம் உண்டு. இதை மாற்றித் தன் ஸ்வரூபமாகத் தெரிந்துகொண்டால் துன்பம் இல்லை. **(131)**

**मानुष मतङ्गमहिषश्वसूकरादिष्वनुस्यूतम् ।**
**यः पश्यति जगदीशं स एव भुंक्तेऽद्वयानन्दम् ॥ १३२ ॥**

**மானுஷ மதங்க3 மஹிஷஶ்வ ஸூகராதி3ஷ்வனுஸ்யூதம் ।**
**ய: பஶ்யதி ஜக3தீ3ஶம் ஸ ஏவ பு4ங்க்தே(அ)த்3வயானந்த3ம் ॥ 132 ॥**

| | | |
|---|---|---|
| **मानुष**<br>**மாநுஷ** | = | மனிதன், |
| **मतङ्ग**<br>**மதங்க³** | = | யானை, |
| **महिष**<br>**மஹிஷ** | = | எருமை, |
| **श्व**<br>**ஶ்வ** | = | நாய், |
| **सूकरादिषु**<br>**ஸூகராதி³ஷு** | = | பன்றி முதலியவற்றில், |
| **अनुस्यूतं**<br>**அநுஸ்யூதம்** | = | வியாபித்துக் கொண்டிருக்கும், |
| **जगदीशं**<br>**ஜக³தீ³ஶம்** | = | பரமேச்வரனை, |
| **यः**<br>**யः** | = | எவன், |
| **पश्यति**<br>**பஶ்யதி** | = | தெரிந்துகொள்கிறானோ, |
| **स एव**<br>**ஸ ஏவ** | = | அவனே, |
| **अद्वयानन्दम्**<br>**அத்³வயானந்த³ம்** | = | ஒப்பற்ற பேரானந்தத்தை, |
| **भुंक्ते**<br>**பு⁴ங்க்தே** | = | அனுபவிக்கிறான். |

பரமாத்மா ஒருவன்தான் உலகின் கண் விளங்கும் எல்லா ஜீவராசிகளுக்கு ள்ளும் நிறைந்திருக்கிறான். மனிதன் யானை, எருமை, நாய், பன்றி முதலான எல்லா சரீரங்களுக்குள்ளும் அந்த பரமாத்மா வியாபித்துக் கொண்டிருக்கிறது. அவனே தான் நான் என்று எவன் தெரிந்துகொள்கிறானோ அவன் துன்பத்தைக் கடந்து ஒப்பற்ற நித்யமான பேரானந்தத்தை அனுபவிக்கிறான். **(132)**

## ११. कर्तृत्वभोक्तृत्वप्रकरणम् ॥

### 11. கர்த்ருத்வபோ⁴க்த்ருத்வ ப்ரகரணம் ॥

**(அவதாரிகை)** உண்மையில் ஆத்மா அகர்த்தா, அபோக்தா என்பதை விளக்குகிறார்: -

**यद्वत्सूर्येऽभ्युदिते स्वव्यवहारं जनः कुरुते ।**
**तं न करोति विवस्वान्न कारयति तद्वदात्मापि ॥ १३३ ॥**

**யத்³வத் ஸூர்யே(அ)ப்⁴யுதி³தே ஸ்வவ்யவஹாரம் ஜனః குருதே ।**
**தம் ந கரோதி விவஸ்வான் ன காரயதி தத்³வதா³த்மாபி ॥ 133 ॥**

| | | |
|---|---|---|
| **यद्वत्** <br> **யத்³வத்** | = | எவ்வாறு, |
| **सूर्ये अभ्युदिते** <br> **ஸூர்யே அப்⁴யுதி³தே** | = | சூரியன் உதித்தவுடன், |
| **जनः** <br> **ஜனः** | = | மனிதன், |
| **स्वव्यवहारं** <br> **ஸ்வவ்யவஹாரம்** | = | தன்னுடைய வேலையை, |
| **कुरुते** <br> **குருதே** | = | செய்கிறானே, |
| **विवस्वान्** <br> **விவஸ்வான்** | = | கதிரவன், |
| **तं** <br> **தம்** | = | அதை, |
| **न करोति** <br> **ந கரோதி** | = | செய்கிறதில்லையோ, |
| **न कारयति** <br> **ந காரயதி** | = | செய்விப்பதும் இல்லையோ, |
| **तद्वत्** <br> **தத்³வத்** | = | அவ்வாறே, |
| **आत्मा अपि** <br> **ஆத்மா அபி** | = | ஆத்மாவும் (ஒரு வேலையையும் செய்வதுமில்லை, செய்விப்பதுமில்லை). |

சூரியன் உதித்தவுடன் மக்கள் எல்லோரும் தங்கள் தங்களுடைய வேலைகளில் ஈடுபடுகிறார்கள் ஆனால் சூரியன் அவர்களுடைய வேலைகளைச் செய்வதில்லை. அவர்களை அவ்வாறு செய்யும்படி அவன் தூண்டுவதுமில்லை. அவன் ஸாக்ஷி யாகத்தான் இருக்கிறான். அதுபோலவே ஆத்மாவும் ஒன்றையும் செய்வதும் இல்லை, செய்விப்பதுமில்லை ஸாக்ஷியாக மட்டுமிருக்கிறார். அதனாலேயே உலகில் எல்லாக் காரியங்களும் நடைபெறுகின்றன.

**'साक्षी चेता केवलो निर्गुणश्च'**

**'ஸாக்ஷீ சேதா கேவலோ நிர்கு³ணஶ்ச'** **(133)**

**लोहे हुतभुग्व्याप्ते लोहान्तरताड्यमानेऽपि ।**
**तस्यान्तर्गतवह्नेः किं स्यान्निर्घातजं दुःखम् ॥ १३४ ॥**

**லோஹே ஹுதபு⁴க்³வ்யாப்தே லோஹாந்தரதாட்³யமானே(அ)பி ।**
**தஸ்யாந்தர்க³தவஹ்னே꞉ கிம் ஸ்யாந்நிர்கா⁴தஜம் து³꞉க²ம் ॥ 134 ॥**

**हुतभुग्व्याप्ते** = தீயினுல் வியாபிக்கப்பட்ட,
**ஹுதபு⁴க்³வ்யாப்தே**
**लोहे** = இரும்பு,
**லோஹே**
**लोहान्तरताड्यमाने अपि** = மற்றெரு இரும்பினுல் அடிக்கப்பட்டாலும்கூட,
**லோஹாந்தரதாட்³யமானே அபி**
**तस्य** = அதனுடைய,
**தஸ்ய**
**अन्तर्गत** = உள்ளே இருக்கின்ற,
**அந்தர்க³த**
**वह्नेः** = நெருப்பிற்கு,
**வஹ்னே꞉**
**निर्घातजं** = அடிப்பதால் உண்டான,
**நிர்கா⁴தஜம்**
**दुःखं** = துன்பம்,
**து³꞉க²ம்**
**स्यात् किं** = ஏற்படுமா என்ன?
**ஸ்யாத் கிம்**

இரும்பு நன்முக நெருப்பில் பழுக்கப் பழுக்கக் காய்ச்சப்படுகின்றது. பிறகு அது செம்மட்டியினுல் அடிக்கப்படுகின்றது. அப்பொழுது அதனுள்ளிருக்கும் நெருப்பிற்கு செம்மட்டியின் அடியால் துன்பம் ஏற்படுகிறதா? இல்லை அல்லவா! **(134)**

**निष्ठुर कुठाराघातैः काष्ठे संछेद्यमानेऽपि ।**
**अन्तर्वर्ती वह्निः किं घातैश्छेद्यते तद्वत् ॥ १३५ ॥**

**நிஷ்டு²ர குடா²ரா கா⁴தை꞉ காஷ்டே² ஸஞ்சே²த்³யமானே(அ)பி ।**
**அந்தர்வர்தீ வஹ்னி꞉ கிம் கா⁴தைஶ்சே²த்³யதே தத்³வத் ॥ 135 ॥**

**तनुसम्बन्धाज्जातैः सुखदुःखैर्लिप्यते नात्मा ।**
**ब्रूते श्रुतिरपि भूयोऽनश्नन्नन्योऽभिचाकशीत्यादि ॥ १३६ ॥**

**தனுஸம்ப³ந்தா⁴ஞ்ஜாதை꞉ ஸுக²து³꞉கை²ர் லிப்யதே நாத்மா ।**
**ப்³ரூதே ஶ்ருதிரபி பூ⁴யோ(அ)னஶ்னன்னன்யோ(அ)பி⁴சாகஶீத்யாதி³ ॥ 136 ॥**

निष्ठुर = கூர்மையான,
நிஷ்டு2ர

कुठार = கோடாரியின்,
குடா2ர

घातैः = அடிகளால்,
கா4தை:

काष्ठे संछेद्यमाने अपि = கட்டை துண்டு துண்டாக வெட்டப்பட்டபோதிலும்,
காஷ்டே2 ஸஞ்சே2த்3யமானே அபி

अन्तर्वर्ती = அதற்குள் இருக்கும்,
அந்தர்வர்தீ

वह्निः = நெருப்பு,
வஹ்னி:

घातैः = அடிகளால்,
கா4தை:

छेद्यते किं = வெட்டப்படுகிறதா என்ன?
சே2த்3யதே கிம்

तद्वत् = அதுபோலவே,
தத்3வத்

तनुसम्बन्धात् = உடலின் சேர்க்கையால்,
தனுஸம்ப3ந்தா4த்

जातैः = உண்டான,
ஜாதை:

सुखदुःखैः = இன்பதுன்பங்களால்,
ஸுக2து3:கை2

आत्मा = ஆத்மாவானது,
ஆத்மா

न लिप्यते = பூசப்படுவதில்ஃல,
ந லிப்யதே

अन्यः = மற்றெருவன்,
அன்ய:

अनश्नन् = சாப்பிடாமலேயே,
அனஶ்னன்

अभिचाकशीति = விளங்குகிறுன்,
அபி4சாகஶீதி

आदि = இதுமுதலான,
ஆதி3

| | | |
|---|---|---|
| **श्रुतिरपि** <br> **ஶ்ருதிரபி** | = | வேதமும், |
| **भूयः** <br> **பூ⁴ய:** | = | திரும்பித்திரும்பி, |
| **ब्रूते** <br> **ப்³ரூதே** | = | இதைச் சொல்கிறது. |

கூர்மையான கோடரியால் மரக்கட்டையை வெட்டும் பொழுது கட்டைக்குள் இருக்கும் நெருப்பு வெட்டப்படுவதில்லை. இதுபோலவே சரீரத்தின் ஸம்பந்தத்தால் ஏற்படும் இன்ப துன்பங்கள் ஆத்மாவினிடம் ஒட்டுவதில்லை. "ஆத்மா ஒன்றையும் சாப்பிடாமலேயே (அனுபவிக்காமலேயே) ஆனந்தமாக விளங்குகிறான்" என்று முண்டகோபநிஷத்தும் மற்றும் பல சுருதிகளும் இவ்விஷயத்தைக் கூறுகிறது.

## निशि वेश्मनि प्रदीपे दीप्यति चौरस्तु वित्तमपहरति ।
## ईरयति वारयति वा तं दीपः किं तथाऽऽत्माऽपि ॥ १३७ ॥

**நிஶி வேஶ்மனி ப்ரதீ³பே தீ³ப்யதி சௌரஸ்து வித்தமபஹரதி ।**
**ஈரயதி வாரயதி வா தம் தீ³ப: கிம் ததா²(ஆ)த்மா(அ)பி ॥ 137 ॥**

| | | |
|---|---|---|
| **निशि** <br> **நிஶி** | = | இரவில், |
| **वेश्मनि** <br> **வேஶ்மனி** | = | வீட்டில், |
| **प्रदीपे दीप्यति** <br> **ப்ரதீ³பே தீ³ப்யதி** | = | விளக்கு பிரகாசித்துகொண்டிருக்கும்பொழுது, |
| **चौरःतु** <br> **சௌர:து** | = | திருடனோவெனில், |
| **वित्तं** <br> **வித்தம்** | = | பணத்தை, |
| **अपहरति** <br> **அபஹரதி** | = | திருடிச்செல்கிறான், |
| **दीपः** <br> **தீ³ப:** | = | விளக்கு, |
| **तं** <br> **தம்** | = | அவனை, |
| **किं ईरयति** <br> **கிம் ஈரயதி** | = | தூண்டுகின்றதா, |
| **वा** <br> **வா** | = | அல்லது, |

**वारयति** = தடுக்கின்றதா?

**வாரயதி**

**तथा** = அதுபோலவே,

**ததா²**

**आत्मा अपि** = ஆத்மாவுன்.

**ஆத்மா அபி**

வீட்டில் விளக்கு எரிந்துகொண்டிருக்கையிலேயே எல்லோரும் தூங்கும் பொழுது நள்ளிரவில் திருடன் அவ்வீட்டிற்குள் புகுந்து செல்வமஜனத்தையும் கொள்ஜள கொண்டு சென்று விடுகிறுன். அங்குள்ள விளக்கு அக்கள்வஜனக் கொள்ஜள யிடும்படி தூண்டவுமில்ஜல அவ்வாறு செய்வதிலிருந்து அவஜனத் தடுக்கவுமில்ஜல அந்த விளக்கு அக்கள்வனுடைய செயலில் ஸம்பந்தமற்று விளங்கிக் கொண்டி ருக்கிறது. அதுபோலவே ஆத்மா தாஞகவே பிரகாசித்துக் கொண்டிருக்கும் பொழுது தான் இந்த சரீரம், இந்திரியம், மனம், பிராணன் இவை எல்லாம் தம் தம் வேஜலகளைச் செய்கின்றன. இவைகளின் காரியங்களிலேயோ, இவற்றிலிருந்து ஏற்படும் பலனிலேயோ ஆத்மாவுக்குச் சிறிதும் ஸம்பந்தம் கிடையாது. **(137)**

**गेहान्ते दैववशात्कस्मिंश्चित्समुदिते विपन्ने वा ।**
**दीपस्तुष्यत्यथवा खिद्यति किं तद्वदात्माऽपि ॥ १३८ ॥**

**கே³ஹாந்தே தை³வவஶாத் கஸ்மிம்ஶ்சித் ஸமுதி³தே விபன்னே வா ।**
**தீ³பஸ்துஷ்யத்யத²வா கி²த்³யதி கிம் தத்³வதா³த்மா(அ)பி ॥ 138 ॥**

**गेहान्ते** = வீட்டிற்குள்,

**கே³ஹாந்தே**

**दैववशात्** = தெய்வச் செயலால்,

**தை³வவஶாத்**

**कस्मिंश्चित् समुदिते** = ஒருவன் பிறந்தாலோ,

**கஸ்மிம்ஶ்சித் ஸமுதி³தே**

**वा** = அல்லது,

**வா**

**विपन्ने** = இறந்தாலோ,

**விபன்னே**

**दीपः** = விளக்கு,

**தீ³ப:**

**किं तुष्यति** = இன்ப மடைகிறதா?

**கிம் துஷ்யதி**

**अथवा** = அல்லது,

**அத²வா**

**खिद्यति** = துன்பமடைகிறதா?

**கி²த்³யதி**

**तद्वत्** = அதுபோலவே,

**தத்³வத்**

**आत्मा अपि** = ஆத்மாவும்.

**ஆத்மா அபி**

ஒரு வீட்டிற்குள் தெய்வச்செயலால் ஒரு குழந்தை பிறப்பதால் மற்றவர் போல அங்குள்ள விளக்கு களியுறுவதுமில்லை. அல்லது துரத்ருஷ்டவசமாக ஒருவன் இறப்பதால் அவ்விளக்கு துயரமடைவதும் இல்லை. அதுபோலவே சரீராதிகளுக்கு நன்மை ஏற்பட்டாலும் தீமை ஏற்பட்டாலும் அதனுல் ஆத்மாவுக்கு இன்பமோ, துன்பமோ கிடையாது.

## १२. स्वप्रकाशताप्रकरणम् ॥

### 12. ஸ்வப்ரகாஶதா ப்ரகரணம் ॥

ஆத்மா ஸ்வயம்ப்ரகாசவஸ்து என்பதை இப்பிரகரணத்தில் விளக்குகிறுர்: -

**रविचन्द्रवह्निदीपप्रमुखाः स्वपरप्रकाशाः स्युः ।**
**यद्यपि तथाप्यमीभिः प्रकाश्यते क्वापि नैवात्मा ॥ १३९ ॥**

**ரவிசந்த்³ரவஹ்னிதீ³பப்ரமுகா²꞉ ஸ்வபரப்ரகாஶா꞉ ஸ்யு꞉ ।**
**யத்³யபி ததா²ப்யமீபி⁴꞉ ப்ரகாஶ்யதே க்வாபி நைவாத்மா ॥ 139 ॥**

**रवि** = சூரியன்,

**ரவி**

**चन्द्र** = சந்திரன்,

**சந்த்³ர**

**वह्नि** = நெருப்பு,

**வஹ்னி**

**दीप** = விளக்கு,

**தீ³ப**

**प्रमुखाः** = முதலிய ஒளிவாய்ந்தவைகள்,

**ப்ரமுகா²꞉**

**स्वपरप्रकाशाः** = தங்களையும் மற்ற பொருள்களையும்

**ஸ்வபரப்ரகாஶா꞉** பிரகாசப்படுத்தும் தன்மை உள்ளவைகளாக,

**स्युः यद्यपि तथापि** = இருந்த போதிலும்,

**ஸ்யு꞉ யத்³யபி ததா²பி**

**अमीभिः** = அவைகளால்,

**அமீபி⁴:**

**क्वापि** = ஒரு இடத்திலும்,

**க்வாபி**

**आत्मा** = ஆத்மா,

**ஆத்மா**

**नैव प्रकाश्यते** = பிரகாசப்படுத்தப்படுவதே இல்லை.

**நைவ ப்ரகாஶ்யதே**

உலகில் சூரியன், சந்திரன், அக்னி, விளக்கு முதலியன ஒளியுள்ள பொருள் கள். இவை தாங்களும் பிரகாசித்துக் கொண்டு மற்றப் பொருள்களையும் பிரகாசிக் கும்படி செய்கின்றன. அவ்வாறு இருந்தும் இவைகளில் ஒன்றுவது ஆத்மாவை விளங்கச் செய்வதில்லை. **(139)**

**चक्षुर्द्वारैव स्यात्परात्मना भानमेतेषाम् ।**
**यद्वा तेऽपि पदार्था न ज्ञायन्तेऽथ केवलालोकात् ॥ १४० ॥**

**சக்ஷுர்த்³வாரைவ ஸ்யாத் பராத்மனா பா⁴னமேதேஷாம் ।**
**யத்³வா தே(அ)பி பதா³ர்தா² ந ஜ்ஞாயந்தே(அ)த² கேவலாலோகாத் ॥ 140 ॥**

**तत्राप्यक्षिद्वारा सहायभूतो न चेदात्मा ।**
**नो चेत्सत्यालोके पश्यत्यन्धः कथं नार्थान् ॥ १४१ ॥**

**தத்ராப்யக்ஷித்³வாரா ஸஹாய பூ⁴தோ ந சேதா³த்மா ।**
**நோ சேத் ஸத்யாலோகே பஶ்யத்யந்த⁴: கத²ம் நார்தா²ன் ॥ 141 ॥**

**सत्यात्मन्यपि किं नो ज्ञानं तच्चेन्द्रियान्तरेण स्यात् ।**
**अन्धे दृक्प्रतिबन्धे करसम्बन्धे पदार्थभानं हि ॥ १४२ ॥**

**ஸத்யா த்மன்யபி கிம் நோ ஜ்ஞானம் தச்சேந்த்³ரியாந்தரேண ஸ்யாத் ।**
**அந்தே⁴ த்³ருக் ப்ரதிப³ந்தே⁴ கர ஸம்ப³ந்தே⁴ பதா³ர்த² பா⁴னம் ஹி ॥ 142 ॥**

**यद्वा** = அல்லது,

**யத்³வா**

**एतेषां** = இந்த ஸூரியன் முதலியவைகளுக்கும்,

**ஏதேஷாம்**

**चक्षुर्द्वारा** = கண்மூலமாக,

**சக்ஷுர்த்³வாரா**

**परात्मनैव** = பரமாத்மாவினாலேதான்,

**பராத்மனைவ**

**महारम्ये** = மிகவும் அழகுவாய்ந்த,
**மஹாரம்யே**

**यमुनातट** = யமுனை நதிக்கரையின்,
**யமுனாதட**

**निकट** = அருகில்,
**நிகட**

**स्थित** = உள்ள,
**ஸ்தி$^{2}$த**

**वृन्दावनकानने** = பிருந்தாவனமென்ற அரண்யத்தில்,
**வ்ருந்தா$^{3}$வன கானனே**

**कल्पद्रुमतलभूमौ** = கற்பக மரத்தினுடைய அடியில்,
**கல்பத்$^{3}$ரும தல பூ$^{4}$மௌ**

**चरणोपरि** = காலின்மேல்,
**சரணோபரி**

**चरणं** = காலை,
**சரணம்**

**स्थाप्य** = வைத்துக்கொண்டு,
**ஸ்தா$^{2}$ப்ய**

**तिष्ठन्तं** = நிற்கின்றவராயும்,
**திஷ்ட$^{2}$ந்தம்**

**घननीलं** = மேகம்போல நீலவண்ணனாயும்,
**க$^{4}$ன நீலம்**

**इह** = இங்கு,
**இஹ**

**स्वतेजसा** = தன்னுடைய ஒளியால்,
**ஸ்வதேஜஸா**

**विश्वं** = உலகை,
**விஶ்வம்**

**भासयन्तं** = விளங்கச் செய்கின்றவராயும்,
**பா$^{4}$ஸயந்தம்**

**पीताम्बर** = மஞ்சள் பட்டாடையை,
**பீதாம்ப$^{3}$ர**

**परिधानं** = உடுத்தியவராயும்,
**பரிதா$^{4}$னம்**

**चन्दन** = சந்தனம்,
**சந்த$^{3}$ன**

| | | |
|---|---|---|
| **कर्पूर**<br>**கர்பூர** | = | கற்பூரம் இவற்ருல், |
| **लिप्तसर्वाङ्गम्**<br>**லிப்த ஸர்வாங்க³ம்** | = | பூசப்பட்ட எல்லா அங்கங்கஊ உடையவராயும், |
| **आकर्णपूर्णनेत्रं**<br>**ஆகர்ண பூர்ண நேத்ரம்** | = | காதுவரையில் நீண்ட அழகிய கண்கஊ யுடையவராயும், |
| **कुण्डलयुग**<br>**குண்ட³லயுக³** | = | இருகுண்டலங்களால், |
| **मण्डितश्रवणं**<br>**மண்டி³தஶ்ரவணம்** | = | அழகுப்படுத்தப்பட்ட அழகுவாய்ந்த செவி களுடையவராயும், |
| **मन्दस्मित**<br>**மந்த³ஸ்மித** | = | புன்னகைபூத்த, |
| **मुखकमलं**<br>**முக²கமலம்** | = | தாமரைபோன்ற முகத்தையுடையவராயும், |
| **सुकौस्तुभ**<br>**ஸுகௌஸ்துப⁴** | = | கௌஸ்துபமென்று பெயர்கொண்ட ரத்னத்துடன் கூடிய, |
| **उदार**<br>**உதா³ர** | = | சிறந்த, |
| **मणिहारम्**<br>**மணிஹாரம்** | = | ரத்ன மாஊலயையுடையவராயும், |
| **वलयाङ्गुलीयकाद्यान्**<br>**வலயாங்கு³லீயகாத்³யான்** | = | வஊயல்கள், மோதிரங்கள் முதலிய, |
| **स्वलङ्कारान्**<br>**ஸ்வலங்காரான்** | = | சிறந்த அலங்காரங்கஊ, |
| **उज्ज्वलयन्तं**<br>**உஜ்ஜ்வலயந்தம்** | = | விளங்கச் செய்கின்றவராயும், |
| **गल**<br>**க³ல** | = | கழுத்தில், |
| **विलुलित**<br>**விலுலித** | = | அசைகின்ற, |
| **वनमालं**<br>**வனமாலம்** | = | வனமாஊலயை உடையவராயும், |
| **स्वतेजसा**<br>**ஸ்வதேஜஸா** | = | தன்னுடைய தேஜஸால், |
| **अपास्त**<br>**அபாஸ்த** | = | நீக்கப்பட்ட, |

| | | |
|---|---|---|
| **कलिकालं** | = | கலிகாலத்தையுடையவராயும், |
| **கலிகாலம்** | | |
| **गुञ्जापुञ्जान्विते** | = | குஞ்சாபுஷ்பங்களையுடைய, |
| **கு³ஞ்ஜா புஞ்ஜான்விதே** | | |
| **शिरसि** | = | தலையில், |
| **ஶிரஸி** | | |
| **गुञ्जारव** | = | இனிய ரீங்காரத்தையுடைய, |
| **கு³ஞ்ஜாரவ** | | |
| **अलिकलितं** | = | வண்டுகளால் விளங்குகின்றவராயும், |
| **அலிகலிதம்** | | |
| **गोपैः सह** | = | இடையர்களுடன்கூட, |
| **கோ³பைঃ ஸஹ** | | |
| **भुञ्जानं** | = | போஜனம் செய்கின்றவராயும், |
| **பு⁴ஞ்ஜானம்** | | |
| **कुञ्जान्तरवर्तिनं** | = | கொடி மண்டபத்தின் நடுவில் வீற்றிருக்கின்ற |
| **குஞ்ஜாந்தர வர்தினம்** | | வராயும் விளங்குகின்ற, |
| **हरिं** | = | ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவை, |
| **ஹரிம்** | | |
| **स्मरत** | = | த்யானம் செய்யுங்கள். |
| **ஸ்மரத** | | |

யமுனை நதிக்கரையில் பிருந்தாவனத்தில் மிகவும் அழகாக அமைந்துள்ள கற்பக விருக்ஷத்தினடியில் கால் மேல் காலை வைத்துக்கொண்டு அமர்ந்திருக்கின்ற வரும், நீருண்டமேகம்போல் நீல நிறத்தையுடையவரும், தன்னுடைய சிறந்த ஒளியால் உலகமனைத்தையும் விளங்கச்செய்கின்றவரும், பீதாம்பரத்தை அணிந்த வரும், பச்சைக் கற்பூரம், சந்தனக்குழம்பு முதலியவற்றைப் பூசிக்கொண்டவரும், செவிவரையில் நீண்ட அழகிய கண்களையுடையவரும், இரத்தின குண்டலங்களால் அழகு வாய்ந்த காதுகளையுடையவரும், நன்கு மலர்ந்த தாமரைபோல் விளங்குகி ன்ற புன்முறுவல் பூத்த முகத்தையுடையவரும், சிறந்த கௌஸ்துபமென்ற இரத்தி னம் பதித்த ஹாரத்தை யணிந்தவரும், வளையல்கள், மோதிரங்கள் முதலிய அணிகலன்களுக்கு ஒளியைக் கொடுப்பவரும் கழுத்தில் அசைகின்ற வனமாலை யைத் தரித்தவரும், தன்னுடைய மகிமையால் கலிகாலத்தின் தோஷத்தை நாசம் செய்கின்றவரும், சிறந்த மலர்களால் அலங்கரிக்கப்பட்ட சிரஸ்ஸில் சுற்றிவரும் வண்டுகளின் இன்னிசையால் விளங்குபவரும், இடையர்களுடன் கூட விருந்துண்ப வரும், கொடிமண்டபங்களில் வசிக்கின்றவருமான ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவை மனதில் த்யானம் செய்யுங்கள். **(184-188)**

**मन्दारपुष्पवासितमन्दानिलसेवितं परानन्दम् ।**
**मन्दाकिनीयुतपदं नमत महानन्ददं महापुरुषम् ॥ १८९ ॥**

**மந்தா³ர புஷ்ப வாஸித மந்தா³னில ஸேவிதம் பரானந்த³ம் ।**
**மந்தா³கினீ யுதபத³ம் நமத மஹானந்த³த³ம் மஹாபுருஷம் ॥ 189 ॥**

**मन्दारपुष्प** = மந்தார மலரால்,
**மந்தா³ர புஷ்ப**
**वासित** = நறுமணம் கமழும்படி செய்யப்பட்ட,
**வாஸித**
**मन्दानिल** = தென்றல் காற்றுல்,
**மந்தா³னில**
**सेवितं** = சேவிக்கப்பட்டவரும்,
**ஸேவிதம்**
**परानन्दं** = பேரானந்தஸ்வரூபியும்,
**பரானந்த³ம்**
**मन्दाकिनीयुत** = கங்கையுடன்கூடிய,
**மந்தா³கினீ யுத**
**पदं** = பாதத்தையுடையவரும்,
**பத³ம்**
**महानन्ददं** = பேரானந்தத்தையளிப்பவரும்,
**மஹானந்த³த³ம்**
**महापुरुषं** = புருஷோத்தமனுமான ஸ்ரீகிருஷ்ணபிரானை,
**மஹாபுருஷம்**
**नमत** = வணங்குவீராக.
**நமத**

மந்தாரமலரால் மிகுந்த நறுமணமுள்ளதாகச் செய்யப்பட்ட தென்றல் காற்றுல் ஸேவிக்கப்பட்டவரும், பேரானந்த ஸ்வரூபியாயும், கங்கையைப்பெற்ற பாதங்களை யுடையவராயும், பேரானந்த மளிப்பவராயும் புருஷோத்தமனுமான அந்த ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவை வணங்குங்கள். **(189)**

**सुरभीकृतदिग्वलयं सुरभिशतैरावृतं सदा परितः ।**
**सुरभीतिक्षपणपरं सुरभीयं यादवं नमत ॥ १९० ॥**

**ஸுரபீ⁴க்ருத தி³க்³வலயம் ஸுரபி⁴ஶதைராவ்ருதம் ஸதா³ பரித꞉ ।**
**ஸுரபீ⁴திக்ஷபணபரம் ஸுரபீ⁴யம் யாத³வம் நமத ॥ 190 ॥**

| | | |
|---|---|---|
| **सदा** <br> **ஸதா³** | = | எப்பொழுதும், |
| **सुरभीकृत** <br> **ஸுரபீ⁴க்ருத** | = | பரிமளமுள்ளதாகச் செய்யப்பட்ட, |
| **दिग्वलयं** <br> **தி³க்³வலயம்** | = | திசைகளின் கூட்டத்தையுடையவரும், |
| **परित:** <br> **பரித:** | = | நான்கு பக்கங்களிலும், |
| **सुरभिशतै:** <br> **ஸுரபி⁴ஶதை:** | = | நூற்றுக்கணக்கான பசுக்களால், |
| **आवृतं** <br> **ஆவ்ருதம்** | = | சூழப்பட்டவரும், |
| **सुर** <br> **ஸுர** | = | தேவர்களுடைய, |
| **भीति** <br> **பீ⁴தி** | = | பயத்தை, |
| **क्षपणपरं** <br> **க்ஷபணபரம்** | = | போக்குவதில் ஈடுபட்டவராயும், |
| **सुरभीयं** <br> **ஸுரபீ⁴யம்** | = | பசுக்களுக்குஹிதம் செய்பவரும், |
| **यादवं** <br> **யாத³வம்** | = | யதுகுலத்தில் உதித்தவராயுமுள்ள ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவை, |
| **नमत** <br> **நமத** | = | வணங்குவீராக. |

தன்னுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தின் சிறந்த மணத்தால் திசைகள் அனைத்தையும் வாசனை யுள்ளதாகச் செய்கின்றவரும், எப்பொழுதும் பசுக்களின் கூட்டங்களால் சூழப்பட்டவரும், தேவர்களின் அச்சத்தைப் போக்குகின்றவரும் பசுக்களுக்கு நன்மை செய்பவரும், யதுகுலத்தில் உதித்தவருமான ஸ்ரீ கிருஷ்ணபர மாத்மாவை வணங்குவீராக. **(190)**

**कन्दर्पकोटिसुभगं वाञ्छितफलदं दयार्णवं कृष्णम् ।**
**त्यक्त्वा कमन्यविषयं नेत्रयुगं द्रष्टुमुत्सहते ॥ १९१ ॥**

**கந்த³ர்பகோடி ஸுப⁴க³ம் வாஞ்சி²த ப²லத³ம் த³யார்ணவம் க்ருஷ்ணம் ।**
**த்யக்த்வா கமன்யவிஷயம் நேத்ரயுக³ம் த்³ரஷ்டுமுத்ஸஹதே ॥ 191 ॥**

**कन्दर्पकोटिसुभगं** = கோடிமன்மதர்களின் அழகுடையவரும்,

**கந்த³ர்பகோடி ஸுப⁴க³ம்**

**वाञ्छित** = கோரிய,

**வாஞ்சி²த**

**फलदं** = பலனையளிப்பவரும்,

**ப²லத³ம்**

**दयार्णवं** = கருணைக்கடலுமான,

**த³யார்ணவம்**

**कृष्णं** = கண்ணனை,

**க்ருஷ்ணம்**

**त्यक्त्वा** = விட்டுவிட்டு,

**த்யக்த்வா**

**कं अन्यविषयं** = வேறு எந்தப்பொருளை,

**கம் அன்யவிஷயம்**

**द्रष्टुं** = காண்பதற்கு,

**த்³ரஷ்டும்**

**नेत्रयुगं** = கண்ணிரண்டும்,

**நேத்ரயுக³ம்**

**उत्सहते** = உத்ஸாஹமடையும்?

**உத்ஸஹதே**

கண்ணபிரான் அழகிய திருமேனி படைத்தவர். கோடிக்கணக்கான மன்மதர்கள் கூட அவரை வெல்ல முடியாது. அவ்வாறு அவருடைய தேககாந்தி கண்களைக் கவரக்கூடியது. அவர் தன்னை அண்டியவர்களுக்கு வேண்டிய வரங்களைத் தருகின்றர், அவரே கருணைக்கடல். அவ்வாறு விளங்கும் கண்ணபிரானை விட்டுவிட்டுக் கண்ணிரண்டும் வேறு எந்தப் பொருளைத்தான் நாடிச் செல்லும்? **(191)**

**पुण्यतमामतिसरसां मनोभिरामां हरेः कथां त्यक्त्वा ।**
**श्रोतुं श्रवणद्वन्द्वं ग्राम्यं कथमादरं वहति ॥ १९२ ॥**

**புண்யதமாமதிஸரஸாம் மனோபி⁴ராமாம் ஹரே꞉ கதா²ம் த்யக்த்வா ।**
**ஶ்ரோதும் ஶ்ரவணத்³வந்த்³வம் க்³ராம்யம் கத²மாத³ரம் வஹதி ॥ 192 ॥**

**पुण्यतमां** = மிகுந்த புண்யத்தையுடையதாயும்,

**புண்யதமாம்**

**अतिसरसां** = மிகுந்த சுவை பொருந்தியதாயும்,

**அதிஸரஸாம்**

**मनोभिरामां** = மனதை மகிழச் செய்கின்றதாயும் உள்ள,

**மனோபி⁴ராமாம்**

हरेः = விஷ்ணுவினுடைய,

ஹரே:

कथां = கதையை,

கதா²ம்

त्यक्त्वा = விட்டுவிட்டு,

த்யக்த்வா

श्रवणद्वन्द्वं = காதிரண்டும்,

ஶ்ரவணத்³வந்த்³வம்

ग्राम्यं = பண்பற்ற விஷயத்தை,

க்³ராம்யம்

श्रोतुं = கேட்பதற்கு,

ஶ்ரோதும்

कथं = எவ்வாறு,

கத²ம்

आदरं = ஆதரவை,

ஆத³ரம்

वहति = தாங்கும்?

வஹதி

கண்ணபிரானின் கதை மிகவும் et- புனிதமானது. பாபத்தைப் போக்கும் தன்மை வாய்ந்தது. கேட்பதற்கும் மிகவும் இனிமையானது. மற்றவைகளோ சுவையற்றவை. அருவெறுப்பைத் தரக்கூடியவை. ஆதலால் செவியிரண்டும் புனித மான கண்ணபிரானின் கதையை விடுத்து வெறுக்கத்தக்க வேறு விஷயங்களில் எவ்வாறு சிரத்தை கொள்ளும்? **(192)**

**दौर्भाग्यमिन्द्रियाणां कृष्णे विषये हि शाश्वतिके ।**
**क्षणिकेषु पापकरणेष्वपि सज्जन्ते यदन्यविषयेषु ॥ १९३ ॥**

**தௌ³ர்பா⁴க்³ய மிந்த்³ரியாணும் க்ருஷ்ணே விஷயே ஹி ஶாஶ்வதிகே ।**
**க்ஷணிகேஷு பாபகரணேஷ்வபி ஸஜ்ஜந்தே யத³ன்யவிஷயேஷு ॥ 193 ॥**

शाश्वतिके = என்றுமழியாத,

ஶாஶ்வதிகே

कृष्णे विषये = கிருஷ்ணன் என்ற பொருள் இருக்கும்பொழுது,

க்ருஷ்ணே விஷயே

क्षणिकेषु = கணநேரமே நிஐலத்திருக்கின்றவைகளாயும்,

க்ஷணிகேஷு

पापकरणेषु अपि = பாவத்திற்குச் சாதனங்களாயும் இருப்பினும்கூட,

பாபகரணேஷு அபி

**अन्यविषयेषु** = மற்ற பொருள்களில்,

**அன்யவிஷயேஷு**

**सज्जन्ते** = ஈடுபடுகின்றன,

**ஸஜ்ஜந்தே**

**(इति) यत्** = என்ற யாது உண்டோ (அது)

**(இதி) யத்**

**(तत्)** = (அது)

**(தத்)**

**इन्द्रियाणां** = புலன்களின்,

**இந்த்³ரியாணும்**

**दौर्भाग्यं हि** = துரதிருஷ்டமல்லவா?

**தௌ³ர்பா⁴க்³யம் ஹி**

கண்ணபிரான் எங்கும் நிறைந்த பரம்பொருள். அவன் எல்லாக் காலங்களிலும் அழியாமல் விளங்கிக்கொண்டிருக்கிறுன். அவன் புனிதமானவன். மற்றப் பொருள்களோ வெனில் பாபத்திற்குக் காரணமாக ஆகின்றன, அவைகள் ஸ்வல்ப காலத்திற்குள் தோன்றி மறைந்து விடுகின்றன. அவ்வாறு இருப்பினும் ஐம்புலன்களும் அழியும் தன்மை வாய்ந்த அந்த அற்பப் பொருள்களிலேயே ஈடுபடுகின்றன. அது அப்பொறிகளின் பாக்கியமற்ற தன்மையேயாகும். **(193)**

# १८. सगुणनिर्गुणयोरैक्यप्रकरणम् ॥

### 18. ஸகு³ண நிர்கு³ணயோ ரைக்ய ப்ரகரணம் ॥

**(அவதாரிகை)** இவ்வாறு தியானத்திற்காக ஸகுணமூர்த்தியை வர்ணித்து விட்டு இனி இந்த ஸகுணவஸ்துவும் நிர்குணப் பொருளும் ஒன்றேதான். தத்வத்தில் வேற்றுமை இல்லை என்பதை பல பிரமாணங்களால் விரிவாக விளக்குகிறுர்: -

**श्रुतिभिर्महापुराणैः सगुणगुणातीतयोरैक्यम् ।**
**यत्प्रोक्तं गूढतया तदहं वक्ष्येऽतिविशदार्थम् ॥ १९४ ॥**

**ஶ்ருதிபி⁴ர் மஹாபுராணை: ஸகு³ண கு³ணாதீதயோரைக்யம் ।**
**யத் ப்ரோக்தம் கூ³ட⁴தயா தத³ஹம் வக்ஷ்யே(அ)தி விஶதா³ர்த²ம் ॥ 194 ॥**

**श्रतिभि** = வேதங்களாலும்,

**ஶ்ரதிபி⁴**

**महापुराणैः** = பெரிய புராணங்களாலும்,

**மஹாபுராணை:**

**सगुणगुणातीतयोः** = ஸகுணப்பிரம்மத்திற்கும் நிர்குண ப்ரம்மத்திற்கும்,

**ஸகு³ண கு³ணாதீதயோ:**

| | | |
|---|---|---|
| **यत्**<br>**யத்** | = | எந்த, |
| **ऐक्यम्**<br>**ஐக்யம்** | = | ஒருமைப்பாடு, |
| **गूढतया**<br>**கூ³ட⁴தயா** | = | மறைபொருளாக, |
| **प्रोक्तं**<br>**ப்ரோக்தம்** | = | கூறப்பட்டுள்ளதோ, |
| **तत्**<br>**தத்** | = | அதை, |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **अतिविशदार्थं**<br>**அதிவிஶதா³ர்த²ம்** | = | மிகவும் தெளிவாக, |
| **वक्ष्ये**<br>**வக்ஷ்யே** | = | சொல்லப்போகிறேன். |

வேதங்களாலும் புராணங்களாலும் ஸகுணப்பிரம்மத்திற்கும் நிற்குணப்ரம்மத் திற்கும் பேதமின்மை ரஹஸ்யமாகக் கூறப்பட்டுள்ளது அதனுல் அவற்றுள் கூறப் பட்டுள்ள தத்வத்தைத் தெரிந்துகொள்வது கடினம். ஆகையால் அந்த விஷயத்தை மிகத் தெளிவாகக் கூறுகிறேன். **(194)**

**भूतेष्वन्तर्यामी ज्ञानमयः सच्चिदानन्दः ।**
**प्रकृतेः परः परात्मा यदुकुलतिलकः स एवायम् ॥ १९५ ॥**

**பூ⁴தேஷ்வந்தர்யாமீ ஜ்ஞானமய꞉ ஸச்சிதா³னந்த³꞉ ।**
**ப்ரக்ருதே꞉ பர꞉ பராத்மா யது³குல திலக꞉ ஸ ஏவாயம் ॥ 195 ॥**

| | | |
|---|---|---|
| **भूतेषु**<br>**பூ⁴தேஷு** | = | எல்லா பிராணிகளிடத்திலும், |
| **अन्तर्यामी**<br>**அந்தர்யாமீ** | = | உள்ளே இருந்து அடக்கி ஆள்பவராயும், |
| **ज्ञानमयः**<br>**ஜ்ஞானமய꞉** | = | ஞானரூபியாயும், |
| **सच्चिदानन्दः**<br>**ஸச்சிதா³னந்த³꞉** | = | ஸச்சிதானந்தஸ்வரூபியாயும், |
| **प्रकृतेः**<br>**ப்ரக்ருதே꞉** | = | மாயைக்கும், |

**परः** = மேலானவராயும் எவர் விளங்குகிறாரோ,
**பர:**

**सः** = அவர்,
**ஸ:**

**अयं** = இந்த,
**அயம்**

**यदुकुलतिलकः एव** = யதுகுல திலகராகிய ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாதான்.
**யது³குலதிலக: ஏவ**

நிர்குணஸ்வரூபியான பரம்பொருள் உலகிலுள்ள எல்லா ஜீவராசிகளுக்குள் ளும் விளங்கிவருகிறுர். அவர் ஞான வடிவமுள்ளவர். ஸச்சிதாநந்தஸ்வரூபி. மாயைக்கு அப்பால்பட்டவர். அவ்வாறு விளங்கும் நிர்குணஸ்வரூபமே யதுகுல திலகராகிய ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா. **(195)**

**(அவதாரிகை)** இதை ஆக்ஷேபித்துக் கேள்வி கேட்கிறுர்: -

**ननु सगुणो दृश्यतनुस्तथैकदेशाधिवासश्च ।**
**स कथं भवेत्परात्मा प्राकृतवद्रागरोषयुतः ॥ १९६ ॥**

**நனு ஸகு³ணோ த்³ருஶ்ய தனுஸ் ததை²கதே³ஶாதி⁴வாஸஶ்ச ।**
**ஸ கத²ம் ப⁴வேத் பராத்மா ப்ராக்ருதவத்³ராக³ரோஷயுத: ॥ 196 ॥**

**सगुणः** = ஸகுண மூர்த்தி,
**ஸகு³ண:**

**दृश्यतनुः** = காணக்கூடிய சரீர முடையவர்,
**த்³ருஶ்ய தனு:**

**तथा** = அதுபோலவே,
**ததா²**

**एकदेशाधिवासः च ननु** = ஒரு சிறிய இடத்தில் வசிக்கின்றவர் அல்லவா,
**ஏகதே³ஶாதி⁴வாஸ: ச நனு**

**प्राकृतवत्** = ஜீவன்போல்,
**ப்ராக்ருதவத்**

**राग** = ஆசை,
**ராக³**

**रोष** = கோபம் இவைகளுடன்,
**ரோஷ**

**युतः** = கூடியவரான,
**யுத:**

**सः** = அவர்,

**ஸ:**

**कथं** = எவ்வாறு,

**கத2ம்**

**परात्मा** = பரமாத்மாவாக,

**பராத்மா**

**भवेत्** = இருக்கமுடியும்?

**ப4வேத்**

ஸகுணன் எல்லோராலும் பார்க்கத்தகுந்த திவ்ய மங்கள ரூபத்துடன் விளங்குகிறவர். அவர் ஒரு சிறிய இடத்தில் அமர்ந்துள்ளார். பிராகிருதஞன ஜீவன்போல் விருப்பு வெறுப்புகளுள்ளவர். நிர்குணமோவெனில் எங்கும் நிறைந்தது. புலன்களுக்கு எட்டாதது. விருப்பு வெறுப்பு அற்றது. அதஞல் ஸகுணஊ எவ்வாறு பரமாத்மா என்று கூற முடியும்? **(196)**

(**அவதாரிகை**) ஸகுணமும் நிர்குணமும் ஒன்று தான் என்பதற்குப் பல காரணங்கஊக் கூறி ஸமாதானம் சொல்கிறுர்: -

**इतरे दृश्यपदार्था लक्ष्यन्तेऽनेन चक्षुषा सर्वे।**
**भगवाननया दृष्ट्या न लक्ष्यते ज्ञानदृग्गम्यः ॥ १९७ ॥**

**இதரே த்3ருஶ்ய பதா3ர்தா2 லக்ஷ்யந்தே(அ)னேன சக்ஷுஷா ஸர்வே ।**
**ப4க3வானனயா த்3ருஷ்ட்யா ந லக்ஷ்யதே ஜ்ஞானத்3ருக்3க3ம்ய: ॥ 197 ॥**

**इतरे** = மற்ற,

**இதரே**

**सर्वे दृश्यपदार्थाः** = காணத்தகுந்த எல்லாப் பொருள்களும்,

**ஸர்வே த்3ருஶ்ய பதா3ர்தா2:**

**अनेन चक्षुषा** = இந்தக் கண்ணுல்,

**அனேன சக்ஷுஷா**

**लक्ष्यन्ते** = பார்க்கப்படுகின்றன,

**லக்ஷ்யந்தே**

**ज्ञानदृग्** = அறிவாகிய கண்ணுல்,

**ஜ்ஞானத்3ருக்3**

**गम्यः** = அடையத்தகுந்த,

**க3ம்ய:**

**भगवान्** = பரம்பொருள்,

**ப4க3வான்**

**अनया दृष्ट्या** = இந்தக் கண்ணுல்,

**அனயா த்³ருஷ்ட்யா**

**न लक्ष्यते** = பார்க்கப்படுகிறதில்லை.

**ந லக்ஷ்யதே**

உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் ஊனக் கண்ணுல் காணப்படுகின்றன. ஆனுல் பரம்பொருள் ஞானம் என்ற கண்ணுல் பார்க்கத்தக்கவர். அவ்வாறு அறியத் தகுந்த அந்த பகவான் நம்முடைய கண்களால் காணப்படுவதில்லை.

[ஸகுணம் பரமாத்மாவல்ல என்பதற்கு மூன்று காரணங்கள் கூறினுர். (1) காணத்தக்கவர், (2) ஒரு சிறிய இடத்தில் வாஸம் (3) ராகத்வேஷங்கள். ஸகுண மூர்த்தி ஞானத்தால் அறியத்தக்கவர், மற்றவை புலன்களால் அறியத்தக்கவை என்ற வேற்றுமையைக் காட்டி முதலாவதற்குப் பதில் கூறுகிருர். கிருஷ்ணனின் உண்மை ஸ்வரூபம் புலன்களால் அறியத்தக்கதல்ல. ஆதலால் அவர் பரமாத்மா தான்.] **(197)**

**(அவதாரிகை)** கிருஷ்ணன் புலன்களால் அறியத்தக்கவரல்ல என்பதற்கு பிரமாணம் காட்டுகிருர்: -

**यद्विश्वरूपदर्शनसमये पार्थाय दत्तवान्भगवान् ।**
**दिव्यं चक्षुस्तस्माददृश्यता युज्यते नृहरौ ॥ १९८ ॥**

**யத்³ விஶ்வரூப த³ர்ஶன ஸமயே பார்தா²ய த³த்தவான் ப⁴க³வான் ।**
**தி³வ்யம் சக்ஷுஸ் தஸ்மாத³த்³ருஶ்யதா யுஜ்யதே ந்ருஹரௌ ॥ 198 ॥**

**विश्वरूप** = விஸ்வரூபத்தை,

**விஶ்வரூப**

**दर्शनसमये** = காட்டும்பொழுது,

**த³ர்ஶன ஸமயே**

**भगवान्** = பரமாத்மா,

**ப⁴க³வான்**

**पार्थाय** = அர்ஜுனனுக்கு,

**பார்தா²ய**

**दिव्यं** = ஞானமாகிய,

**தி³வ்யம்**

**चक्षुः** = கண்ணை,

**சக்ஷு:**

**दत्तवान्** = கொடுத்தார்,

**த³த்தவான்**

| | | |
|---|---|---|
| **इति** | = | என்று, |
| **இதி** | | |
| **यत्** | = | யாது உளதோ, |
| **யத்** | | |
| **तस्मात्** | = | ஆகையால், |
| **தஸ்மாத்** | | |
| **नृहरौ** | = | நரஸிம்ம ரூபியாகிய பரமாத்மாவினிடத்தில், |
| **ந்ருஹரௌ** | | |
| **अदृश्यता** | = | காணப்படாமை என்பது, |
| **அத்³ருஶ்யதா** | | |
| **युज्यते** | = | பொருத்தமானது. |
| **யுஜ்யதே** | | |

பரமாத்மா கண்ணுக்குப் புலப்படாதவர். அதனால்தான் அர்ஜுனனுக்குத் தன்னுடைய உண்மையான ஸ்வரூபத்தைக் காட்டுவதற்காகப் பகவான்

**दिव्यं ददामि ते चक्षुः पश्य मे योगमैश्वरम्**

**தி³வ்யம் த³தா³மி தே சக்ஷு: பஶ்ய மே யோக³மைஶ்வரம்**

(உனக்கு திவ்யமான கண்ணைக் கொடுக்கின்றேன். என்னுடைய உண்மையான ஸ்வரூபத்தை பார்ப்பாயாக) என்று கூறி ஞானக்கண்ணை ஈந்தருளுகின்றார். ஆகையாலேயே நரஸிம்மரூபத்தைத் தாங்கிய பகவான் கண்களால் பார்க்கமுடியாதவர் என்று நன்கு புலப்படுகின்றது. **(198)**

**(அவதாரிகை)** இரண்டாவதான "ஒரு சிறிய இடத்தில் வாஸம்" என்பதற்கு ஸமாதானம் கூறுகிறார்: -

**साक्षाद्यथैकदेशे वर्तुलमुपलभ्यते रवेर्बिम्बम् ।**
**विश्वं प्रकाशयति तत्सर्वैः सर्वत्र दृश्यते युगपत् ॥ १९९ ॥**

**ஸாக்ஷாத்³ யதை²கதே³ஶே வர்துலமுபலப்⁴யதே ரவேர் பி³ம்ப³ம் ।**
**விஶ்வம் ப்ரகாஶயதி தத் ஸர்வை: ஸர்வத்ர த்³ருஶ்யதே யுக³பத் ॥ 199 ॥**

| | | |
|---|---|---|
| **यथा** | = | எப்படி, |
| **யதா²** | | |
| **रवेः** | = | சூரியனுடைய, |
| **ரவே:** | | |
| **बिम्बं** | = | வடிவம், |
| **பி³ம்ப³ம்** | | |

**साक्षात्** = கண்கூடாக,

**ஸாக்ஷாத்**

**एकदेशे** = ஒரு இடத்தில்,

**ஏகதே³ஶே**

**वर्तुलं** = வட்டமாக,

**வர்துலம்**

**उपलभ्यते** = காணப்படுகிறது,

**உபலப்⁴யதே**

**तत्** = அது,

**தத்**

**विश्वं** = உலகு முழுவதையும்,

**விஶ்வம்**

**प्रकाशयति** = விளங்கச்செய்கிறது,

**ப்ரகாஶயதி**

**सर्वैः** = எல்லோராலும்,

**ஸர்வை:**

**सर्वत्र** = எல்லா இடத்திலும்,

**ஸர்வத்ர**

**युगपत्** = ஒரே சமயத்தில்,

**யுக³பத்**

**दृश्यते** = காணப்படுகிறது.

**த்³ருஶ்யதே**

சூரியனுடைய பிம்பம் உருண்டை வடிவமுள்ளதாக ஆகாசத்தின் ஒரு கோணத்தில் காணப்படுகிறது. அந்த சூரியனுடைய பிம்பம் உலகம் முழுவதையும் பிரகாசிக்கச் செய்கின்றது. அது ஒரே ஸமயத்தில் எல்லோராலும் எல்லா தேசங்களிலும் காணப்படுகிறது. **(199)**

**यद्यपि साकारो ऽयं तथैकदेशी विभाति यदुनाथः ।**
**सर्वगतः सर्वात्मा तथाप्ययं सच्चिदानन्दः ॥ २०० ॥**

**யத்³யபி ஸாகாரோ (அ)யம் ததை²கதே³ஶீ விபா⁴தி யது³நாத²: ।**
**ஸர்வக³த: ஸர்வாத்மா ததா²ப்யயம் ஸச்சிதா³னந்த³: ॥ 200 ॥**

**तथा** = அதுபோலவே,

**ததா²**

**अयं** = இந்த,

**அயம்**

| | | |
|---|---|---|
| **यदुनाथः**<br>**யது³நாத²꞉** | = | யாதவர்களுக்கு நாதனாகிய ஸ்ரீகிருஷ்ணன், |
| **साकारः**<br>**ஸாகார꞉** | = | தோற்றத்தை உடையவனாகவும், |
| **एकदेशी**<br>**ஏகதே³ஶீ** | = | ஒரு இருப்பிடத்தையுடையவனாகவும், |
| **यद्यपि विभाति**<br>**யத்³யபி விபா⁴தி** | = | விளங்குகிறவராக இருந்தபோதிலும், |
| **तथापि**<br>**ததா²பி** | = | அப்படியிருந்தாலும், |
| **अयं**<br>**அயம்** | = | இவன், |
| **सर्वगतः**<br>**ஸர்வக³த꞉** | = | எங்கும் நிறைந்தவனாயும், |
| **सर्वात्मा**<br>**ஸர்வாத்மா** | = | அனைத்திற்கும் ஆத்மா வாயுமுள்ள, |
| **सच्चिदानन्दः**<br>**ஸச்சிதா³னந்த³꞉** | = | ஸச்சிதாநந்தஸ்வரூபி. |

அதுபோல் யாதவர்களுக்குத் தலைவனாகிய கண்ணபிரான் ஸகுணமூர்த்தியாய் ஒரு இடத்தில் வசிப்பவனாகத் தோன்றியபோதிலும் அவர் எங்கும் நிறைந்த ஸர்வாத்மாவான ஸச்சிதாநந்தரூபிதான் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

**(அவதாரிகை)** இதற்குப் பிரமாணம் காட்டுகிறார்: -

**एको भगवान्रेमे युगपद्गोपीष्वनेकासु ।**
**अथवा विदेहजनकश्रुतदेवभूदेवयोर्हरिर्युगपत् ॥ २०१ ॥**

**ஏகோ ப⁴க³வான் ரேமே யுக³பத்³ கோ³பீஷ்வனேகாஸு ।**
**அத²வா விதே³ஹ ஜனக ஶ்ருததே³வ பூ⁴தே³வயோர் ஹரிர் யுக³பத் ॥ 201 ॥**

| | | |
|---|---|---|
| **भगवान्**<br>**ப⁴க³வான்** | = | ஸ்ரீ கிருஷ்ணபகவான், |
| **एकः**<br>**ஏக꞉** | = | ஒருவரே, |
| **युगपत्**<br>**யுக³பத்** | = | ஒரே சமயத்தில், |
| **अनेकासु गोपीषु**<br>**அனேகாஸு கோ³பீஷு** | = | பல கோபஸ்திரீகளிடத்தில், |

| | | |
|---|---|---|
| **रेमे**<br>**ரேமே** | = | ராஸக்ரீடை செய்தார், |
| **अथवा**<br>**அத²வா** | = | அல்லது, |
| **हरिः**<br>**ஹரி:** | = | விஷ்ணு, |
| **युगपत्**<br>**புக³பத்** | = | ஒரேசமயத்தில், |
| **विदेहजनक**<br>**விதே³ஹ ஜனக** | = | விதேஹநாட்டு மன்னனாகிய ஜனகர், |
| **श्रुतदेवभूदेवयोः**<br>**ஶ்ருததே³வ பூ⁴தே³வயோ** | = | ச்ருததேவர் என்ற அந்தணர் இவ்விருவர்களிடத்திலும், |
| **रेमे**<br>**ரேமே** | = | விருந்துண்டு களிப்புற்றார். |

ஒரே ஸ்ரீ கிருஷ்ணபகவான் ஒரே சமயத்தில் பல கோபஸ்திரீகளுடன் ராஸக்ரீடை செய்தார். மேலும் அவர் ஒருவரே ஒரேசமயத்தில் விதேஹ நாட்டரச ஞன ஜனகருடைய இல்லத்திலும் ச்ருததேவர் என்ற பிராமணருடைய கிருஹத்தி லும் விருந்துண்டு மகிழ்ச்சி பெற்றிருக்கிருர். **(201)**

**अथवा कृष्णाकारां स्वचमूं दुर्योधनोऽपश्यत् ।**
**तस्माद्व्यापक आत्मा भगवान्हरिरीश्वरः कृष्णः ॥ २०२ ॥**

**அத²வா க்ருஷ்ணகாராம் ஸ்வசமூம் து³ர்யோத⁴னோ(அ)பஶ்யத் ।**
**தஸ்மாத்³ வ்யாபக ஆத்மா ப⁴க³வான் ஹரிரீஶ்வர: க்ருஷ்ண: ॥ 202 ॥**

| | | |
|---|---|---|
| **अथवा**<br>**அத²வா** | = | அல்லது, |
| **दुर्योधनः**<br>**து³ர்யோத⁴ன:** | = | துர்யோதனன், |
| **स्वचमूं**<br>**ஸ்வசமூம்** | = | தன்னுடைய ஸைன்யத்தை, |
| **कृष्णाकारां**<br>**க்ருஷ்ணகாராம்** | = | ஸ்ரீ கிருஷ்ணனுடைய உருவமுள்ளதாகவே, |
| **अपश्यत्**<br>**அபஶ்யத்** | = | பார்த்தான், |
| **तस्मात्**<br>**தஸ்மாத்** | = | ஆகையால், |

| | | |
|---|---|---|
| **कृष्णः**<br>**க்ருஷ்ண:** | = | கிருஷ்ணன், |
| **भगवान्**<br>**ப⁴க³வான்** | = | அணிமா முதலிய ஐச்வர்யங்கள்கொண்ட, |
| **हरिः**<br>**ஹரி:** | = | விஷ்ணு, |
| **ईश्वरः**<br>**ஈஶ்வர:** | = | ஈச்வரன், |
| **व्यापकः**<br>**வ்யாபக:** | = | எங்கும் நிறைந்த, |
| **आत्मा**<br>**ஆத்மா** | = | பரமாத்மா. |

துரியோதனன் தன்னுடைய ஸைன்யத்தை ஸ்ரீ கிருஷ்ண வடிவமுள்ளதாகவே கண்டான். ஆகவே ஒரே சமயத்தில் பல இடங்களில் தோன்றுவதால் கிருஷ்ணன் ஈசுவரன் தான். அவன் பகவான் விஷ்ணு அவன் எங்கும் நிறைந்த பரமாத்மா. (202)

(**அவதாரிகை**) கிருஷ்ணனுக்கு ராகத்வேஷங்கள் கிடையாது என்பதைக் காட்டுகிறார்: -

**वक्षसि यदा जघान श्रीवत्सः श्रीपतेः स किं द्वेष्यः ।**
**भक्तानामसुराणामन्येषां वा फलं सदृशम् ॥ २०३ ॥**

**வக்ஷஸி யதா³ ஜகா⁴ன ஶ்ரீவத்ஸ: ஶ்ரீபதே: ஸ கிம் த்³வேஷ்ய: ।**
**ப⁴க்தாநாமஸுராணாமன்யேஷாம் வா ப²லம் ஸத்³ருஶம் ॥ 203 ॥**

| | | |
|---|---|---|
| **श्रीवत्सः**<br>**ஶ்ரீவத்ஸ:** | = | ஸ்ரீ வத்ஸன் என்பவன், |
| **यदा**<br>**யதா³** | = | எப்பொழுது, |
| **वक्षसि**<br>**வக்ஷஸி** | = | மார்பில், |
| **जघान**<br>**ஜகா⁴ன** | = | உதைத்தானோ, |
| **सः**<br>**ஸ:** | = | அவன், |
| **श्रीपतेः**<br>**ஶ்ரீபதே:** | = | லக்ஷ்மீபதியான பகவானுக்கு, |

| | | |
|---|---|---|
| **किं द्वेष्य:**<br>**கிம் த்³வேஷ்ய:** | = | பகைவனா? |
| **भक्तानां**<br>**ப⁴க்தானாம்** | = | பக்தர்களுக்கும், |
| **असुराणां**<br>**அஸுராணாம்** | = | அஸுரர்களுக்கும், |
| **अन्येषां वा**<br>**அன்யேஷாம் வா** | = | மற்றவர்களுக்கும், |
| **फलं**<br>**ப²லம்** | = | பலன், |
| **सदृशम्**<br>**ஸத்³ருஶம்** | = | ஸமமானதே. |

ஸ்ரீவத்ஸன் என்பவன் பகவானுடைய மார்பில் உதைத்தான். அதனால் அவன் அந்த லக்ஷ்மீபதியின் பகைவன் ஆனானா? இல்லை. ஆகையால் பக்தர்களுக்கும் அஸுரர்களுக்கும் மற்றவர்களுக்கும் பகவானால் ஏற்படும் பயன் ஸமமானதே. (203)

**तस्मान्न कोऽपि शत्रुर्नो मित्रं नाप्युदासीनः ।**
**नृहरिः सन्मार्गस्थः सफलः शाखीव यदुनाथः ॥ २०४ ॥**

**தஸ்மான் ன கோ(அ)பி ஶத்ருர்னோ மித்ரம் நாப்யுதா³ஸீன: ।**
**ந்ருஹரி: ஸன்மார்க³ஸ்த²: ஸப²ல: ஶாகீ²வ யது³நாத²: ॥ 204 ॥**

| | | |
|---|---|---|
| **तस्मात्**<br>**தஸ்மாத்** | = | ஆகையால் (பகவானுக்கு), |
| **कोऽपि**<br>**கோ(அ)பி** | = | ஒருவனும், |
| **न शत्रुः**<br>**ந ஶத்ரு:** | = | பகைவன் இல்லை, |
| **नो मित्रं**<br>**நோ மித்ரம்** | = | நண்பனும் இல்லை, |
| **उदासीनः अपि न**<br>**உதா³ஸீன: அபி ந** | = | உதாஸீனனும் இல்லை, |
| **सन्मार्गस्थः**<br>**ஸன்மார்க³ஸ்த²:** | = | நல்ல வழியில் நிற்கின்ற, |
| **सफलः**<br>**ஸப²ல:** | = | பழங்கள் நிறைந்த, |

**शाखी इव** = விருக்ஷம்போல,

**ஶாகீ² இவ**

**यदुनाथः** = யாதவகுலத்திற்குத் தலைவறுன,

**யது³நாத²:**

**नृहरिः** = நரஸிம்மன் (விளங்குகிறுன்.)

**ந்ருஹரி:**

ஆகையால் அந்தப் பரம்பொருளுக்குப் பகைவனுகவோ, நண்பனுகவோ, உதாஸீனனுகவோ ஒருவரும் இல்லை. நேர் வழியில் பழங்களுடன் நிற்கும் மரம் நண்பனென்றே, எதிரி என்றே, உதாஸீனன் என்றே ஒருவரிடமும் வேற்றுமை பாராட்டுவதில்லை. எல்லோரையும் ஸமமாகப் பாவித்துத் தான் நிழலையும் கனிகளை யும் தருகிறது. இதுபோலவே ஈசுவரனும் வேற்றுமை காட்டுவதில்லை. **(204)**

**लोहशलाकनिवहैः स्पर्शाश्मनि भिद्यमानेऽपि ।**
**स्वर्णत्वमेति लौहं द्वेषादपि विद्विषां तथा प्राप्तिः ॥ २०५ ॥**

**லோஹஶலாகனிவஹை: ஸ்பர்ஶாஶ்மனி பி⁴த்³யமானே(அ)பி ।**
**ஸ்வர்ணத்வமேதி லௌஹம் த்³வேஷாத³பி வித்³விஷாம் ததா² ப்ராப்தி: ॥205॥**

**लोहशलाकनिवहैः** = இரும்புக் கம்பிகளின் கூட்டங்களால்,

**லோஹஶலாகனிவஹை:**

**स्पर्शाश्मनि** = ஸ்பர்சக்கல்,

**ஸ்பர்ஶாஶ்மனி**

**भिद्यमाने अपि** = பிளக்கப்பட்டாலும் கூட,

**பி⁴த்³யமானே அபி**

**लौहं** = இரும்பு,

**லௌஹம்**

**स्वर्णत्वं** = பொன்னின் தன்மையை,

**ஸ்வர்ணத்வம்**

**एति** = அடைகிறது,

**ஏதி**

**तथा** = அதுபோலவே,

**ததா²**

**विद्विषां** = பகைவர்களுக்கு,

**வித்³விஷாம்**

**द्वेषात् अपि** = த்வேஷத்தாலும்கூட,

**த்³வேஷாத் அபி**

**प्राप्तिः** = பரம்பொருளை அடைதல் (ஏற்படுகின்றது.)
**ப்ராப்திஃ**

ஸ்பர்சக்கல் தன்னுடன் சேர்ந்த பிற உலோகத்தைத் தங்கமாக ஆக்கிவிடு கிறது. தன்னையே பிளக்கும் இரும்புக் கம்பியையும் அது தங்கமாக ஆக்கி விடுகிறது. அது போலவே பரமாத்மாவை த்வேஷிக்கிறவர்களும் அந்த த்வேஷத்தினாலேயே பரமாத்ம ஸாயுஜ்யத்தை அடைகிறார்கள். **(205)**

(**அவதாரிகை**) மறுபடியும் கிருஷ்ணன் பரமாத்மா என்பதை ஆக்ஷேபிக்கிறார்:-

**नन्वात्मनः सकाशादुत्पन्ना जीवसंततिश्चेयम् ।**
**जगतः प्रियतर आत्मा तत्प्रकृते नैव संभवति ॥ २०६ ॥**

**நன்வாத்மனஃ ஸகாஶாது³த்பன்னா ஜீவ ஸந்ததிஶ்சேயம் ।**
**ஜக³தஃ ப்ரியதர ஆத்மா தத் ப்ரக்ருதே நைவ ஸம்ப⁴வதி ॥ 206 ॥**

**आत्मनः सकाशात्** = பரமாத்மாவினிடமிருந்து,
**ஆத்மனஃ ஸகாஶாத்**
**इयं** = இந்த,
**இயம்**
**जीवसंतति** = ஜீவர்களுடைய பரம்பரை,
**ஜீவ ஸந்ததி**
**उत्पन्ना ननु** = உண்டாயிருக்கிறது அல்லவா?
**உத்பன்னா நனு**
**जगतः** = உலகைக்காட்டிலும்,
**ஜக³தஃ**
**आत्मा** = ஆத்மா,
**ஆத்மா**
**प्रियतर** = மிகவும் பிரியமானது,
**ப்ரியதர**
**तत्** = அது,
**தத்**
**प्रकृते** = இந்த விஷயத்தில்,
**ப்ரக்ருதே**
**नैव संभवति** = ஏற்படவே செய்யாது.
**நைவ ஸம்ப⁴வதி**

பரமாத்மாவினிடமிருந்து ஜீவர்கள் உண்டாகியிருக்கிறார்கள். உலகிலுள்ள மற்றப் பொருள்களைக்காட்டிலும் ஆத்மாதான் மிகவும் பிரியமானது. இவ்விரண்டும்

கிருஷ்ணனிடம் பொருந்தாதே! கிருஷ்ணனிடமிருந்து ஜீவர்கள் உண்டாகவில்லையே! அவர் எல்லோருக்கும் பிரியமானவர் அல்லவே! இவ்விதமிருக்க அவர் எப்படி பரமாத்மாவாக முடியும்? **(206)**

**(அவதாரிகை)** கிருஷ்ணரிடமிருந்து ஜீவர்கள் உண்டானதையும், எல்லோரும் கிருஷ்ணரிடம் மிகுந்த பிரீதிகொண்டிருப்பதையும் காட்டி ஸமாதானம் கூறுகிறார்: -

**वत्साहरणावसरे पृथग्वयोरूपवासनाभूषान् ।**
**हरिरजमोहं कर्तुं सवत्सगोपान्विनिर्ममे स्वस्मात् ॥ २०७ ॥**

**வத்ஸாஹரணாவஸரே ப்ருத²க்³வயோ ரூபவாஸநா பூ⁴ஷான் ।**
**ஹரிரஜ மோஹம் கர்தும் ஸவத்ஸ கோ³பான் விநிர்மமே ஸ்வஸ்மாத் ॥ 207 ॥**

**वत्साहरणावसरे** **வத்ஸாஹரணாவஸரே** = கன்றுக்குட்டிகளைத் திருடிச் சென்ற ஸமயத்தில்,

**हरि** **ஹரி** = ஸ்ரீ கிருஷ்ணபகவான்,

**अजमोहं** **அஜமோஹம்** = பிரம்ம தேவனுக்கு மோஹத்தை,

**कर्तुं** **கர்தும்** = உண்டுபண்ணுவதற்காக,

**स्वस्मात्** **ஸ்வஸ்மாத்** = தன்னிடமிருந்து,

**पृथक्** **ப்ருத²க்** = தனித்தனியான,

**वयो** **வயோ** = வயது,

**रूप** **ரூப** = உருவம்,

**वासना** **வாஸநா** = வாஸனை,

**भूषान्** **பூ⁴ஷான்** = ஆடையாபரணங்கள் இவைகளையுடைய,

**सवत्सगोपान्** **ஸவத்ஸகோ³பான்** = கன்றுக்குட்டிகளுடன்கூடிய இடையர்களை,

**विनिर्ममे** **விநிர்மமே** = படைத்தார்.

பிரம்மதேவர் ஒருசமயம் கோபச்சிறுவர்களையும் கன்றுக்குட்டிகளையும் அபகரித்துச்சென்ருர். அப்பொழுது அவருக்கு மோஹம் ஏற்படுவதற்காகக் கண்ண பிரான் தன்னிடமிருந்தே வெவ்வேறுன வயது, உருவம், அலங்காரம், ஸம்ஸ்காரம் இவற்றுடன் கூடிய அத்தனை கோபர்களையும் கன்றுகளையும் உண்டுபண்ணினுர். **(207)**

**अग्नेर्यथा स्फुलिङ्गाः क्षुद्रास्तु व्युच्चरन्तीति ।**
**[1]श्रुत्यर्थं दर्शयितुं स्वतनोरतनोत्स जीवसंदोहम् ॥ २०८ ॥**

**அக்³னேர் யதா² ஸ்பு²லிங்கா³: க்ஷுத்³ராஸ்து வ்யுச்சரந்தீதி ।**
**[1]ஶ்ருத்யர்த²ம் த³ர்ஶயிதும் ஸ்வதனோரதனோத்ஸ ஜீவஸந்தோ³ஹம் ॥ 208 ॥**

**अग्नेः** = நெருப்பிலிருந்து,
**அக்³னே:**
**क्षुद्राः** = சிறிய,
**க்ஷுத்³ரா:**
**स्फुलिङ्गाः** = தீப்பொரிகள்,
**ஸ்பு²லிங்கா³:**
**यथा** = எப்படி,
**யதா²**
**व्युच्चरन्ति** = கிளம்புகின்றனவோ,
**வ்யுச்சரந்தி**
**इति** = என்ற,
**இதி**
**श्रुत्यर्थं** = உபநிஷத்தின் பொருளை,
**ஶ்ருத்யர்த²ம்**
**दर्शयितुं** = நேரில் காட்டுவதற்கு,
**த³ர்ஶயிதும்**
**सः** = அந்த பரமாத்மா,
**ஸ:**
**स्वतनोः** = தன்னுடைய உடலிலிருந்து,
**ஸ்வதனோ:**
**जीवसंदोहम्** = ஜீவர்களுடைய ஸமூகத்தை,
**ஜீவஸந்தோ³ஹம்**
**अतनोत्** = படைத்தார்.
**அதனோத்**

"கொழுந்துவிட்டு எரிகிற அக்னியிலிருந்து தீப்பொரிகள் கிளம்புவதுபோல் ஜீவர்கள் பரமாத்மாவினிடத்திலிருந்து உதிக்கின்றன" என்ற உபநிஷத்தின் பொருளை நேரில் காட்டுவதற்காகவே பகவான் தன்னுடைய உடலிலிருந்து அநேக ஜீவர்களைப்

படைத்திருக்கிறுர். ஆகையால் பல ஜீவர்களைப் படைத்துள்ள கிருஷ்ணன் பரமாத்மா தான்.

---

[1] तदेतत् सत्यं यथा सुदीप्तात् पावकाद् विस्फुलिङ्गाः सहस्रशः प्रभवन्ते सरूपाः।
तथाक्षराद् विविधाः सोम्य भावाः प्रजायन्ते तत्र चैवापि यन्ति ॥

**தே³தத் ஸத்யம் யதா² ஸுதீ³ப்தாத் பாவகாத்³ விஸ்பு²லிங்கா³ঃ ஸஹஸ்ரஶঃ ப்ரப⁴வந்தே ஸரூபாঃ।**
**ததா²க்ஷராத்³ விவிதா⁴ঃ ஸோம்ய பா⁴வாঃ ப்ரஜாயந்தே தத்ர சைவாபி யந்தி ॥**

(முண்டகம். 2-1)

---

(**அவதாரிகை**) கிருஷ்ணன் எல்லோருக்கும் பிரியமானவர் என்பதைக் காட்டு கிறுர்: -

**यमुनातीरनिकुञ्जे कदाचिदपि वत्सकांश्च चारयति ।**
**कृष्णे तथार्यगोपेषु च वरगोष्ठेषु चारयत्स्वारात् ॥ २०९ ॥**

**யமுனு தீர நிகுஞ்ஜே கதா³சித³பி வத்ஸகாம்ஶ்ச சாரயதி ।**
**க்ருஷ்ணே ததா²ர்யகோ³பேஷு ச வரகோ³ஷ்டே²ஷு சாரயத்ஸ்வாராத் ॥ 209 ॥**

**वत्सं निरीक्ष्य दूराद्गावः स्नेहेन संभ्रान्ताः ।**
**तदभिमुखं धावन्त्यः प्रययुर्गोपैश्च दुर्वाराः ॥ २१० ॥**

**வத்ஸம் நிரீக்ஷ்ய தூ³ராத்³கா³வঃ ஸ்னேஹேன ஸம்ப்⁴ராந்தாঃ ।**
**தத³பி⁴முக²ம் தா⁴வந்த்யঃ ப்ரயயுர்கோ³பைஶ்ச து³ர்வாராঃ ॥ 210 ॥**

**प्रस्रवभरेण भूयः स्रुतस्तनाः प्राप्य पूर्ववद्वत्सान् ।**
**पृथुरसनया लिहत्यस्तर्णकवत्योऽप्यपाययन्प्रमुदा ॥ २११ ॥**

**ப்ரஸ்ரவப⁴ரேண பூ⁴யঃ ஸ்ருதஸ்தனாঃ ப்ராப்ய பூர்வவத்³வத்ஸான் ।**
**ப்ருது²ரஸனயா லிஹத்யஸ்தர்ணகவத்யோ(அ)ப்யபாயயன்ப்ரமுதா³ ॥ 211 ॥**

**गोपा अपि निजबालाञ्जगृहुर्मूर्धानमाघ्राय ।**
**इत्थमलौकिकलाभस्तेषां तत्र क्षणं ववृधे ॥ २१२ ॥**

**கோ³பா அபி நிஜபா³லாஞ்ஜக்³ருஹுர்மூர்தா⁴னமாக்⁴ராய ।**
**இத்த²மலௌகிகலாப⁴ஸ்தேஷாம் தத்ர க்ஷணம் வவ்ருதே⁴ ॥ 212 ॥**

**कदाचिदपि** **கதா³சித³பி** = ஒருசமயம்,

**यमुनातीरनिकुञ्जे** **யமுனு தீர நிகுஞ்ஜே** = யமுனை நதிக் கரையிலுள்ள கொடிகளிடையில்,

| | | |
|---|---|---|
| **कृष्णे**<br>**க்ருஷ்ணே** | = | கிருஷ்ணன், |
| **वत्सकान्**<br>**வத்ஸகான்** | = | சிறிய கன்றுக்குட்டிகளை, |
| **चारयति**<br>**சாரயதி** | = | மேய்த்துக் கொண்டிருக்கும்பொழுது, |
| **तथा**<br>**ததா²** | = | அதுபோலவே, |
| **आर्यगोपेषु**<br>**ஆர்யகோ³பேஷு** | = | பெரிய இடையர்கள், |
| **आरात्**<br>**ஆராத்** | = | தூரத்தில், |
| **वरगोष्ठेषु**<br>**வரகோ³ஷ்டே²ஷு** | = | சிறந்த மேய்ச்சல்தரைகளில், |
| **चारयत्सु च**<br>**சாரயத்ஸு ச** | = | மாடுகளை மேய்த்துக் கொண்டிருக்கும்பொழுதும், |
| **दूरात्**<br>**தூ³ராத்** | = | வெகு தூரத்திலிருந்து, |
| **वत्सं**<br>**வத்ஸம்** | = | கன்றை, |
| **निरीक्ष्य**<br>**நிரீக்ஷ்ய** | = | உற்றுநோக்கி, |
| **स्नेहेन**<br>**ஸ்னேஹேன** | = | அன்பால், |
| **संभ्रान्ताः**<br>**ஸம்ப்⁴ராந்தா:** | = | பரபரப்படைந்த, |
| **गावः**<br>**கா³வ:** | = | பசுக்கள், |
| **तदभिमुखं**<br>**தத³பி⁴முக²ம்** | = | அவைகளை நோக்கி, |
| **धावन्त्यः**<br>**தா⁴வந்த்ய:** | = | ஓடுகின்றவைகளாயும், |
| **गोपैश्च**<br>**கோ³பைஶ்ச** | = | இடையர்களாலும், |
| **दुर्वाराः**<br>**து³ர்வாரா:** | = | தடுக்க முடியாதவைகளாயும், |

**प्रययुः** = சென்றன,
**ப்ரயயு:**

**प्रस्रवभरेण** = பால் பெருக்கால்,
**ப்ரஸ்ரவப4ரேண**

**भूयः** = அடிக்கடி,
**பூ4ய:**

**स्रुतस्तनाः** = பாலைச்சொரிகின்ற மடியுடையவைகளாக,
**ஸ்ருதஸ்தனா:**

**पूर्ववत्** = முன்போலவே,
**பூர்வவத்**

**वत्सान्** = கன்றுகளை,
**வத்ஸான்**

**प्राप्य** = அடைந்து,
**ப்ராப்ய**

**तर्णकवत्योपि** = வேறு கன்றுகளையுடையதாயிருந்தாலும் அப்பசுக்கள்,
**தர்ணகவத்யோபி**

**पृथुरसनया** = பெரிய நாவினால்,
**ப்ருது2ரஸனயா**

**लिहत्यः** = நக்கிக் கொண்டு,
**லிஹத்ய:**

**प्रमुदा** = மிகுந்த மகிழ்ச்சியுடன்,
**ப்ரமுதா3**

**अपाययन्** = பாலூட்டச்செய்தன,
**அபாயயன்**

**गोपा अपि** = இடையர்களும்,
**கோ3பா அபி**

**निजबालान्** = தங்களுடைய பிள்ளைகளை,
**நிஜபா3லான்**

**मूर्धानं आघ्राय** = உச்சி முகர்ந்து,
**மூர்தா4னம் ஆக்4ராய**

**जगृहुः** = வாரி எடுத்துக்கொண்டார்கள்,
**ஜக்3ருஹு:**

**इत्थं** = இவ்வாறு,
**இத்த2ம்**

**तेषां** = அவர்களுக்கு,
**தேஷாம்**

**तत्र** = அங்கு,

**தத்ர**

**अलौकिकलाभः** = இம்மையில் கிடைப்பதற்கரிய லாபம்,

**அலௌகிகலாப⁴:**

**क्षणं** = சிறிது நேரம்,

**க்ஷணம்**

**ववृधे** = வளர்ந்தது.

**வவ்ருதே⁴**

ஒருநாள் யமுனைக்கரையில் ஸ்ரீ கிருஷ்ணன் கோப பாலகர்களுடன் கன்றுக் குட்டிகளை மேய்த்துக்கொண்டு இருந்தான். அப்பொழுது வயது முதிர்ந்த ஆயர்களும் வெகுதூரத்தில் மாடுகளை மேய்த்துக்கொண்டிருந்தனர். அப்பசுக்கள் வெகுதூரத்தில் தங்களுடைய கன்றுகளைக் கண்டவுடன் கனிவுடன் அவைகளிடம் விரைந்தன. ஆயர்கள் தடுத்தும் அவைகள் தயங்காமல் அக்கன்றுகளை அணுகிச் சென்றன. அந்தப் பசுமாடுகளுக்கு இந்தக் கன்றுகளுக்குப் பிறகு வேறு கன்றுகள் பிறந்துள்ள போதிலும் இவைகளிடம் அதிகமான வாஞ்சையினால் அவைகளின் மடிகளிலிருந்து பால் சொரிந்தது. அவைகள் தங்களது கன்றுகளை அடைந்து அவைகளை அன்புடன் தங்களுடைய நாவினால் நக்கிக்கொடுத்து மிகுந்த சந்தோஷத்துடன் பாலைக் குடிக்கச் செய்தன. அந்த ஆயர்களும் தம் தம் பிள்ளைகளைக் கண்டதும் வந்த கார்யத்தை மறந்து பிரீதி விசேஷத்தால் பிள்ளைகளைத் தழுவி உச்சி முகர்ந்து இன்புற்றனர். இவ்வாறு அந்தப் பசுக்களுக்கும் ஆயர்களுக்கும் இம்மையிலும் மறுமையிலும் கிடைக்கப் பெறாத ஒப்புயர்வற்ற ஆனந்தம் உண்டாயிற்று. **(209-212)**

## गोपा वत्साश्चान्ये पूर्वं कृष्णात्मका ह्यभवन् ।
## तेनात्मनः प्रियत्वं दर्शितमेतेषु कृष्णेन ॥ २१३ ॥

**கோ³பா வத்ஸாஸ்சான்யே பூர்வம் க்ருஷ்ணாத்மகா ஹ்யப⁴வன் ।**
**தேனாத்மன: ப்ரியத்வம் த³ர்ஶிதமேதேஷு க்ருஷ்ணேன ॥ 213 ॥**

**पूर्वं** = முன்பு,

**பூர்வம்**

**अन्ये** = வேறாக இருந்த,

**அன்யே**

**गोपा** = கோபச்சிறுவர்களும்,

**கோ³பா**

**वत्साः च** = கன்றுகளும், (இப்பொழுது),

**வத்ஸா: ச**

**कृष्णात्मका हि** = கிருஷ்ணரூபமாகவே,

**க்ருஷ்ணாத்மகா ஹி**

अभवन् = ஆய்விட்டன,

அப⁴வன்

तेन = அதனுல்,

தேன

कृष्णेन = கிருஷ்ணனுல்,

க்ருஷ்ணேன

एतेषु = இவைகளில்,

ஏதேஷு

आत्मनः = ஆத்மாவின்,

ஆத்மனః

प्रियत्वं = பிரீதி,

ப்ரியத்வம்

दर्शितम् = காட்டப்பட்டது.

த³ர்ஶிதம்

முன்னால் வேருக இருந்த அந்தக் கன்றுகளும் இடைச் சிறுவர்களும் இப்பொழுது கிருஷ்ண ரூபமாகவே ஆய்விட்டனர் இதனுல் உலகத்திற்கெல்லாம் ஆத்ம ரூபமான அவர்தான் மற்ற எல்லாப் பொருள்களைக்காட்டிலும் பிரியமானவர் என்பது நன்கு புலப்படுகின்றது. **(213)**

**[1]प्रेयः पुत्राद्वित्तात्प्रेयोऽन्यस्माच्च सर्वस्मात् ।**
**अन्तरतरं यदात्मेत्युपनिषदः सत्यताऽभिहिता ॥ २१४ ॥**

**[1]ப்ரேயஃ புத்ராத்³ வித்தாத் ப்ரேயோ(அ)ன்யஸ்மாச்ச ஸர்வஸ்மாத் ।**
**அந்தர தரம் யதா³த்மேத்யுபநிஷத³ஃ ஸத்யதா(அ)பி⁴ஹிதா ॥ 214 ॥**

यत् = எது,

யத்

पुत्रात् = புதல்வனைக்காட்டிலும்,

புத்ராத்

प्रेयः = பிரியமானதோ,

ப்ரேயஃ

वित्तात् = செல்வத்தைக்காட்டிலும்,

வித்தாத்

प्रेयः = மிகவும் பிரியமானதோ,

ப்ரேயஃ

अन्यस्मात् सर्वस्माच्च = மற்ற எல்லாவற்றைக் காட்டிலும்,

அன்யஸ்மாத் ஸர்வஸ்மாச்ச

**अन्तरतरं** = மிகச்சிறந்ததோ அதுதான்,

**அந்தர தரம்**

**आत्मा** = ஆத்மா,

**ஆத்மா**

**इति** = என்ற,

**இதி**

**उपनिषदः** = உபநிஷத்தின்,

**உபநிஷத³ஃ**

**सत्यता** = தத்வம்,

**ஸத்யதா**

**अभिहिता** = கூறப்பட்டுள்ளது.

**அபி⁴ஹிதா**

இந்த நிகழ்ச்சியால் புதல்வன், செல்வம் மற்றுமுள்ள எல்லாப் பொருள்களைக் காட்டிலும் ஆத்மாதான் மிகவும் பிரியமான வஸ்து என்ற உபநிஷத்தின் தத்வம் நன்கு விளக்கப்படுகின்றது. **(214)**

---

[1]**तदेतत्प्रेयः पुत्रात् प्रेयो वित्तात्प्रेयोऽन्यस्मात्सर्वस्मादन्तरतरं यदयमात्मा।**

**ததே³தத்ப்ரேயஃ புத்ராத் ப்ரேயோ வித்தாத்ப்ரேயோ(அ)ன்யஸ்மாத்ஸர்வஸ்மாத³ந்தரதரம் யத³யமாத்மா।** (பிருஹதாரண்யகம் 1-4-8)

---

**ननूच्चावचभूतेष्वात्मा सम एव वर्ततेऽथ हरिः ।**
**दुर्योधनेऽर्जुने वातरतमभावं कथं नु गतवान्सः || २१५ ||**

**நனூச்சாவசபூ⁴தேஷ்வாத்மா ஸம ஏவ வர்ததே(அ)த² ஹரிஃ ।**
**து³ர்யோத⁴னே(அ)ர்ஜுனே வா தரதமபா⁴வம் கத²ம் நு க³தவான் ஸஃ ॥ 215 ॥**

**उच्चावचभूतेषु** = உயர்வு, தாழ்வு என்ற வேற்றுமைகளை

**உச்சாவசபூ⁴தேஷு** உடைய பிராணிகளிடத்தில்,

**आत्मा** = ஆத்மா,

**ஆத்மா**

**सम एव** = ஸமமாகவே,

**ஸம ஏவ**

**वर्तते ननु** = இருக்கிறதல்லவா,

**வர்ததே நனு**

**अथ** = பின்னர்,

**அத²**

| | | |
|---|---|---|
| **सः हरिः**<br>**ஸஃ ஹரிஃ** | = | அந்த கிருஷ்ணன், |
| **दुर्योधने**<br>**து³ர்யோத⁴னே** | = | துர்யோதனனிடத்திலும், |
| **अर्जुने**<br>**அர்ஜுனே** | = | அர்ஜுனனிடத்திலும், |
| **कथं**<br>**கத²ம்** | = | எப்படி, |
| **तरतमभावं**<br>**தரதமபா⁴வம்** | = | வெவ்வேறு தன்மையை, |
| **गतवान् नु**<br>**க³தவான் நு** | = | அடைந்தார். |

பிராணிகளின் சரீரங்களில் பலவித வேற்றுமைகள் காணப்படுகின்றன. ஆனாலும் எல்லா இடங்களிலும் ஆத்மா ஒரே மாதிரியாகவே இருக்கிறார். அவர் ஸ்வரூபத்தில் வேற்றுமை இல்லை என்று கூறப்படுகிறது. அப்படியிருக்க கிருஷ்ணன் ஆத்மாவாக இருப்பானேயாகில் துர்யோதனனிடமும் அர்ஜனனிடமும் எவ்வாறு வேற்றுமை பாராட்டினார்? **(215)**

**बधिरान्धपङ्गुमूकाः दीर्घाः खर्वाः सरूपाश्च ।**
**सर्वे विधिना दृष्टाः सवत्सगोपाश्चतुर्भुजास्तेन ॥ २१६ ॥**

**ப³தி⁴ராந்த⁴ பங்கு³மூகாஃ தீ³ர்கா⁴ஃ க²ர்வாஃ ஸரூபாஶ்ச ।**
**ஸர்வே விதி⁴னா த்³ருஷ்டாஃ ஸவத்ஸ கோ³பாஶ் சதுர்பு⁴ஜாஸ்தேன ॥ 216 ॥**

| | | |
|---|---|---|
| **बधिर**<br>**ப³தி⁴ர** | = | செவிடர், |
| **अन्ध**<br>**அந்த⁴** | = | குருடர், |
| **पंगु**<br>**பங்கு³** | = | நொண்டி, |
| **मूकाः**<br>**மூகாஃ** | = | ஊமையர்கள், |
| **दीर्घाः**<br>**தீ³ர்கா⁴ஃ** | = | உயரமானவர், |
| **खर्वाः**<br>**க²ர்வாஃ** | = | குட்டையானவர், |
| **सरूपाः**<br>**ஸரூபாஃ** | = | அழகியவர் இவ்வாறான, |

| | | |
|---|---|---|
| **सवत्सगोपाः** ஸவத்ஸகோ³பா: | = | கன்றுகளுடன் கூடிய இடையர்கள், |
| **सर्वे च** ஸர்வே ச | = | எல்லோரும், |
| **तेन विधिना** தேன விதி⁴னு | = | அந்தப் பிரம்மதேவனுல், |
| **चतुर्भुजाः** சதுர்பு⁴ஜாஃ | = | நான்கு கைகளையுடைய விஷ்ணு ஸ்வரூபமாக, |
| **दृष्टाः** த்³ருஷ்டாஃ | = | காணப்பட்டனர். |

செவிடன், குருடன், நொண்டி, ஊமையன், வளர்ந்தவன், குட்டையன், அழகுள்ளவன் என்ற பற்பல வித்யாஸங்களையுடைய இடையர்களையும் கன்றுக்குட்டிகளையும் பிரம்மதேவர் (பின்னுல்) ஸ்ரீ கிருஷ்ணரூபமாகக் கண்டார். மற்றவர்கள் வேற்றுமையைப் பார்த்தார்கள். ஆகவே கிருஷ்ணர் யாவருக்கும் ஸமமாகத்தான் இருக்கிறுர். அவருடைய உண்மை ஸ்வரூபத்தை அறிந்த அர்ஜுனுதியர் நன்மை பெறுகின்றனர். இதனை அறியாதவர் நன்மை பெறுவதில்லை. அவரவர்களுடைய மனதிலுள்ள குண தோஷங்களால் ஸமமாக இருக்கும் கிருஷ்ணனை வெவ்வேறுகப் பார்க்கின்றனர். **(216)**

**[1]भूतसमत्वं नृहरेः समो हि मशकेन नागेन ।**
**लोकैः समस्त्रिभिर्वेत्युपनिषदा भाषितं साक्षात् ॥ २१७ ॥**

**[1]பூ⁴தஸமத்வம் ந்ருஹரேஃ ஸமோ ஹி மஶகேன நாகே³ன ।**
**லோகைஃ ஸமஸ்த்ரிபி⁴ர்வேத்யுபநிஷதா³ பா⁴ஷிதம் ஸாக்ஷாத் ॥ 217 ॥**

| | | |
|---|---|---|
| **मशकेन** மஶகேன | = | கொசுவுடனும், |
| **नागेन** நாகே³ன | = | யானையுடனும், |
| **समः** ஸமஃ | = | ஸமமானவர், |
| **त्रिभिः लोकैः वा** த்ரிபி⁴ஃ லோகைஃ வா | = | மூன்று உலகங்களுடனும், |
| **समः हि** ஸமஃ ஹி | = | ஸமமானவர் அல்லவா, |
| **इति** இதி | = | என்று, |

**नृहरेः** = நரஸிம்ம ரூபத்தையுடைய பகவானுக்கு,

**ந்ருஹரே:**

**भूतसमत्वं** = எல்லாப் பிராணிகளிடத்தும் ஸமநிலை,

**பூ⁴தஸமத்வம்**

**उपनिषदा** = உபநிஷத்தாலேயே,

**உபநிஷதா³**

**साक्षात्** = நேராக,

**ஸாக்ஷாத்**

**भाषितं** = கூறப்பட்டுள்ளது.

**பா⁴ஷிதம்**

யானையிடத்திலும், கொசுவிடத்திலும், மற்றுமுள்ள எல்லாப்பிராணிகளிடத்திலும் மூன்று உலகங்களிலும் பகவான் ஸமமாகவே நிலவுகிறார் என்று உபநிஷத்துகள் கூறுகின்றன. **(217)**

---

[1]**समो मशकेन समो नागेन सम एभिस्त्रिभिर्लोकैः समोऽनेन सर्वेण**

**ஸமோ மஶகேன ஸமோ நாகே³ன ஸம ஏபி⁴ஸ்த்ரிபி⁴ர்லோகை:**
**ஸமோ(அ)னேன ஸர்வேண** (பிருஹதாரண்யகம் 1-3-22)

---

**आत्मा तावदभोक्ता तथैव ननु वासुदेवश्चेत् ।**
**नानाकैतवयत्नैः पररमणीभिः कथं रमते ॥ २१८ ॥**

**ஆத்மா தாவத³போ⁴க்தா ததை²வ நனு வாஸுதே³வஶ்சேத் ।**
**நாநாகைதவ யத்னை: பரரமணீபி⁴: கத²ம் ரமதே ॥ 218 ॥**

**आत्मा तावत्** = ஆத்மாவோ எனில்,

**ஆத்மா தாவத்**

**अभोक्ता** = போகத்தை அனுபவிக்காதவன்,

**அபோ⁴க்தா**

**ननु** = அல்லவா!

**நனு**

**तथैव** = அப்படியே (அபோக்தாவாக),

**ததை²வ**

**वासुदेवः** = ஸ்ரீ கிருஷ்ணன்,

**வாஸுதே³வ:**

**चेत्** = இருப்பானாகில்,

**சேத்**

**नानाकैतवयत्नैः** = பற்பல சூழ்ச்சிகளுடன்கூடிய முயற்சிகளால்,

**நாநாகைதவ யத்நை:**

**पररमणीभिः** = பிறர் மனைவியருடன்,

**பரரமணீபி⁴:**

**कथं** = எவ்வாறு,

**கத²ம்**

**रमते** = போகத்தை யனுபவிக்கின்றார்?

**ரமதே**

ஆத்மா போக்தாவல்லன் அல்லவா! ஸ்ரீ கிருஷ்ணன் பரமாத்மாவானால் அவரும் அபோக்தாவாக இருக்கவேண்டுமே! அவ்விதம் இல்லையே! அக்கண்ண பிரான் பற்பல சூழ்ச்சிகளைச் செய்து ஆயர்குல மங்கையருடன் கூடி போகங்களை அநுபவித்தாரே! இது எப்படிப் பொருந்தும்? **(218)**

## सुन्दरमभिनवरूपं कृष्णं दृष्ट्वा विमोहिता गोप्यः ।
## तमभिलषन्त्यो मनसा कामाद्विरहव्यथां प्रापुः ॥ २१९ ॥

**ஸுந்த³ரமபி⁴னவரூபம் க்ருஷ்ணம் த்³ருஷ்ட்வா விமோஹிதா கோ³ப்ய: ।**
**தமபி⁴லஷந்த்யோ மனஸா காமாத்³விரஹவ்யதா²ம் ப்ராபு: ॥ 219 ॥**

**सुन्दरं** = அழகியவனும்,

**ஸுந்த³ரம்**

**अभिनवरूपं** = புதிய தோற்றத்தை உடையவனுமான,

**அபி⁴னவரூபம்**

**कृष्णं** = கிருஷ்ணனை,

**க்ருஷ்ணம்**

**दृष्ट्वा** = பார்த்து,

**த்³ருஷ்ட்வா**

**विमोहिता** = மோஹமடைந்த,

**விமோஹிதா**

**गोप्यः** = கோபஸ்திரீகள்,

**கோ³ப்ய:**

**मनसा** = மனதால்,

**மனஸா**

**तं** = அவனை,

**தம்**

**अभिलषन्त्यः** = விரும்புகின்றவர்களாய்,

**அபி⁴லஷந்த்ய:**

**कामात्** = ஆசையால்,

**காமாத்**

**विरहव्यथां** = விரஹவேதனையை,

**விரஹவ்யதா²ம்**

**प्रापु:** = அடைந்தார்கள்,

**ப்ராபு:**

மிகவும் அழகியதும் அற்புதமானதுமான ஸ்ரீ கிருஷ்ணனுடைய ரூபத்தைக் கண்ட கோபியர் அவர் வசப்பட்டு அவரை விரும்பினர். அவரை அடைய முடியாமல் இருக்கும் பொழுது அவரது பிரிவாற்றுமையால் வருந்தினர். **(219)**

**गच्छन्त्यस्तिष्ठन्त्यो गृहकृत्यपराश्च भुञ्जाना: ।**
**कृष्णं विनाऽन्यविषयं समक्षमपि जातु नाविन्दन् ॥ २२० ॥**

**க³ச்ச²ந்த்யஸ் திஷ்ட²ந்த்யோ க்³ருஹக்ருத்ய பராஸ்ச பு⁴ஞ்ஜானா: ।**
**க்ருஷ்ணம் வினா(அ)ன்ய விஷயம் ஸமக்ஷமபி ஜாது நாவிந்த³ன் ॥ 220 ॥**

**गच्छन्त्य** = சென்றுகொண்டிருக்கும்பொழுதும்,

**க³ச்ச²ந்த்ய**

**तिष्ठन्त्य:** = நின்றுகொண்டிருக்கும்பொழுதும்,

**திஷ்ட²ந்த்ய:**

**गृहकृत्यपराश्च** = வீட்டுவேலைகளில் ஈடுபட்டிருக்கும்பொழுதும்,

**க்³ருஹக்ருத்ய பராஸ்ச**

**भुञ्जाना:** = சாப்பிட்டுக் கொண்டிருக்கும்பொழுதும்,

**பு⁴ஞ்ஜானா:**

**कृष्णं विना** = ஸ்ரீ கிருஷ்ணனைத் தவிர,

**க்ருஷ்ணம் வினா**

**अन्यविषयं** = மற்ற பொருளை,

**அன்யவிஷயம்**

**समक्षमपि** = கண்களுக்கு முன்தோன்றினும்,

**ஸமக்ஷமபி**

**जातु** = ஒருபொழுது,

**ஜாது**

**न अविन्दन्** = அறிந்து கொள்ளவில்லை.

**ந அவிந்த³ன்**

அம்மங்கையர் அல்லும் பகலும் கண்ணபிரானையே நினைத்துக்கொண்டிருந்த னர். அவர்கள் நடக்கும்பொழுதும், நிற்கும்பொழுதும், வீட்டு வேலைகளில் ஈடுபட்டி ருக்கும் பொழுதும், சாப்பிட்டுக்கொண்டிருக்கும்பொழுதும் கண்ணனையே தியானம்

செய்துவந்தனர். அவ்வாறு அவர்களுடைய மனம் கண்ணனிடத்தில் லயித்துவிட்ட தால் அவர்கள் தங்கள் கண்களுக்கு முன் தோன்றும் மற்ற பொருள்களைப் பார்க்க வேயில்லை. **(220)**

## दुःसहविरहभ्रान्त्या स्वपतीन्ददृशुस्तरून्नरांश्च पशून् । हरिरयमिति सुप्रीताः सरभसमालिङ्गयांचक्रुः ॥ २२१ ॥

**து3ஃஸஹ விரஹ ப்4ராந்த்யா ஸ்வபதீந் த3த்3ருஶுஸ் தரூன் னராம்ஶ்ச பஶூன் ।**
**ஹரிரயமிதி ஸுப்ரீதாஃ ஸரப4ஸமாலிங்க3யாஞ்சக்ருஃ ॥ 221 ॥**

**दुःसह** = தாங்கமுடியாத,
**து3ஃஸஹ**

**विरह** = பிரிவால் உண்டான,
**விரஹ**

**भ्रान्त्या** = மயக்கத்தால்,
**ப்4ராந்த்யா**

**स्वपतीन्** = தங்களுடைய கணவர்களையும்,
**ஸ்வபதீன்**

**तरून्** = மரங்களையும்,
**தரூன்**

**नरान्** = மனிதர்களையும்,
**நரான்**

**पशून् च** = விலங்குகளையும்,
**பஶூன் ச**

**अयं हरिः** = இவன் ஸ்ரீ கிருஷ்ணன்,
**அயம் ஹரிஃ**

**इति** = என்று,
**இதி**

**ददृशुः** = பார்த்தார்கள். (அதனால்),
**த3த்3ருஶுஃ**

**सुप्रीताः** = மிகுந்த ஸந்தோஷமடைந்தவர்களாய்,
**ஸுப்ரீதாஃ**

**सरभसं** = பரபரப்புடன்,
**ஸரப4ஸம்**

**आलिङ्गयांचक्रुः** = கட்டித்தழுவிக்கொண்டார்கள்.
**ஆலிங்க3யாஞ்சக்ருஃ**

அக்கோபியர்கள் ஸ்ரீ கிருஷ்ணனின் பிரிவாற்றுமையைத் தாங்கமாட்டாமல் மயக்கமடைந்தவர்களாய்த் தங்களுடைய கணவர்களேயும், மரங்களேயும் மனிதர்களேயும் பசுக்களேயும்கூட ஸ்ரீ கிருஷ்ணன் என்றே கருதி அன்பு மிகுதியால் இறுகத் தழுவி அகமகிழ்ந்தனர். **(221)**

**कापि च कृष्णायन्ती कस्याश्चित्पूतनायन्त्याः ।**
**अपिवत्स्तनमिति साक्षाद्व्यासो नारायणः प्राह ॥ २२२ ॥**

**காபி ச க்ருஷ்ணுயந்தீ கஸ்யாஶ்சித் பூதனுயந்த்யா꞉ ।**
**அபிவத் ஸ்தனமிதி ஸாக்ஷாத்³ வ்யாஸோ நாராயண꞉ ப்ராஹ ॥ 222 ॥**

**काऽपि** = ஒருவள்,
**கா(அ)பி**

**कृष्णायन्ती** = கிருஷ்ணனுக நடித்துக் கொண்டு,
**க்ருஷ்ணுயந்தீ**

**पूतनायन्त्याः** = பூதனேயாக நடிக்கும்,
**பூதனுயந்த்யா꞉**

**कस्याश्चित्** = ஒருவளுடைய,
**கஸ்யாஶ்சித்**

**स्तनं** = ஸ்தன்யத்தை,
**ஸ்தனம்**

**अपिवत्** = பருகினுள்,
**அபிவத்**

**इति** = என்று,
**இதி**

**साक्षात् द्व्यासः** = வியாஸரூபியான,
**ஸாக்ஷாத் த்³வ்யாஸ꞉**

**नारायणः** = பகவான்,
**நாராயண꞉**

**प्राह** = கூறுகிறுர்.
**ப்ராஹ**

ஒரு கோபி தன்னேயே ஸ்ரீ கிருஷ்ணனுகப் பாவித்துக் கொண்டாள். மற்றேரு கோபி பூதனேபோல் நடித்துக் கொண்டு அவனுக்கு ஸ்தன்யபானம் செய்விக்க வந்தாள். கிருஷ்ணனுக நடிக்கின்ற கோபி அவளிடம் ஸ்தன்யபானம் செய்தாள். இவ்வாறுக கோபிகள் தங்களேயே கண்ணன் எனக் கருதி அவனுடைய திருவிளேயாடல்களே நடித்து மகிழ்ந்தனர்" இவ்வாறு வியாஸ பகவான் கூறியுள்ளார். **(222)**

**तस्मान्निजनिजदयितान्कृष्णाकारान्व्रजस्त्रियो वीक्ष्य ।**
**स्वपरनृपतिपत्नीनामन्तर्यामी हरिः साक्षात् ॥ २२३ ॥**

**தஸ்மாந்நிஜ நிஜ த³யிதான் க்ருஷ்ணாகாரான் வ்ரஜஸ்த்ரியோ வீக்ஷ்ய ।**
**ஸ்வபர ந்ருபதி பத்னீநாமந்தர்யாமீ ஹரி꞉ ஸாக்ஷாத் ॥ 223 ॥**

**तस्मात्** = ஆகையால்,
**தஸ்மாத்**

**व्रजस्त्रियः** = ஆயர்குல மங்கையர்,
**வ்ரஜஸ்த்ரிய꞉**

**निजनिजदयितान्** = தங்கள் தங்களுடைய கணவர்களை,
**நிஜநிஜத³யிதான்**

**कृष्णाकारान्** = ஸ்ரீ கிருஷ்ணரூபமாக,
**க்ருஷ்ணாகாரான்**

**वीक्ष्य** = பார்த்து ஆனந்த மடைந்தனர்,
**வீக்ஷ்ய**

**स्वपरनृपतिपत्नीनाम्** = தங்களுக்கும் பிறருக்கும், அரச மனைவிகளுக்கும்,
**ஸ்வபரந்ருபதிபத்னீனாம்**

**साक्षात् हरिः** = ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவே,
**ஸாக்ஷாத் ஹரி꞉**

**अन्तर्यामी** = உள்ளே உரைபவர்.
**அந்தர்யாமீ**

ஆயர்குலத்தில் வசிக்கும் கோபிகைகள் அனைவரும் தங்கள் தங்களுடைய கணவரைக் கண்ணபிரானாகவே கண்டு ஆனந்தமடைந்தனர். தியான முதிர்ச்சியால் தங்கள் கணவரும் அவர்களுக்குக் கிருஷ்ணராகவே தோன்றினர். எல்லா பிராணி களிடமும் அந்தர்யாமியாக இருப்பவர் கிருஷ்ணனே அல்லவா! ஆகவே எல்லோ ருக்கும் ஆத்மாவாக விளங்கும் கிருஷ்ண ஸ்வரூபத்தை எங்கும் கண்டு கோபிகை கள் ஆனந்தமடைந்தனரே தவிற இதில் கிருஷ்ணபரமாத்மாவுக்குச் சிறிதும் போகம் கிடையாது. **(223)**

**परमार्थतो विचारे गुडतन्मधुरत्वदृष्टान्तात् ।**
**नश्वरमपि नरदेहं परमात्माकारतां याति ॥ २२४ ॥**

**பரமார்த²தோ விசாரே கு³ட³தன்மது⁴ரத்வ த்³ருஷ்டாந்தாத் ।**
**நஶ்வரமபி நரதே³ஹம் பரமாத்மாகாரதாம் யாதி ॥ 224 ॥**

**किं पुनरनन्तशक्तेर्लीलावपुरीश्वरस्येह ।**
**कर्माण्यलौकिकानि स्वमायया विदधतो नृहरेः ॥ २२५ ॥**

**கிம் புனரனந்தஶக்தேர் லீலாவபுரீஶ்வரஸ்யேஹ ।**
**கர்மாண்யலௌகிகானி ஸ்வமாயயா வித³த⁴தோ ந்ருஹரே꞉ ॥ 225 ॥**

**परमार्थत:** = உண்மையாக,
**பரமார்த²த꞉**
**विचारे** = விசாரணை செய்து பார்த்தால்,
**விசாரே**
**गुड** = வெல்லமும்,
**கு³ட³**
**तन्मधुरत्व** = அதனுடைய இனிப்பும்,
**தன்மது⁴ரத்வ**
**दृष्टान्तात्** = என்ற உதாஹரணத்தால்,
**த்³ருஷ்டாந்தாத்**
**नश्वरमपि** = அழியக்கூடியதாக இருப்பினும்,
**நஶ்வரமபி**
**नरदेहं** = மனிதனுடைய சரீரம்,
**நரதே³ஹம்**
**परमात्माकारतां** = பரமாத்மாவினுடைய ஸ்வரூபத்தை,
**பரமாத்மாகாரதாம்**
**याति** = அடைகிறது.
**யாதி**

(அவ்விதமிருக்க)
**अनन्तशक्ते:** = எல்லையற்ற வன்மை வாய்ந்தவரும்,
**அனந்தஶக்தே꞉**
**ईश्वरस्य** = உலகை அடக்கியாள்கின்றவரும்,
**ஈஶ்வரஸ்ய**
**स्वमायया** = தன்னுடைய மாயையால்,
**ஸ்வமாயயா**
**अलौकिकानि कर्माणि** = செயற்கரிய செயல்களை,
**அலௌகிகானி கர்மாணி**
**इह** = இங்கு,
**இஹ**
**विदधत:** = செய்கின்றவருமான,
**வித³த⁴த꞉**
**नृहरे:** = நரசிம்மனுடைய,
**ந்ருஹரே꞉**

**लीलावपु** = லீலாமானுஷ விக்ரஹம் பரமாத்மரூபமானது

**லீலாவபு** என்பதைப்பற்றி,

**किं पुन:** = கூறவும் வேண்டுமா?

**கிம் புன:**

வாஸ்தவத்தில் நன்கு ஆராய்ந்து பார்த்தோமானுல் உலகில் காணும் எல்லாம் பரமாத்ம ஸ்வரூபம்தான். அவரைத்தவிற வேறு ஒன்றும் கிடையாது. வெல்லமும் அதில் காணும் இனிப்பும் பிரிக்க முடியாதபடி சேர்ந்து உள்ளது. வெல்லத்திலிருந்து இனிப்பைத் தனியாகப் பிரித்துக்காட்ட முடியுமா? வெல்லம் முழுவதும் இனிப்புத் தான். அதுபோலவே அழியக்கூடிய ஸாதாரண மனிதனுடைய சரீரமும் பரமாத்ம ஸ்வரூபம்தான். அப்படியிருக்க ஈசுவரனுடைய சரீரம் பரமாத்ம ரூபம் என்பதைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? அவர் அளவுகடந்த சக்தி வாய்ந்தவர். அவரே உலகெல்லாவற்றையும் அடக்கி ஆட்சிபுரிகின்ருர். அவர் உலகத்தோரால் செய்ய முடியாத அரிய செயல்களைத் தன்னுடைய மாயாசக்தியால் செய்பவர். உலகைக் காக்கப் பற்பல ரூபங்களுடன் அவதரிக்கிருர். அச்சமயம் தன் ஸங்கல்பத்தால் தன் இஷ்டப்படி விளையாட்டாக சரீரத்தை தரித்துக்கொள்கிருர். அந்த சரீரம் பரமாத்ம ஸ்வரூபம்தான் என்பதில் என்ன ஸந்தேஹம்? இந்த சரீரத்தைக் கண்டு கோபிகை கள் ஆனந்தமெய்தினர்.

**(அவதாரிகை)** பிரபஞ்சம் முழுவதும் ஈசுவர ஸ்வரூபம் என்பதைக் காட்டுகி ருர்: -

**मृद्भक्षणेन कुपितां विकसितवदनां स्वमातरं वक्त्रे ।**
**विश्वमदर्शयदखिलं किं पुनरथ विश्वरूपोऽसौ ॥ २२६ ॥**

**ம்ருத்³ப⁴க்ஷணேன குபிதாம் விகஸிதவத³னும் ஸ்வமாதரம் வக்த்ரே ।**
**விஶ்வமத³ர்ஶயத³கி²லம் கிம் புனரத² விஶ்வரூபோ(அ)ஸௌ ॥ 226 ॥**

**मृद्भक्षणेन** = மண்ணைச் சாப்பிட்டதால்,

**ம்ருத்³ப⁴க்ஷணேன**

**कुपितां** = கோபம் கொண்டவளும்,

**குபிதாம்**

**विकसितवदनां** = (பிறகு) மலர்ந்த முகத்தை உடையவளுமான,

**விகஸிதவத³னும்**

**स्वमातरं** = தன்னுடைய தாயாருக்கு,

**ஸ்வமாதரம்**

**वक्त्रे** = (தன்னுடைய) வாயில்,

**வக்த்ரே**

**विश्वं अखिलं** = உலகம் முழுவதையும்,

**விஶ்வம் அகி²லம்**

**अदर्शयत्** = காண்பித்தார்,

**அத³ர்ஶயத்**

**अथ** = பிறகு,

**அத²**

**किं पुन:** = சொல்வானேன்?

**கிம் புன:**

**असौ** = அவர்,

**அஸௌ**

**विश्वरूप:** = பிரபஞ்சத்தையே உருவமாகக்கொண்டவர்.

**விஶ்வரூப:**

ஒருசமயம் தன்னுடைய அண்ணனுகிய பலராமனுடன் விளையாடிக்கொண்டிருக்கும்பொழுது குழந்தையாகிய கண்ணன் மண்ணைத்தின்ன அதைப் பலராமன் யசோதை இடம் சென்று தெரிவித்தான். அதைக் கேட்டுச் சினங் கொண்ட யசோதை கண்ணனை க் கட்டி இழுத்து வந்து மண்ணைத் தின்றது உண்மையா என வினவக் கண்ணனும் "அது பொய், என்னுடைய வாயைப்பார்த்து உண்மையைத் தெரிந்து கொள்" என்று கூறித் தன் திருவாயைத் திறந்தார். அப்பொழுது அக்கண்ணனின் தாயார், உலகமனைத்தும் அக்கண்ணனுடைய வாய்க்குள் உரைந்து நிற்பதைக் கண்டு வியப்படைந்தாள். இதனுல் உலகனைத்தும் பரமாத்ம ஸ்வரூபம் என்பது தெரிகிறது.

## १९. आनुग्रहिकप्रकरणम् ॥

### 19. ஆனுக்³ரஹிக ப்ரகரணம் ॥

(**அவதாரிகை**) கிருஷ்ணன் பரமாத்மாதான், அவரே நிர்குண வஸ்து என்பதைப் பல காரணங்களால் காட்டி, இதில் உண்டாகும் ஆக்ஷேபங்களுக்கெல்லாம் ஸமாதானம் கூறி விட்டு, இனி கிருஷ்ணபரமாத்மாவினிடம் பக்தி நிலைபெறுவதற்காக, உலகத்தோரைக் காக்க அவர் செய்த பல லீலைகளை எடுத்துக்கூறுகிறுர். அதில் முதலாவதாக இந்த சுலோகத்தில் பூதனு மோக்ஷ லீலையை வர்ணிக்கிறுர்: -

**विषविषमस्तनयुगलं पाययितुं पूतना गृहं प्राप्ता ।**
**तस्या: पृथुभाग्याया आसीत्कृष्णार्पणो देह: ॥ २२७ ॥**

**விஷ விஷம ஸ்தன யுக³லம் பாயயிதும் பூதனு க்³ருஹம் ப்ராப்தா ।**
**தஸ்யா: ப்ருது² பா⁴க்³யாயா ஆஸீத் க்ருஷ்ணுர்பணோ தே³ஹ: ॥ 227 ॥**

**विष** = விஷத்தால்,

**விஷ**

**विषम** = கடுமையான,

**விஷம**

| | | |
|---|---|---|
| **स्तनयुगलं**<br>**ஸ்தன யுக³லம்** | = | இரு கொங்கைகளையும், |
| **पाययितुं**<br>**பாயயிதும்** | = | பருகச்செய்ய, |
| **पूतना**<br>**பூதனா** | = | பூதனை, |
| **गृहं**<br>**க்³ருஹம்** | = | வீட்டை, |
| **प्राप्ता**<br>**ப்ராப்தா** | = | அடைந்தாள், |
| **पृथुभाग्याया:**<br>**ப்ருது² பா⁴க்³யாயா** | = | மிகுந்த பாக்யம் வாய்ந்த, |
| **तस्या:**<br>**தஸ்யா:** | = | அவளுடைய, |
| **देह:**<br>**தே³ஹ:** | = | உடல், |
| **कृष्णार्पण:**<br>**க்ருஷ்ணார்பண:** | = | கண்ணனுக்கு அர்ப்பணம் செய்யப்பட்டதாக, |
| **आसीत्**<br>**ஆஸீத்** | = | ஆயிற்று. |

பூதனை கண்ணனைக் கொல்வதற்காகக் கம்ஸனால் ஏவப்பட்ட ஓர் அரக்கி. அவள் தன்னுடைய இரு கொங்கைகளையும் விஷமுடையதாகச் செய்துகொண்டு அவ்விஷம் கலந்த ஸ்தன்யத்தைப் பருகச்செய்து கண்ணனைக் கொல்வதற்காக அவனுடைய வீட்டிற்குச் சென்றாள். ஆனால் அவளுடைய உடல் முழுவதும் கிருஷ்ணனுக்கே அர்ப்பணம் செய்யப்பட்டுவிட்டது. அதனால் அவள் மிகுந்த பாக்யசாலி.

**(227)**

**(அவதாரிகை)** சகடபஞ்ஜனத்தையும் த்ருணாவர்த்த வதத்தையும் கூறுகிறார்: -

**अनयत्पृथुतरशकटं निजनिकटं वा कृतापराधमपि ।**
**कण्ठाश्लेषविशेषादवधीद्बाल्येऽसुरं कृष्णः ॥ २२८ ॥**

**அனயத் ப்ருது²தர ஶகடம் நிஜ நிகடம் வா க்ருதாபராத⁴மபி ।**
**கண்டா²ஶ்லேஷ விஶேஷாத³வதீ⁴த்³ பா³ல்யே(அ)ஸுரம் க்ருஷ்ண: ॥ 228 ॥**

| | | |
|---|---|---|
| **कृष्ण:**<br>**க்ருஷ்ண:** | = | கிருஷ்ணன், |
| **बाल्ये**<br>**பா³ல்யே** | = | குழந்தைப் பருவத்தில், |

| | | |
|---|---|---|
| कृतापराधम् अपि<br>**க்ருதாபராத⁴ம் அபி** | = | குற்றம்செய்தபோதிலும், |
| पृथुतरशकटं<br>**ப்ருது²தரஶகடம்** | = | மிகப் பெரிய வண்டி உருக்கொண்ட அரக்கனை, |
| निजनिकटं<br>**நிஜ நிகடம்** | = | தன்னுடைய பக்கத்திற்கு, |
| अनयत्<br>**அனயத்** | = | அழைத்துக்கொண்டார், |
| कण्ठाश्लेषविशेषात्<br>**கண்டா²ஶ்லேஷவிஶேஷாத்** | = | கழுத்தைக்கட்டிக்கொள்வதென்ற சிறந்த முறையால், |
| असुरं<br>**அஸுரம்** | = | த்ருணாவர்த்தாஸுரனை, |
| अवधीत्<br>**அவதீ⁴த்** | = | கொன்றார். |

கம்ஸன் கண்ணனைக் கொல்ல ஒரு அஸுரனை அனுப்பினான். அவன் ஒரு ஒரு பெரிய வண்டியைப்போல் உருவந்தாங்கிக் கண்ணனிடம் வந்தான். அவன் தீங்கு செய்தபோதிலும் குழந்தையான அக்கண்ணன் அவனைக் கொன்று தம் ஸாயுஜ்யத்தையே கொடுத்துவிட்டார். மற்றுமோர் ஸமயம் புயல்காற்று உருவத்து டன் வந்த த்ருணாவர்த்தன் என்ற அஸுரனைக் கழுத்தில் இறுகத் தழுவிக்கொண்டே அவனைக் கொன்றுவிட்டார். **(228)**

## यमलार्जुनौ तरू उन्मूल्योलूखलगतश्चिरं खिन्नौ ।
## रिङ्गन्नङ्गणभूमौ स्वमालयं प्रापयन्नृहरिः ॥ २२९ ॥

**யமலார்ஜுனௌ தரூ உன்மூல்யோலூக²ல க³தஶ்சிரம் கி²ன்னௌ ।**
**ரிங்க³ன்னங்க³ணபூ⁴மௌ ஸ்வமாலயம் ப்ராபயந் ந்ருஹரிः ॥ 229 ॥**

| | | |
|---|---|---|
| उलूखलगतः<br>**உலூக²லக³தः** | = | உரலில் கட்டுண்ட, |
| नृहरिः<br>**ந்ருஹரிः** | = | பரமாத்மா, |
| अङ्गणभूमौ<br>**அங்க³ணபூ⁴மௌ** | = | முற்றத்தின் தரையில், |
| रिङ्गन्<br>**ரிங்க³ன்** | = | தவழ்ந்துகொண்டு, |
| चिरं<br>**சிரம்** | = | வெகுகாலமாக, |

खिन्नौ = வருந்திக்கொண்டிந்த,
கி²ன்னௌ
यमलार्जुनौ = இரண்டு மருத மரங்களை,
யமலார்ஜுனௌ
उन्मूल्य = வேறுடன் பிடுங்கி,
உன்மூல்ய
स्वं आलयं = தன்னுடைய இருப்பிடத்திற்கு,
ஸ்வம் ஆலயம்
प्रापयत् = அனுப்பி வைத்தார்.
ப்ராபயத்

நலகூபரன் மணிக்ரீவன் என்ற இரு கந்தர்வர்கள் சாபத்தால் மருத மரங்களாக ஆகி நீண்ட காலம் வருந்திக் கொண்டிருந்தனர். ஒரு நாள் உரலில் கட்டப்பட்ட கண்ணன் அந்த இரு மரங்களுக்கும் இடையே தவழ்ந்து சென்று அவ்விரண்டு மரங்களையும் வேறுடன் கீழே சாய்த்தான். அப்பொழுது அவ்விருவரும் தங்கள் சாபம் நீங்கப்பெற்று வைகுண்டத்தை அடைந்தனர். **(229)**

**नित्यं त्रिदशद्वेषी येन च मृत्योर्वशीकृतः केशी ।**
**काकः कोऽपि वराको बकोऽप्यशोकं गतो लोकम् ॥ २३० ॥**

**நித்யம் த்ரித³ஶத்³வேஷீ யேன ச ம்ருத்யோர் வஶீக்ருதஃ கேஶீ ।**
**காகஃ கோ(அ)பி வராகோ ப³கோ(அ)ப்யஶோகம் க³தோ லோகம் ॥ 230 ॥**

येन = எவரால்,
யேன
नित्यं = எப்பொழுதும்,
நித்யம்
त्रिदशद्वेषी = தேவர்களை வெறுக்கின்ற,
த்ரித³ஶத்³வேஷீ
केशी = கேசீ என்ற அரக்கனும்,
கேஶீ
वराकः = இகழத்தக்க,
வராகஃ
कोऽपि काकः = ஒரு காக்கையும்,
கோ(அ)பி காகஃ
बकः अपि = கொக்கும்,
ப³கஃ அபி

**मृत्योः** = சாவுக்கு,
**ம்ருத்யோ:**
**वशीकृतः** = வசமாகச் செய்யப்பட்டு,
**வஶீக்ருத:**
**अशोकं** = துன்பமற்ற,
**அஶோகம்**
**लोकं** = உலகத்திற்கு,
**லோகம்**
**गतः** = சென்றனரோ.
**க³த:**

மேலும் கிருஷ்ணனைக் கொல்லுவதற்காகப் பல அரக்கர்கள் பல உருவங்களைத் தாங்கி வந்தனர். அவ்வாறு வந்த கேசி, காகாசுரன், பகாஸுரன் முதலியவர்களைக் கொன்று மிகக் கருணை வாய்ந்த கண்ணபிரான் அவர்களை மோக்ஷமடையச் செய்தார். **(230)**

## गोगोपीगोपानां निकरमहिं पीडयन्तमतिवेगात् ।
## अनघमघासुरमकरोत्पृथुतरमुरगेश्वरं भगवान् ॥ २३१ ॥

**கோ³கோ³பீ கோ³பானும் நிகரமஹிம் பீட³யந்தமதிவேகா³த் ।**
**அனக⁴மகா⁴ஸுரமகரோத் ப்ருது²தரமுரகே³ஶ்வரம் ப⁴க³வான் ॥ 231 ॥**

**गोगोपीगोपानां** = பசுக்கள், இடைச்சிகள், இடையர்கள்
**கோ³கோ³பீ கோ³பானும்** இவர்களுடைய,
**निकरं** = கூட்டத்தை,
**நிகரம்**
**अतिवेगात्** = மிகவும் வேகமாக,
**அதிவேகா³த்**
**पीडयन्तं** = துன்புறுத்துகின்ற,
**பீட³யந்தம்**
**उरगेश्वरं** = பாம்புகளுக்குத் தலைவனை,
**உரகே³ஶ்வரம்**
**पृथुतरं** = மிகப்பெரிய,
**ப்ருது²தரம்**
**अहिं** = பாம்பான,
**அஹிம்**
**अघासुरं** = அகன் என்ற அரக்கனை,
**அகா⁴ஸுரம்**

| | | |
|---|---|---|
| **भगवान्** | = | கண்ணபிரான், |
| **ப⁴க³வான்** | | |
| **अनघं** | = | பாபமற்றவனுக, |
| **அனக⁴ம்** | | |
| **अकरोत्** | = | செய்தார். |
| **அகரோத்** | | |

மேலும் அகன் என்ற அஸுரன் ஒரு பெரிய பாம்பின் உருவத்தையுடைய வனுக பசுக்களுக்கும் இடையர்களுக்கும் அவர்களுடைய பெண்களுக்கும் பற்பல இன்னல்களைச் செய்து வந்தான். ஸ்ரீ கிருஷ்ணன் மிகப் பெரிய உருக்கொண்ட அவ்வரக்கனைக் கொன்று அவனைப் பாபம் நீங்கியவனுகச் செய்தார். **(231)**

## पीत्वाऽरण्यहुताशनमसह्य तत्तेजसो हेतोः ।
## दग्धान्मुग्धानखिलाञ्जुगोप गोपान्कृपासिन्धुः || २३२ ||

**பீத்வா(அ)ரண்ய ஹுதாஶனமஸஹ்ய தத்தேஜஸோ ஹேதோ: ।**
**த³க்³தா⁴ன் முக்³தா⁴நகி²லாஞ் ஜுகோ³ப கோ³பான் க்ருபா ஸிந்து⁴: ॥ 232 ॥**

| | | |
|---|---|---|
| **कृपासिन्धुः** | = | கருணைக்கடலாகிய ஸ்ரீ கிருஷ்ணன், |
| **க்ருபாஸிந்து⁴:** | | |
| **अरण्यहुताशनं** | = | காட்டுத்தீயை, |
| **அரண்யஹுதாஶனம்** | | |
| **पीत्वा** | = | குடித்து, |
| **பீத்வா** | | |
| **असह्य** | = | தாங்கமுடியாத, |
| **அஸஹ்ய** | | |
| **तत्तेजसः हेतोः** | = | அதனுடைய ஜ்வாலையின் காரணமாக, |
| **தத்தேஜஸ: ஹேதோ:** | | |
| **दग्धान्** | = | கொளுத்தப்பட்ட, |
| **த³க்³தா⁴ன்** | | |
| **मुग्धान्** | = | குற்றமற்ற, |
| **முக்³தா⁴ன்** | | |
| **अखिलान्** | = | எல்லா, |
| **அகி²லான்** | | |
| **गोपान्** | = | இடையர்களையும், |
| **கோ³பான்** | | |
| **जुगोप** | = | காத்தருளினர். |
| **ஜுகோ³ப** | | |

ஒரு ஸமயம் கோபர்கள் காட்டில் தங்களுடைய மாடுகளை மேய்த்துக்கொண் டிருக்கும்பொழுது காட்டுத்தீ கிளம்பி எங்கும் பரவி வந்துவிட்டது. கடுமையான அத் தீயினுடைய ஜ்வாலையால் இடையர்கள் வாட்டப்பட்டனர். கருணைக்கடலான கண்ணபிரான் அத்தீயைப் பருகி இடையர்களைக் காத்து அருளினர். **(232)**

## पातुं गोकुलमाकुलमशनितटिद्वर्षणैः कृष्णः ।
## असहायएकहस्ते गोवर्धनमुद्दधारोच्चैः ॥ २३३ ॥

**பாதும் கோ³குலமாகுலமஶனி தடித்³ வர்ஷணை: க்ருஷ்ண: ।**
**அஸஹாய ஏக ஹஸ்தே கோ³வர்த⁴ன முத்³த³தா⁴ரோச்சை: ॥ 233 ॥**

**कृष्णः** = கிருஷ்ணன்,
**க்ருஷ்ண:**

**अशनि** = இடி,
**அஶனி**

**तटित्** = மின்னல்,
**தடித்**

**वर्षणैः** = மழை இவைகளால்,
**வர்ஷணை:**

**आकुलं** = துயரமடைந்த,
**ஆகுலம்**

**गोकुलं** = ஆயர்பாடியை,
**கோ³குலம்**

**पातुं** = காப்பதற்காக,
**பாதும்**

**असहायः** = உதவியின்றி,
**அஸஹாய:**

**एकहस्ते** = ஒரே கையில்,
**ஏக ஹஸ்தே**

**उच्चैः** = உயரமாக,
**உச்சை:**

**गोवर्धनं** = கோவர்த்தனம் என்ற மலையை,
**கோ³வர்த⁴னம்**

**उद्दधारः** = தூக்கிப்பிடித்தார்.
**உத்³த³தா⁴ர:**

ஒருஸமயம் கோபர்கள் கண்ணன் சொல்படி இந்திர விழாக் கொண்டாடு வதை விடுத்துக் கோவர்த்தன மலையைப் போற்றி வணங்கினர். அதுகண்டு சினங் கொண்ட தேவேந்திரன் கார்மேகங்களை அனுப்பி ஆயர்பாடியை அழிக்கும்படி

கட்டளையிட்டான். அவைகளும் இடி, மின்னல், மழை முதலியவற்றால் ஆயர் குலத்தை அழிக்க முயன்றன. அதனால் ஆயர்கள் இன்னலுறக் கருணாநிதியான கண்ணபிரான் ஒருவருடைய உதவியுமின்றி கோவர்த்தன மலையைத் தன்னுடைய ஒரு கையால் உயரத் தூக்கிக் குடையாகப்பிடித்து கோகுலத்தைக் காத்தருளினார்.

**(233)**

**वासोलोभाकलितं धावद्रजकं शिलातले हत्वा ।**
**विस्मृत्य तदपराधं विकुण्ठवासोऽर्पितस्तस्मै ॥ २३४ ॥**

**வாஸோ லோபா⁴கலிதம் தா⁴வத்³ரஜகம் ஶிலாதலே ஹத்வா ।**
**விஸ்ம்ருத்ய தத³பராத⁴ம் விகுண்ட² வாஸோ(அ)ர்பிதஸ் தஸ்மை ॥ 234 ॥**

**वासोलोभाकलितं** = ஆடைகளில் பேராசையுடன் கூடிய,
**வாஸோ லோபா⁴கலிதம்**

**धावद्रजकं** = துணிகளை வெளுக்கும் வண்ணானை,
**தா⁴வத்³ரஜகம்**

**शिलातले** = கல்தரையில்,
**ஶிலாதலே**

**हत्वा** = கொன்று,
**ஹத்வா**

**तदपराधं** = அவனுடைய குற்றத்தை,
**தத³பராத⁴ம்**

**विस्मृत्य** = மறந்து,
**விஸ்ம்ருத்ய**

**तस्मै** = அவனுக்கு,
**தஸ்மை**

**विकुण्ठवासः** = வைகுண்டவாஸம்,
**விகுண்ட²வாஸ꞉**

**अर्पितः** = அளிக்கப்பட்டது.
**அர்பித꞉**

கிருஷ்ணபரமாத்மா தனுர்யாகத்திற்காகக் கம்ஸனால் வரவழைக்கப்பட்டு மதுராநகரம் வந்து வீதியில் செல்லும் பொழுது கம்ஸனுக்காகச் சிறந்த ஆடைகளை எடுத்துச் சென்று கொண்டிருக்கும் வண்ணானைக் கண்டு கிருஷ்ணன் தனக்கு ஆடைகள் தரும்படி கேட்கவே துஷ்டனான அந்த வண்ணான் இகழ்ந்து பேசினான். உடனே அந்த இடத்திலேயே அவனைக் கொன்று தலை தரையில் புரளும்படி செய்தார். இகழ்ந்து பேசிய குற்றத்தை மறந்து அவனுக்கு வைகுண்டவாஸத்தையே அளித்தார். **(234)**

**त्रेधा वक्रशरीरामतिलम्बोष्ठीं स्खलद्वपुर्वचनाम् ।**
**स्रक्चन्दनपरितोषात्कुब्जामृज्वाननामकरोत् ॥ २३५ ॥**

**த்ரேதா⁴ வக்ர ஶரீராமதிலம்போ³ஷ்டீ²ம் ஸ்க²லத்³ வபுர்வசனாம் ।**
**ஸ்ரக்சந்த³ன பரிதோஷாத் குப்³ஜாம் ருஜ்வானநாமகரோத் ॥ 235 ॥**

**त्रेधा** = மூன்றுவிதமாக,
**த்ரேதா⁴**
**वक्रशरीरां** = கோணலுள்ள சரீரத்தையுடையவளாயும்,
**வக்ரஶரீராம்**
**अतिलम्बोष्ठीं** = மிகவும் தொங்குகின்ற உதட்டையுடையவளாயும்,
**அதிலம்போ³ஷ்டீ²ம்**
**स्खलद्वपुर्वचनां** = உடலிலும் பேச்சிலும் நடுக்கம் கொண்டவளுமான,
**ஸ்க²லத்³வபுர்வசனும்**
**कुब्जां** = கூனியை,
**குப்³ஜாம்**
**स्रक्चन्दनपरितोषात्** = மாலை சந்தனம் கொடுத்ததாலுண்டான
**ஸ்ரக்சந்த³னபரிதோஷாத்** ஆனந்தத்தால்,
**ऋज्वाननां** = நேரான முகத்தையுடையவளாக,
**ருஜ்வானனும்**
**अकरोत्** = கிருஷ்ணன் செய்தான்.
**அகரோத்**

கண்ணன் வீதியில் சென்றுகொண்டிருக்கையில் ஒரு கூனி தென்பட்டாள். அவள் கம்ஸனுக்காக வாஸனைத் திரவ்யங்களை எடுத்துச் சென்றுகொண்டிருந்தாள். அவளுடைய உடல் முக்கோணல்கள் உள்ளதாக இருந்தது. அவளுடைய உதடு தொங்கிக்கொண்டிருந்தது. சரீரம் நடுங்கிக்கொண்டிருந்தது. அவள் பேச்சிலும் நடுக்கம் காணப்பட்டது. அவள் கண்ணனைக் கண்டவுடன் இன் சொற்களால் வரவேற்று சந்தனம், புஷ்பமாலை இவைகளைக் கொடுத்து உபசரித்தாள். அதனுல் அகமகிழ்ந்த அக் கண்ணன் அவள் சரீரத்திலுள்ள கோணல்களை நீக்கி அவளைச் சிறந்த அழகுவாய்ந்தவளாகச் செய்தான். **(235)**

**निहतः पपात हरिणा हरिचरणाग्रेण कुवलयापीडः ।**
**तुङ्गोन्मत्तमतङ्गः पतङ्गवद्दीपकस्याग्रे ॥ २३६ ॥**

**நிஹத: பபாத ஹரிணு ஹரிசரணுக்³ரேண குவலயாபீட³: ।**
**துங்கோ³ன்மத்தமதங்க³: பதங்க³வத்³தீ³பகஸ்யாக்³ரே ॥ 236 ॥**

**दीपकस्य** = விளக்கின்,
**தீ³பகஸ்ய**

| | | |
|---|---|---|
| **अग्रे**<br>**அக்³ரே** | = | முன்னால், |
| **पतङ्गवत्**<br>**பதங்க³வத்** | = | விட்டில் பூச்சிபோல, |
| **हरिणा**<br>**ஹரிணா** | = | விஷ்ணுவால், |
| **हरिचरणाग्रेण**<br>**ஹரிசரணாக்³ரேண** | = | தன்னுடைய மெல்லிய காலின் நுனியால், |
| **कुवलयापीडः**<br>**குவலயாபீட³:** | = | குவலயாபீட மென்று பெயர்கொண்ட, |
| **तुङ्गोन्मत्तमतङ्गः**<br>**துங்கோ³ன்மத்தமதங்க³:** | = | உயரமான மதம் கொண்ட யானை, |
| **निहतः**<br>**நிஹத:** | = | கொல்லப்பட்டு, விழுந்தது. |

கண்ணனைக் கொல்வதற்காகக் கம்ஸன் குவலயா பீடம் என்ற மதங்கொண்ட யானையை ஏவினான். அதுவும் மிகுந்த ஆவேசத்துடன் கண்ணனைத் தாக்கிற்று. ஆனால் கண்ணனுடைய மெல்லிய காலின் நுனியால் உதைக்கப்பட்டு அந்த யானை கீழே விழுந்து இறந்தது. **(236)**

**युद्धमिषात्सह रङ्गे श्रीरङ्गेणाङ्ग संगमं प्राप्य ।**
**मुष्टिकचाणूराख्यौ ययतुर्निःश्रेयसं सपदि ॥ २३७ ॥**

**யுத்³த⁴ மிஷாத் ஸஹ ரங்கே³ ஸ்ரீரங்கே³ணாங்க³ ஸங்க³மம் ப்ராப்ய ।**
**முஷ்டிக சாணூராக்²யௌ யயதுர் நிःஶ்ரேயஸம் ஸபதி³ ॥ 237 ॥**

| | | |
|---|---|---|
| **रङ्गे**<br>**ரங்கே³** | = | மல்ல அரங்கில், |
| **श्रीरङ्गेण सह**<br>**ஸ்ரீரங்கே³ண ஸஹ** | = | கண்ணபிரானுடன், |
| **युद्धमिषात्**<br>**யுத்³த⁴மிஷாத்** | = | மல்ல யுத்தம் என்னும் வியாஜத்தினால், |
| **अङ्ग संगमं**<br>**அங்க³ ஸங்க³மம்** | = | பகவானின் அங்கஸ்பர்சத்தை, |
| **प्राप्य**<br>**ப்ராப்ய** | = | அடைந்து, |
| **सपदि**<br>**ஸபதி³** | = | உடனேயே, |

**मुष्टिकचाणूराख्यौ** = முஷ்டிகன், சாணூரன் என்று பெயர்கொண்ட

**முஷ்டிக சாணூராக்²யௌ** இருமல்லர்கள்,

**निः श्रेयसं** = மோக்ஷத்தை,

**நி: ஶ்ரேயஸம்**

**ययतुः** = அடைந்தனர்.

**யயது:**

கண்ணனைக் கொல்லுவதன்பொருட்டு கம்ஸனுல் ஏவப்பட்ட முஷ்டிகன், சாணூரன் என்ற இரு மாபெரும் மல்லர்கள் அவனை மல்ல அரங்கில் சந்தித்தனர். அவர்கள் மல்ல யுத்த வ்யாஜத்தால் கண்ணபிரானின் சரீரத்தைக் கட்டித் தழுவினர். பிறகு அவ்விருவரும் அவனுல் கொல்லப்பட்டனர். கண்ணபிரானின் அங்கஸ்பர்சம் பெற்றதால் அவ்விருவரும் மோக்ஷத்தையடைந்தனர். **(237)**

**देहकृतादपराधाद्वैकुण्ठोत्कण्ठितान्तरात्मानम् ।**
**यदुवरकुलावतंसः कंसं विध्वंसयामास ॥ २३८ ॥**

**தே³ஹக்ருதாத³பராதா⁴த்³ வைகுண்டோ²த்கண்டி²தாந்தராத்மானம் ।**
**யது³வரகுலாவதம்ஸ: கம்ஸம் வித்⁴வம்ஸயாமாஸ ॥ 238 ॥**

**यदुवरकुलावतंसः** = சிறந்த யாதவ குலத்திற்கு

**யது³வரகுலாவதம்ஸ:** அணிகலமான கண்ணன்,

**वैकुण्ठोत्कण्ठित** = வைகுண்டம் செல்வதில் ஆவல்கொண்ட,

**வைகுண்டோ²த்கண்டி²த**

**अन्तरात्मानं** = மனதையுடைய,

**அந்தராத்மானம்**

**कंसं** = கம்ஸனை,

**கம்ஸம்**

**देहकृतात्** = சரீரத்தால் செய்யப்பட்ட,

**தே³ஹக்ருதாத்**

**अपराधात्** = குற்றத்தால்,

**அபராதா⁴த்**

**विध्वंसयामास** = கொன்றுர்.

**வித்⁴வம்ஸயாமாஸ**

கம்ஸனின் மனம் வைகுண்ட லோகத்திற்குச் செல்ல வேண்டுமென்று மிகவும் ஆசைப்பட்டுக்கொண்டிருந்தது. ஆனுல் அவனுடைய சரீரம் கிருஷ்ணனுக் குத் தீங்கிழைத்துக்கொண்டிருந்தது. அதனுல் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அவனுடைய சரீரத்தை நாசம் செய்து அவனை வைகுண்ட லோகத்திற்கு அனுப்பிவைத்தார். **(238)**

**हरिसंदर्शनयोगात्पृथुरणतीर्थे निमज्जते तस्मै ।**
**भगवान्नु प्रादाद्यः सद्यश्चैद्याय सायुज्यम् ॥ २३९ ॥**

**ஹரிஸந்த³ர்ஶனயோகா³த் ப்ருது²ரண தீர்தே² நிமஜ்ஜதே தஸ்மை ।**
**ப⁴க³வான்னு ப்ராதா³த்³ ய: ஸத்³யசைத்³யாய ஸாயுஜ்யம் ॥ 239 ॥**

**हरिसंदर्शनयोगात्** = விஷ்ணு தர்சனம் சேர்ந்ததால்,
**ஹரிஸந்த³ர்ஶனயோகா³த்**
**पृथु** = பெரிய,
**ப்ருது²**
**रण** = யுத்தமாகிய,
**ரண**
**तीर्थे** = புண்ய தீர்த்தத்தில்,
**தீர்தே²**
**निमज्जते** = மூழ்குகின்ற,
**நிமஜ்ஜதே**
**तस्मै चैद्याय** = அந்த சிசுபாலனுக்கு,
**தஸ்மை சைத்³யாய**
**यः भगवान्** = எந்த ஶ்ரீ க்ருஷ்ணபரமாத்மா,
**ய: ப⁴க³வான்**
**सद्यः** = உடனேயே,
**ஸத்³ய:**
**सायुज्यम्** = ஸாயுஜ்யத்தை,
**ஸாயுஜ்யம்**
**प्रादात् नु** = அளித்தாரல்லவா!
**ப்ராதா³த் நு**

பரமாத்மாவை அடையவேண்டுமென்பதற்காகச் சிசு பாலன் க்ருஷ்ணனுடன் சண்டைசெய்தான். அங்கு அவனுக்கு கிருஷ்ணதர்சனம் கிடைத்ததாலும், யுத்தம் என்ற புண்ய தீர்த்தத்தில் மூழ்கியதாலும் அவனுக்கு விஷ்ணு ஸாயுஜ்யம் கிடைத்தது. **(239)**

**मीनादिभिरवतारैर्निहताः सुरविद्विषो बहवः ।**
**नीतास्ते निजरूपं तत्र च मोक्षस्य का वार्ता ॥ २४० ॥**

**மீநாதி³பி⁴ரவதாரைர் னிஹதா: ஸுரவித்³விஷோ ப³ஹவ: ।**
**நீதாஸ்தே நிஜரூபம் தத்ர ச மோக்ஷஸ்ய கா வார்தா ॥ 240 ॥**

**मीनादिभिः** = மீன் முதலிய,
**மீநாதி³பி⁴:**
**अवतारैः** = அவதாரங்களினுல்,
**அவதாரைঃ**
**बहवः** = பல,
**ப³ஹவঃ**
**सुरविद्विषः** = அரக்கர்கள்,
**ஸுரவித்³விஷঃ**
**निहताः** = கொல்லப்பட்டார்கள்,
**நிஹதாঃ**
**ते** = அவர்கள்,
**தே**
**निजरूपं** = தன்னுடைய ஸ்வரூபத்தையே,
**நிஜரூபம்**
**नीताः** = அடையும்படி செய்யப்பட்டனர்,
**நீதா:**
**तत्र** = அங்கு,
**தத்ர**
**मोक्षस्य** = மோக்ஷத்திற்கு,
**மோக்ஷஸ்ய**
**का वार्ता** = பேச்சு எதற்காக?
**கா வார்தா**

மேலும் மத்ஸ்யம், கூர்மம் முதலிய பல அவதாரங்களை எடுத்து பகவான் அநேக அரக்கர்களை அழித்திருக்கிறுர். அவ்வாறு பகவாஞல் கொல்லப்பட்ட அரக்கர்கள் யாவரும் பகவானுடைய ஸாயுஜ்யத்தைப் பெற்றிருக்கிருர்கள். அவர்கள் பகவத் ஸ்வரூபத்துடனேயே ஒன்றிவிட்டபின் மோக்ஷமடைந்தனர் என்று கூறவா வேண்டும்? **(240)**

## ये यदुनन्दन निहतास्ते तु न भूयः पुनर्भवं प्रापुः ।
## तस्मादवताराणामन्तर्यामी प्रवर्तकः कृष्णः ॥ २४१ ॥

**யே யது³நந்த³ன நிஹதாஸ்தே து ந பூ⁴யঃ புனர்ப⁴வம் ப்ராபுঃ ।**
**தஸ்மாத³வதாராணுமந்தர்யாமீ ப்ரவர்தகঃ க்ருஷ்ணঃ ॥ 241 ॥**

**ये** = எவர்கள்,
**யே**

| | | |
|---|---|---|
| **यदुनन्दन निहता:** **யது3நந்த3ன நிஹதா:** | = | யதுகுலத்தை மகிழ்விக்கும் கண்ணபிரானல் கொல்லப்பட்டனரோ, |
| **ते तु** **தே து** | = | அவர்களோவெனில், |
| **भूय:** **பூ4ய:** | = | மறுபடியும், |
| **पुनर्भवं** **புனர்ப4வம்** | = | மறுபிறவியை, |
| **न प्रापु:** **ந ப்ராபு:** | = | அடையவில்லை, |
| **तस्मात्** **தஸ்மாத்** | = | ஆகையால், |
| **अवताराणां** **அவதாராணும்** | = | அவதாரங்களுக்கு, |
| **प्रवर्तक:** **ப்ரவர்தக:** | = | காரணமானவன், |
| **अन्तर्यामी** **அந்தர்யாமீ** | = | எல்லோருக்குள்ளும் நிறைந்து நிற்கும், |
| **कृष्ण:** **க்ருஷ்ண:** | = | கண்ணபிரான். |

கண்ணபிரானல் கொல்லப்பட்ட அரக்கர்களனைவரும் மறுபடியும் பிறவியை அடையவில்லை. அதனல் பகவான் தான் அவர்களை அவ்வாறு ஸம்ஹரித்து அவர்களுக்கு மோக்ஷத்தையளித்திருக்க வேண்டும். இல்லாவிடில் ஸாதாரண முறையில் இறக்கின்றவர்களோ அல்லது கொல்லப்படுகின்றவர்களோ மறு பிறவியைக் கட்டாயம் அடைவார்கள் : இது தவிர்க்க முடியாதது. ஆகையால் கிருஷ்ணரூபத்தில் அவதரித்தவன் ஸாக்ஷாத் பரமாத்மாவே. அவனே எல்லா அவதாரங்களுக்கும் காரணம். **(241)**

**ब्रह्माण्डानि बहूनि पङ्कजभवान्प्रत्यण्डमत्यद्भुतान्**
**गोपान्वत्सयुतानदर्शयदजं विष्णूनशेषांश्च य: ।**
**शम्भुर्यच्चरणोदकं स्वशिरसा धत्ते च मूर्तित्रयात्**
**कृष्णो वै पृथगस्ति कोऽप्यविकृत: सच्चिन्मयो नीलिमा ॥ २४२ ॥**

**ப்3ரஹ்மாண்டா3னி ப3ஹூனி பங்கஜப4வான் ப்ரத்யண்ட3மத்யத்3பு4தான்**
**கோ3பான் வத்ஸயுதானத3ர்ஶயத3ஜம் விஷ்ணூனஶேஷாம்ஶ்ச ய: ।**
**ஶம்பு4ர் யச்சரணோத3கம் ஸ்வஶிரஸா த4த்தே ச மூர்தித்ரயாத்**
**க்ருஷ்ணோ வை ப்ருத2க3ஸ்தி கோ(அ)ப்யவிக்ருத: ஸச்சின்மயோ நீலிமா ॥ 242 ॥**

| | | |
|---|---|---|
| यः<br>யः | = | எந்தப் பரமாத்மா, |
| बहूनि<br>ப³ஹூனி | = | பல, |
| ब्रह्माण्डानि<br>ப்³ரஹ்மாண்டா³னி | = | பிரம்மாண்டங்களையும், |
| प्रत्यण्डं<br>ப்ரத்யண்ட³ம் | = | ஒவ்வொரு அண்டத்திலும், |
| अत्सयुतान्<br>அத்ஸயுதான் | = | மிகவும் அதிசயமான, |
| पङ्कजभवान्<br>பங்கஜப⁴வான் | = | பிரம்மாக்களையும், |
| वत्सयुतान्<br>வத்ஸயுதான் | = | கன்றுக்குட்டிகளுடன் கூடிய, |
| गोपान्<br>கோ³பான் | = | ஆயர்களையும், |
| अशेषान् विष्णूंश्च<br>அஶேஷான் விஷ்ணூம்ஶ்ச | = | எல்லா விஷ்ணுக்களையும், |
| अजं<br>அஜம் | = | பிரம்மதேவருக்கு, |
| अदर्शयत्<br>அத³ர்ஶயத் | = | காண்பித்தாரோ, |
| शम्भुः<br>ஶம்பு⁴: | = | பரமசிவன், |
| यच्चरणोदकं<br>யச்சரணோத³கம் | = | எவருடைய பாதங்களிலிருந்து கிளம்பிய கங்கா ஜலத்தை, |
| स्वशिरसा<br>ஸ்வஶிரஸா | = | தன்னுடைய சிரஸ்ஸால், |
| धत्ते<br>த⁴த்தே | = | தாங்குகிறாரே (இதனால்), |
| कृष्णः<br>க்ருஷ்ண: | = | கிருஷ்ணர், |
| मूर्तित्रयात्<br>மூர்தித்ரயாத் | = | மூன்று மூர்த்திகளைக்காட்டிலும், |
| पृथक्<br>ப்ருத²க் | = | வேறாகவும், |

अविकृतः = மாறுபாடு அற்றவருயும்,

அவிக்ருதஃ

सच्चिन्मयः = ஸச்சிதாநந்தஸ்வரூபியாயும்,

ஸச்சின்மயஃ

नीलिमा = நீலநிறமாகவும்,

நீலிமா

कोऽपि = வர்ணிக்கமுடியாதவராகவும்,

கோ(அ)பி

अस्ति = இருக்கிருர்.

அஸ்தி

கிருஷ்ணனுடன் கூட இருக்கும் கோபர்களேயும், கன்றுகளேயும் அவருக்குத் தெரியாமல் எடுத்துச்சென்று குஹையில் மறைத்து வைத்துவிட்டுத் திரும்பிவந்த பிரம்ம தேவருக்கு அநேகம் ப்ரஹ்மாண்டங்களேயும், ஒவ்வொரு பிரஹ்மாண்டத் திலும் வேருெரு ப்ரஹ்மா, விஷ்ணு, கன்றுகள், கோபர்கள் இவர்கள் எல்லோரையும் கிருஷ்ணன் காட்டினுர். இதைக்கண்டு பிரம்மதேவர் திகைத்து மயங்கிப் போனுர். இந்த கிருஷ்ணனுடைய திருப்பாதத்திலிருந்து கிளம்பிய கங்கையை சம்பு சிரஸ்ஸில் தாங்குகிருர். ஆதலால் கிருஷ்ணன் மும்மூர்த்திகளுக்கும் மேல்பட்டவர். விகாரமற்றவர். நீலவண்ணரான அவர் ஸ்வரூபத்தை எடுத்துக்கூற முடியாது. இவர் ஸச்சிதானந்த ஸ்வரூபியான பரமாத்மா. **(242)**

कृपापात्रं यस्य त्रिपुररिपुरम्भोजवसतिः
सुता जह्नोः पूता चरणनखनिर्णेजनजलम् ।
प्रदानं वा यस्य त्रिभुवनपतित्वं विभुरपि
निदानं सोऽस्माकं जयति कुलदेवो यदुपतिः ॥ २४३ ॥

**க்ருபா பாத்ரம் யஸ்ய த்ரிபுர ரிபுரம்போ⁴ஜ வஸதிஃ**
**ஸுதா ஜஹ்னேஃ பூதா சரண நக² நிர்ணேஜன ஜலம் ।**
**ப்ரதா³னம் வா யஸ்ய த்ரிபு⁴வன பதித்வம் விபு⁴ரபி**
**நிதா³னம் ஸோ(அ)ஸ்மாகம் ஜயதி குலதே³வோ யது³பதிஃ ॥ 243 ॥**

त्रिपुररिपुः = திரிபுர ஸம்ஹாரம் செய்த பரமேச்வரனும்,

த்ரிபுரரிபு:

अम्भोजवसतिः = தாமரையை இருப்பிடமாகக்கொண்ட

அம்போ⁴ஜவஸதிஃ பிரம்மதேவரும்,

यस्य = எவருடைய,

யஸ்ய

कृपापात्रं = தயவுக்குப் பாத்திரமானவர்களோ,

க்ருபா பாத்ரம்

| | | |
|---|---|---|
| **यस्य**<br>**யஸ்ய** | = | எவருடைய, |
| **चरणनख**<br>**சரண நக2** | = | கால்விரல்களை, |
| **निर्णेजन**<br>**நிர்ணேஜன** | = | கழுவும், |
| **जलं**<br>**ஜலம்** | = | தண்ணீர், |
| **पूता**<br>**பூதா** | = | புனிதமான, |
| **जह्नोः**<br>**ஜஹ்னோ:** | = | ஜஹ்னு முனிவரின் பெண்ணாகிய கங்காதேவியோ, |
| **यस्य**<br>**யஸ்ய** | = | எவருடைய, |
| **प्रदानं**<br>**ப்ரதா3னம்** | = | கொடை, |
| **त्रिभुवनपतित्वं**<br>**த்ரிபு4வன பதித்வம்** | = | மூவுலகங்களுக்கும் பதியாகும் தன்மையோ, |
| **विभुः अपि**<br>**விபு4: அபி** | = | எங்கும் வியாபித்துள்ளபோதிலும், |
| **निदानं**<br>**நிதா3னம்** | = | ஜகத்காரண வஸ்துவாயும், |
| **अस्माकं**<br>**அஸ்மாகம்** | = | எங்களுடைய, |
| **कुलदेवः**<br>**குலதே3வ:** | = | குல தைவமுமான, |
| **सः**<br>**ஸ:** | = | அந்த, |
| **यदुपतिः**<br>**யது3பதி:** | = | யது நாயகனான ஸ்ரீ கிருஷ்ணன், |
| **जयति**<br>**ஜயதி** | = | வெற்றியுடன் விளங்குகிறான். |

எங்கும் நிறைந்துள்ள பரம்பொருளே கண்ணனாகத் தோன்றுகிறான். அவனே திரிபுரனை ஸம்ஹரித்த பரமேச்வரனுக்கும் தாமரையில் அமர்ந்துள்ள பிரம்மதேவனுக்கும் கருணைகாட்டுகிறான். அவனுடைய பாதங்களைக் கழுவும் ஜலமே மிகப் புனிதம் வாய்ந்த கங்கா நதியாக ஓடுகிறது. அவன் தம் பக்தர்களுக்கு த்ரிலோகாதிபத்யத்தையே கொடுத்துவிடுகிறான். அப்பரம்பொருளே உலகத்தைப் படைப்பதற்குக் காரண

வஸ்து. அந்த யாதவகுலத்திலகனுன கண்ணபிரானே எமது குலதெய்வமாக விளங்குகிறுன். **(243)**

**(அவதாரிகை)** கிருஷ்ணனைத் தாயாகவும் தன்னைக் குழந்தையாகவும் உருவகப்படுத்தி முறையிடுகிறுர்: -

**मायाहस्तेऽर्पयित्वा भरणकृतिकृते मोहमूलोद्भवं मां**
**मातः कृष्णाभिधाने चिरसमय मुदासीनभावं गताऽसि ।**
**कारुण्यैकाधिवासे सकृदपि वदनं नेक्षसे त्वं मदीयं**
**तत्सर्वज्ञे न कर्तुं प्रभवति भवती किं नु मूलस्य शान्तिम् ॥ २४४ ॥**

**மாயா ஹஸ்தே(அ)ர்பயித்வா ப⁴ரணக்ருதிக்ருதே மோஹமூலோத்³ப⁴வம் மாம்**
**மாத: க்ருஷ்ணுபி⁴தா⁴னே சிர ஸமய முதா³ஸீனபா⁴வம் க³தா(அ)ஸி ।**
**காருண்யைகாதி⁴வாஸே ஸக்ருத³பி வத³னம் நேக்ஷஸே த்வம் மதீ³யம்**
**தத்ஸர்வஜ்ஞே ந கர்தும் ப்ரப⁴வதி ப⁴வதீ கிம் நு மூலஸ்ய ஶாந்திம் ॥ 244 ॥**

**कृष्णाभिधाने** = கிருஷ்ணன் என்ற பெயருள்ள,
**க்ருஷ்ணுபி⁴தா⁴னே**

**मातः** = ஏ தாயே!
**மாத:**

**मोहमूलोद्भवं** = மோஹம் என்ற காரணத்தால் உண்டாகிய,
**மோஹமூலோத்³ப⁴வம்**

**मां** = என்னை,
**மாம்**

**भरणकृतिकृते** = வளர்ப்பதென்ற கார்யத்தின்பொருட்டு,
**ப⁴ரணக்ருதிக்ருதே**

**मायाहस्ते** = மாயாதேவியின் கையில்,
**மாயா ஹஸ்தே**

**अर्पयित्वा** = கொடுத்துவிட்டு,
**அர்பயித்வா**

**चिरसमयं** = வெகுகாலமாக,
**சிரஸமயம்**

**उदासीनभावं** = கவனிக்காமல் இருக்கும் தன்மையை,
**உதா³ஸீனபா⁴வம்**

**गता असि** = அடைந்திருக்கிறுயே!
**க³தா அஸி**

**कारुण्यैकाधिवासे** = கருணைக்கு ஒரே உறைவிடமானவளே!
**காருண்யைகாதி⁴வாஸே**

| | | |
|---|---|---|
| त्वं<br>த்வம் | = | நீ, |
| मदीयं<br>மதீ³யம் | = | என்னுடைய, |
| वदनं<br>வத³னம் | = | முகத்தை, |
| सकृत् अपि<br>ஸக்ருத் அபி | = | ஒரு தடவைகூட, |
| ने ईक्षसे<br>நே ஈக்ஷஸே | = | பார்க்கிறதில்லையே, |
| तत्<br>தத் | = | ஆகையால், |
| सर्वज्ञे<br>ஸர்வஜ்ஞே | = | அனைத்தையும் அறிந்தவளே, |
| भवती<br>ப⁴வதீ | = | தாங்கள், |
| मूलस्य<br>மூலஸ்ய | = | (பிறவிக்குக்) காரணமாகிய அஞ்ஞானத்தின், |
| शान्तिं<br>ஶாந்திம் | = | சாந்தியை, |
| कर्तुं<br>கர்தும் | = | செய்வதற்கு, |
| न प्रभवति किं नु<br>ந ப்ரப⁴வதி கிம் நு | = | சக்தியற்றவளா என்ன? |

கிருஷ்ணன் என்ற பெயருடைய ஹே தாயே! நான் அஞ்ஞானமென்ற மூல காரணத்தால் பிறந்திருக்கிறேன். அவ்வாறு பிறந்த என்னை வளர்க்க மாயை என்னும் மாற்றுந்தாயிடம் நீர் அர்ப்பணம் செய்துவிட்டீர் வெகுகாலமாயும் நீர் என்னை கவனிக்கவே இல்லை. கருணைக் களஞ்சியமே! எல்லாமறிந்த எம்பெருமானே! நீர் என்னுடைய முகத்தை ஒருதடவை கூடப் பார்க்கவில்லையே நீர் எல்லாமறிந்தவர் எல்லா வல்லமையும் நிறைந்தவர். நானோ அஞ்ஞானம் என்ற காரிருளில் அகப்பட்டுக் கொண்டு அல்லல்படுகின்றேன். என்னுடைய பிறவிக்குக்காரணமாகிய இந்த அஞ்ஞானமென்ற இருளை அகற்றத் தங்களால் இயலாதா? ஆதலால் இந்த அஞ்ஞானமென்ற இருளை நீக்கி என்னை ஆட்கொள்ளும். அஞ்ஞானம் நீங்கப்பெறின் மோக்ஷ நிலை கிட்டும் என்பது கருத்து. **(244)**

**(அவதாரிகை)** பகவானைத் தந்தையாகக் கூப்பிட்டு வேண்டுகிறார்: -

**उदासीनः स्तब्धः सततमगुणः सङ्गरहितो**
**भवांस्तातः कातः परमिह भवेज्जीवनगतिः ।**
**अकस्मादस्माकं यदि न कुरुते स्नेहमथ तत्**
**वसस्व स्वीयान्तर्विमलजठरेऽस्मिन्पुनरपि ॥ २४५ ॥**

**உதா³ஸீனঃ ஸ்தப்³த⁴ঃ ஸததமகு³ணঃ ஸங்க³ரஹிதோ**
**ப⁴வாம்ஸ்தாதঃ காதঃ பரமிஹ ப⁴வேஜ் ஜீவனக³திঃ ।**
**அகஸ்மாத³ஸ்மாகம் யதி³ ந குருதே ஸ்னேஹமத² தத்**
**வஸஸ்வ ஸ்வீயாந்தர் விமலஜட²ரே(அ)ஸ்மின் புனரபி ॥ 245 ॥**

**उदासीनः** = (நான்) ஒதுங்கியிருப்பவன்,
**உதா³ஸீனঃ**
**सततं** = எப்பொழுதும்,
**ஸததம்**
**स्तब्धः** = கர்வமுள்ளவன்,
**ஸ்தப்³த⁴ঃ**
**अगुणः** = குணங்களற்றவன்,
**அகு³ணঃ**
**सङ्गरहितः** = ஸத்ஸங்கமில்லாதவன்,
**ஸங்க³ரஹிதঃ**
**तातः** = தந்தையான,
**தாதঃ**
**भवान्** = தாங்கள்,
**ப⁴வான்**
**अकस्मात्** = காரணமில்லாமலேயே திடீரென்று,
**அகஸ்மாத்**
**अस्माकं** = எங்களுக்கு,
**அஸ்மாகம்**
**स्नेहं** = பிரீதியை,
**ஸ்னேஹம்**
**न कुरुते यदि** = செய்யாமல் போனால்,
**ந குருதே யதி³**
**अतः परं** = இனிமேல்,
**அதঃ பரம்**
**इह** = இங்கு,
**இஹ**

| | | |
|---|---|---|
| **जीवनगतिः** <br> **ஜீவனக³திঃ** | = | வாழ்க்கையில் ஸத்கதி, |
| **का** <br> **கா** | = | என்ன, |
| **भवेत्** <br> **ப⁴வேத்** | = | உண்டாகும்? |
| **तत्** <br> **தத்** | = | ஆகையால், |
| **पुनरपि** <br> **புனரபி** | = | மறுபடியும், |
| **स्वीयान्तर्विमलजठरे** <br> **ஸ்வீயாந்தர் விமலஜட²ரே** | = | தன்னுடைய பரிசுத்தமான வயிற்றுக்குள் இருக்கும், |
| **अस्मिन्** <br> **அஸ்மின்** | = | இந்த என்னிடம், |
| **वसस्व** <br> **வஸஸ்வ** | = | வாஸம் செய்யும். |

கிருஷ்ணா, என்னிடம் பல குற்றங்கள் உள்ளன. நான் செய்யவேண்டிய கடமையைச் செய்யாமல் ஒதுங்கியிருக்கிறேன். விநயமில்லாதவன். நற்குணங்களற்றவன், பெரியோர்களின் ஸங்கமும் இல்லை. இவ்விதமிருந்தாலும் தாங்கள் எனக்குத் தந்தையாயிருப்பதால் தனயனை என்னிடம் பித்ரு வாத்ஸல்யத்தைக் காண்பித்து அருள் செய்தால்தான் நான் கடைத்தேறமுடியும். இல்லாவிட்டால் நான் எவ்வாறு ஸத்கதி அடைய முடியும்? ஆகையால் தங்கள் வயிற்றிற்குள்ளிருக்கும் என் மனதில் வாஸம் செய்து என்னைத் தூய்மையாக்கி அருளவேண்டும். **(245)**

**लोकाधीशे त्वयीशे किमिति भवभवा वेदना स्वाश्रितानां**
**संकोचः पङ्कजानां किमिह समुदिते मण्डले चण्डरश्मेः ।**
**भोगः पूर्वार्जितानां भवति भुवि नृणां कर्मणां चेदवश्यं**
**तन्मे दृष्टैर्नृपुष्टैर्ननु दनुजनृपैरूर्जितं निर्जितं ते ॥ २४६ ॥**

**லோகாதீ⁴ஶே த்வயீஶே கிமிதி ப⁴வப⁴வா வேத³னா ஸ்வாஶ்ரிதானாம்**
**ஸங்கோசঃ பங்கஜானாம் கிமிஹ ஸமுதி³தே மண்ட³லே சண்ட³ரஶ்மேঃ ।**
**போ⁴க³ঃ பூர்வார்ஜிதானாம் ப⁴வதி பு⁴வி ந்ருணாம் கர்மணாம் சேத³வஶ்யம்**
**தன்மே த்³ருஷ்டைர் ந்ருபுஷ்டைர் னனு த³னுஜந்ருபைரூர்ஜிதம் நிர்ஜிதம் தே**
**॥246॥**

| | | |
|---|---|---|
| **ईशे** <br> **ஈஶே** | = | ஈசுவரனான, |

त्वयी = நீங்கள்,
த்வயீ
लोकाधीशे = உலகங்களை ஆட்சிபுரியும்பொழுது,
லோகாதீ⁴ஶே
स्वाश्रितानां = தங்களை அண்டியவர்களுக்கு,
ஸ்வாஶ்ரிதாநாம்
भवभवा = பிறவியால் உண்டாகும்,
ப⁴வப⁴வா
वेदना = துயரம்,
வேத³நா
किमिति = ஏன்?
கிமிதி
चण्डरश्मे: = வெப்பமான கதிர்களுள்ள சூரியனுடைய,
சண்ட³ரஶ்மே:
मण्डले = மண்டலம்,
மண்ட³லே
समुदिते = நன்றாக உதித்தவுடன்,
ஸமுதி³தே
इह = இங்கு,
இஹ
पङ्कजानां = தாமரைகளுக்கு,
பங்கஜாநாம்
संकोच: = மலர்ச்சியின்மை,
ஸங்கோச:
किं = ஏன்?
கிம்
भुवि = உலகில்,
பு⁴வி
नृणां = மனிதர்களுக்கு,
ந்ருணாம்
पूर्वार्जितानां = முன் ஜன்மத்தில் சேமித்துவைக்கப்பட்ட,
பூர்வார்ஜிதாநாம்
कर्मणां = வினைகளின்,
கர்மணாம்
भोग: = அனுபவம்,
போ⁴க³:

| | | |
|---|---|---|
| **अवश्यं**<br>**அவஶ்யம்** | = | கட்டாயம், |
| **भवति चेत्**<br>**ப⁴வதி சேத்** | = | இருக்குமாகில், |
| **मे**<br>**மே** | = | என்னால், |
| **दृष्टै:**<br>**த்³ருஷ்டை:** | = | மனித உருவத்துடன் வளர்ந்த, |
| **नृपुष्टै:**<br>**ந்ருபுஷ்டை:** | = | அஸுரராஜர்களால், |
| **ते**<br>**தே** | = | உம்முடைய, |
| **तत्**<br>**தத்** | = | அந்த நியதி, |
| **ऊर्जितं**<br>**ஊர்ஜிதம்** | = | நிச்சயமாக, |
| **निर्जितं**<br>**நிர்ஜிதம்** | = | ஜயிக்கப்பட்டுவிட்டதே. |

ஈசுவரனை தாங்கள் உலகங்கள் எல்லாவற்றிற்கும் காப்பாளனாக விளங்கும் பொழுது தங்களிடம் சரண்புகுந்தவர்களுக்குப் பிறவித்துன்பம் எங்ஙனம் ஏற்படும்? சூரியன் தன்னுடைய வெப்பமான கிரணங்களைப் பரப்பிக்கொண்டு உதிக்கையில் தாமரை எவ்வாறு மலராமல் இருக்கும்? "மானிடர்கள் தங்களுடைய வினைப்பயனை அனுபவித்தே தீரவேண்டும். அதை நான் போக்க முடியாது" என்று நீங்கள் சொல்ல வும் முடியாது. மனித உருவத்தில் பிறந்த அரசர்களான துஷ்ட அஸுரர்கள் எத்தனை யோ பிறவிகளில் எவ்வளவோ பாபங்கள் செய்தபோதிலும், அவர்கள் எல்லாப் பாபங்களும் விலகி உம்முடைய ஸாயுஜ்யத்தை அடைந்திருக்கின்றனரே. தான் செய்த வினைகளை அனுபவிக்கத்தான் வேண்டும் என்ற நியதியை அவர்கள் மீறிவிட் டனரே. ஆகையால் தங்களை அண்டியவர்களுக்குப் பிறவித்துன்பம் இருப்பது நியாயமே இல்லை. **(246)**

**(அவதாரிகை)** தன் மனதை சாதகபக்ஷியாகக் கருதி அதற்கு உபதேசம் கூறுகிறார்: -

**नित्यानन्दसुधानिधेरधिगत: सन्नीलमेघ: सता-**
**मौत्कण्ठ्यप्रबलप्रभञ्जनभरैराकर्षितो वर्षति ।**
**विज्ञानामृतमद्भुतं निजव चोधाराभिरारादिदं**
**चेतश्चातक चेन्न वाञ्छसि तृषाकान्तोऽपि सुप्तोऽसि किम् ॥ २४७ ॥**

**நித்யானந்த3 ஸுதா4நிதே4ரதி4க3த: ஸந்நீலமேக4: ஸதா-**
**மௌத்கண்ட்2ய ப்ரப3ல ப்ரப4ஞ்ஜன ப4ரைராகர்ஷிதோ வர்ஷதி ।**
**விஜ்ஞாஞம்ருதமத்3பு4தம் நிஜவசோ தா4ராபி4ராராதி3த3ம்**
**சேதஶ்சாதக சேத் ன வாஞ்ச2ஸி த்ருஷாகாந்தோ(அ)பி ஸுப்தோ(அ)ஸி கிம் ॥247॥**

**चेतश्चातक** = மனமாகிய சாதகப்பட்சியே!
**சேதஶ்சாதக**

**नित्यानन्दसुधानिधेः** = நித்யாநந்தமாகிய அமிருதக்கடலிலிருந்து,
**நித்யானந்த3 ஸுதா4நிதே4:**

**अधिगतः** = கிளம்பிய,
**அதி4க3த:**

**सन्नीलमेघः** = ஸத்ரூபமான நீலமேகம்,
**ஸந்நீலமேக4:**

**सतां** = நல்லவர்களுடைய,
**ஸதாம்**

**औत्कण्ठ्य** = பேராவலாகிய,
**ஔத்கண்ட்2ய**

**प्रबल** = மிகுந்த பலமுள்ள,
**ப்ரப3ல**

**प्रभञ्जनभरैः** = காற்றுக் கூட்டங்களால்,
**ப்ரப4ஞ்ஜன ப4ரை:**

**आकर्षितः** = இழுக்கப்பட்டு,
**ஆகர்ஷித:**

**आरात्** = எங்கும்,
**ஆராத்**

**निजव चोधाराभिः** = தன்னுடைய சொற்பொழிவாகிய தாரைகளால்,
**நிஜவசோ தா4ராபி4:**

**इदं** = இந்த,
**இத3ம்**

**अद् मृतं** = ஆச்சர்யமான,
**அத்3 ம்ருதம்**

**विज्ञानामृतं** = ஆத்மஞானமாகிய அமுதத்தை,
**விஜ்ஞாஞம்ருதம்**

**वर्षति** = பொழிகின்றது,
**வர்ஷதி**

**तृषाकान्तोऽपि** = தாகத்தால் பீடிக்கப்பட்டும்கூட,
**த்ருஷாகாந்தோ(அ)பி**

**न वाञ्छसि चेत्** = நீ விரும்பாவிடில்,

**ந வாஞ்ச²ஸி சேத்**

**सुप्तः असि किम्** = தூங்குகிறுயா என்ன?

**ஸுப்தः அஸி கிம்**

அழிவற்ற ஆனந்தம் என்னும் அமிருதஸாகரத்திலிருந்து கிளம்பிய ஸத்ரூப மான கிருஷ்ணன் என்ற நீலமேகம் ஸாதுக்களின் பக்தியாகிய காற்றிஞல் இழுக்கப் பட்டு தன் உபதேசம் என்னும் தாரைகளால் விக்ஞானம் என்ற ஆச்சர்யமான அமிருதத்தை எங்கும் வர்ஷிக்கிறது. ஹே மனமாகிய சாதகமே! நீ தாஹத்துடன் கூடியிருந்தும் அதைப் பருகாமல் இருக்கிறுயே. நீ தூங்குகிறுயா என்ன? அமிருத ஸமுத்திரத்திலிருந்து ஓர் நீருண்ட மேகம் கிளம்பி காற்றிஞல் இழுக்கப்பட்டு அமிருதத்தையே தாரை தாரையாகப் பொழியுமாஞல் மேகத்திலிருந்து வரும் நீரையே பருகும் ஸ்வபாவமுள்ள சாதகபக்ஷி தாகத்தால் துன்பப்பட்டுக்கொண்டு தூங்கிக்கொண்டிருக்குமா? அதுபோல பக்தர்களால் வேண்டப்பட்டு நித்யானந்தமே, நெய் கெட்டியாவதுபோல் கிருஷ்ண உருவத்துடன் வந்து கீதோபதேசம் முதலிய வைமூலம் ஆத்மஞானத்தைத் தரும்பொழுது தாபத்ரயங்களால் துன்புறும் மனம் அதைப் பெற முயற்சிக்க வேண்டும். **(247)**

**चेतश्चञ्चलतां विहाय पुरतः संधाय कोटिद्वयं**
**तत्रैकत्र निधेहि सर्वविषयानन्यत्र च श्रीपतिम् ।**
**विश्रान्तिर्हितमप्यहो क्व नु त्वयोर्मध्ये तदालोच्यतां**
**युक्त्या वानुभवेन यत्र परमानन्दश्च तत्सेव्यताम् ॥ २४८ ॥**

**சேதஶ்சஞ்சலதாம் விஹாய புரதः ஸந்தா⁴ய கோடி த்³வயம்**
**தத்ரைகத்ர நிதே⁴ஹி ஸர்வ விஷயானன்யத்ர ச ஸ்ரீபதிம் ।**
**விஶ்ராந்திர் ஹிதமப்யஹோ க்வ நு த்வயோர் மத்⁴யே ததா³லோச்யதாம்**
**யுக்த்யா வானுப⁴வேன யத்ர பரமானந்த³ஶ்ச தத்ஸேவ்யதாம் ॥ 248 ॥**

**चेत:** = ஏ மனமே,

**சேத:**

**चञ्चलतां** = நிஜலயற்ற தன்மையை,

**சஞ்சலதாம்**

**विहाय** = விட்டுவிட்டு,

**விஹாய**

**पुरत:** = முன்ஞல்,

**புரதः**

**कोटिद्वयं** = இரு கோடிகஜள,

**கோடி த்³வயம்**

| | | |
|---|---|---|
| **संधाय**<br>**ஸந்தா⁴ய** | = | சேர்த்து, |
| **तत्र**<br>**தத்ர** | = | அதில், |
| **एकत्र**<br>**ஏகத்ர** | = | ஒருமுஊனயில், |
| **सर्वविषयान्**<br>**ஸர்வவிஷயான்** | = | எல்லாப்பொருள்கஊயும், |
| **अन्यत्र**<br>**அன்யத்ர** | = | மற்ஞெரு முஊனயில், |
| **श्रीपतिं च**<br>**ஸ்ரீபதிம் ச** | = | லக்ஷ்மீபதியான பரம்பொருஊயும், |
| **निधेहि**<br>**நிதே⁴ஹி** | = | வைப்பாயாக, |
| **तयो:**<br>**தயோ:** | = | அவ்விரண்டுகளின், |
| **मध्ये**<br>**மத்⁴யே** | = | நடுவில், |
| **विश्रान्ति:**<br>**விஶ்ராந்தி:** | = | ஓய்வும், |
| **हितं अपि**<br>**ஹிதம் அபி** | = | நன்மையும், |
| **क्व नु**<br>**க்வ நு** | = | எங்கு உள்ளது, |
| **तत्**<br>**தத்** | = | அது, |
| **आलोच्यतां**<br>**ஆலோச்யதாம்** | = | நன்கு பரிசீலிக்கப்படட்டும், |
| **युक्त्या**<br>**யுக்த்யா** | = | யுக்தியிஞலோ, |
| **अनुभवेन वा**<br>**அனுப⁴வேன வா** | = | அல்லது அனுபவத்திஞலோ, |
| **यत्र**<br>**யத்ர** | = | எங்கு, |
| **परमानन्द:**<br>**பரமானந்த³:** | = | மிகுந்த ஆனந்தமுண்டாகிறதோ, |

तत् = அது,

தத்

सेव्यताम् = ஸேவிக்கப்படட்டும்.

ஸேவ்யதாம்

மனமே! விஷயங்களை நோக்கி ஓடும் ஸ்வபாவத்தை விட்டுவிட்டு முன்னால் தராஸின் இரண்டு முனைகளிலும் இரண்டு தட்டுகளைக் கல்பனம் செய்துகொண்டு அவற்றுள் ஒன்றில் உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களையும், மற்றொன்றில் லக்ஷ்மீபதியான பரம்பொருளையும் வைத்து எடைபோட்டுப்பார். அவற்றுள் எதனால் அமைதியும் நித்யானந்தமும் கிடைக்கிறது என்று யோசனை செய்வாயாக. எதனால் உனக்கு நன்மை ஏற்படுகிறது என்று தகுந்த சான்றுகளாலும் அனுபவத்தாலும் அறிந்து கொண்டு அதனைப் பின்பற்றுவாயாக. **(248)**

**पुत्रान्पौत्रमथस्त्रियोऽन्ययुवतीर्वित्तन्यथोऽन्यद्धनं**
**भोज्यादिष्वपि तारतम्यवशतो नालं समुत्कण्ठया ।**
**नैतादृग्यदुनायके समुदिते चेतस्यनन्ते विभौ**
**सान्द्रानन्दसुधार्णवे विहरति स्वैरं यतो निर्भयम् ॥ २४९ ॥**

**புத்ரான் பௌத்ரமத² ஸ்த்ரியோ(அ)ன்ய யுவதீர் வித்தன்யதோ²(அ)ன்யத்³ த⁴னம்**
**போ⁴ஜ்யா தி³ஷ்வபி தாரதம்ய வஶதோ நாலம் ஸமுத்கண்ட²யா ।**
**நைதா த்³ருக்³ யது³ நாயகே ஸமுதி³தே சேதஸ்யனந்தே விபௌ⁴**
**ஸாந்த்³ரானந்த³ ஸுதா⁴ர்ணவே விஹரதி ஸ்வைரம் யதோ நிர்ப⁴யம் ॥ 249 ॥**

पुत्रान् = பிள்ளைகளையும்,

புத்ரான்

पौत्रं = பேரனையும்,

பௌத்ரம்

अथ = பிறகு,

அத²

स्त्रिय: = தன் ஸ்திரீகளையும்,

ஸ்த்ரிய:

अन्ययुवती: = பிற ஸ்திரீகளையும்,

அன்யயுவதீ:

वित्तानि = தன் செல்வங்களையும்,

வித்தானி

अथो = பிறகு,

அதோ²

| | | |
|---|---|---|
| अन्यत् धनं<br>அன்யத் த⁴னம் | = | மற்ற பணத்தையும், |
| भोज्यादिषु अपि<br>போ⁴ஜ்யாதி³ஷு அபி | = | சாப்பிடும் பொருள்களிலும், |
| तारतम्यवशतः<br>தாரதம்யவஶத꞉ | = | ஏற்றத்தாழ்வு இருப்பதால், |
| समुत्कण्ठया<br>ஸமுத்கண்ட²யா | = | ஆசை வைப்பதால், |
| न अलम्<br>ந அலம் | = | அவை போதுமானவையல்ல, |
| अनन्तें<br>அனந்தேம் | = | முடிவற்றவனும், |
| सान्द्रानन्दसुधार्णवे<br>ஸாந்த்³ரானந்த³ ஸுதா⁴ர்ணவே | = | பேரானந்தக் கடலாயும், |
| विभौ<br>விபௌ⁴ | = | எங்கும் நிறைந்துள்ளவனும் உள்ள, |
| यदुनायके<br>யது³நாயகே | = | கிருஷ்ணன், |
| चेतसि<br>சேதஸி | = | மனதில், |
| समुदिते<br>ஸமுதி³தே | = | தோன்றி, |
| स्वैरं<br>ஸ்வைரம் | = | தன்னிஷ்டம்போல், |
| विहरति<br>விஹரதி | = | விளையாடும்பொழுது, |
| नैतादृक्<br>நைதாத்³ருக் | = | இம்மாதிரி நிலைமை ஏற்படுவதில்லை, |
| यतः<br>யத꞉ | = | ஏனெனில் (அப்பொழுது), |
| निर्भयम्<br>நிர்ப⁴யம் | = | பயமில்லாமல் இருக்கிறான். |

மக்கள், பேரன்மார்கள், பெண்கள், செல்வங்கள், மற்றுமுள்ள உணவுப் பொருள்கள் முதலியவற்றில் பற்றுதல் கொள்ளவேண்டாம், இவைகளெல்லாம் எல்லோரிடத்திலும் ஸமமாக இருப்பதில்லை. ஏற்றத் தாழ்வு உள்ளவை. ஆகவே எவ்வளவு கிடைத்தாலும் மேலும் ஆசையை வளர்க்குமே தவிர அவைகளால் ஒருபொழுதும் திருப்தி உண்டாகாது. எங்கும் நிறைந்தவரும், முடிவற்றவரும், பேரானந்தக்கடலும்

யதுநாயகனுமான பரம்பொருள் உள்ளத்தில் தோன்றி தன்னிஷ்டப்படி விஹாரம் செய்வானேயானுல், அவன் ஆசை அடங்கி திருப்தனுக ஆய்விடுவான். பயமே அவனுக்கு ஏற்படாது. **(249)**

**काम्योपासनयार्थयन्त्यनुदिनं किंचित्फलं स्वेप्सितं**
**किंचित्स्वर्गमथापवर्गमपरैर्योगादियज्ञादिभिः ।**
**अस्माकं यदुनन्दनाङ्घ्रियुगलध्यानावधानार्थिनां**
**किं लोकेन दमेन किं नृपतिना स्वर्गापवर्गैश्च किम् ॥ २५० ॥**

**காம்யோபாஸனயார்த²யந்த்யனுதி³னம் கிஞ்சித் ப²லம் ஸ்வேப்ஸிதம்**
**கிஞ்சித்ஸ்வர்க³மதா²பவர்க³மபரைர் யோகா³தி³ யஜ்ஞாதி³பி⁴: ।**
**அஸ்மாகம் யது³நந்த³ஞங்க்⁴ரி யுக³ல த்⁴யானாவதா⁴ஞர்தி²ஞம்**
**கிம் லோகேன த³மேன கிம் ந்ருபதிஞ ஸ்வர்கா³பவர்கை³ஶ்ச கிம் ॥ 250 ॥**

**काम्योपासनया** = பயஊ விரும்பிச்செய்யும் உபாஸஊயால்,
**காம்யோபாஸனயா**
**स्वेप्सितं** = தங்களுக்குப் பிரியமான,
**ஸ்வேப்ஸிதம்**
**किंचित् फलं** = சிறிய பயஊ,
**கிஞ்சித் ப²லம்**
**अनुदिनं** = ஓவ்வொரு நாளும்,
**அனுதி³னம்**
**अर्थयन्ति** = வேண்டுகின்றனர்,
**அர்த²யந்தி**
**अपरैः** = மற்ற,
**அபரைः**
**योगादियज्ञादिभिः** = யோகம் முதலியவற்றுலும்,
**யோகா³தி³யஜ்ஞாதி³பி⁴:** யக்ஞம் முதலியவற்றுலும்,
**किंचित्** = அல்பமான,
**கிஞ்சித்**
**स्वर्गं** = ஸ்வர்கத்தையோ,
**ஸ்வர்க³ம்**
**अथ** = அல்லது,
**அத²**
**अपवर्गं** = முக்தியையோ,
**அபவர்க³ம்**
**अर्थयन्ति** = விரும்புகின்றனர்,
**அர்த²யந்தி**

| | | |
|---|---|---|
| यदुनन्दन<br>யது³நந்த³ன | = | யதுகுமாரனாகிய கண்ணபிரானுடைய, |
| अङ्घ्रियुगल<br>அங்க்⁴ரியுக³ல | = | இரண்டு பாதங்களையும், |
| ध्यान<br>த்⁴யான | = | தியானம் செய்தல் என்ற, |
| अवधानार्थिनां<br>அவதா⁴னார்தி²னாம் | = | ஈடுபாட்டை விரும்புகின்ற, |
| अस्माकं<br>அஸ்மாகம் | = | எங்களுக்கு, |
| लोकेन किं<br>லோகேன கிம் | = | லோகத்தால் என்ன பயன்? |
| दमेन किं<br>த³மேன கிம் | = | அடக்கத்தால் யாது பயன்? |
| नृपतिना<br>ந்ருபதினா | = | அரசனாலும், |
| स्वर्गापवर्गैश्च<br>ஸ்வர்கா³பவர்கை³ஶ்ச | = | ஸ்வர்க்கம், மோக்ஷம் இவைகளாலும், |
| किम्<br>கிம் | = | என்ன பயன்? |

சிலர் பயன்களை விரும்பி அதற்குரிய உபாஸனைகளைச் செய்து அந்த அல்பப் பயனை ஆர்வத்துடன் அனுபவிக்கின்றனர். வேறு சிலர் யோகம், யாகம் முதலிய வற்றைச் செய்து ஸ்வர்க்கம், முக்தி முதலிய சுகத்தை விரும்புகின்றனர். ஆனால் யாதவகுல திலகனாகிய ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதபத்மங்களையே தியானம் செய்வதென்ற வ்ரதம் பூண்ட யாம் மற்ற உலகங்கள், அதற்குரிய புலனடக்கம், இம்மையில் அரசனைப்பேணுதல், மறுமையில் ஸ்வர்க்கம், மோக்ஷம் முதலியவற் றுள் ஒன்றையும் விரும்புகிறோமில்லை. **(250)**

**आश्रितमात्रं पुरुषं स्वाभिमुखं कर्षति श्रीशः ।**
**लोहमपि चुम्बकाश्मा संमुखमात्रं जडं यद्वत् ॥ २५१ ॥**

**ஆஶ்ரிதமாத்ரம் புருஷம் ஸ்வாபி⁴முக²ம் கர்ஷதி ஶ்ரீஶ꞉ ।**
**லோஹமபி சும்ப³காஶ்மா ஸம்முக²மாத்ரம் ஜட³ம் யத்³வத் ॥ 251 ॥**

| | | |
|---|---|---|
| चुम्बकाश्मा<br>சும்ப³காஶ்மா | = | காந்தக்கல், |
| संमुखमात्रं<br>ஸம்முக²மாத்ரம் | = | தனக்கு நேராக மட்டும் இருக்கின்ற, |

**लोहं** = இரும்பை,

**லோஹம்**

**जडमपि** = செயலற்றதாயிருந்தாலும்,

**ஜட³மபி**

**यद्वत्** = எவ்வாறு,

**யத்³வத்**

**कर्षति** = இழுக்கிறதோ,

**கர்ஷதி**

**तद्वत्** = அதுபோல்,

**தத்³வத்**

**श्रीशः** = லக்ஷ்மீபதியும்,

**ஶ்ரீஶ:**

**आश्रितमात्रं पुरुषं** = தன்னை வந்து அடைந்த மனிதனை மட்டும்,

**ஆஶ்ரிதமாத்ரம் புருஷம்**

**स्वाभिमुखं** = தனக்கு நேராக,

**ஸ்வாபி⁴முக²ம்**

**कर्षति** = இழுத்துக்கொள்கிறார்.

**கர்ஷதி**

காந்தம் எதிரிலிருக்கும் இரும்பை மட்டும், அது ஜடமாயிருந்தாலும் தன்னிடத்தில் இழுத்துக்கொள்கிறது. அது போல லக்ஷ்மீ நாயகரான ஸ்ரீமஹாவிஷ்ணுவும் தன்னை அண்டியவரை மட்டும் தனக்கு நேராக இழுத்துக்கொள்கிறார். **(251)**

**अयमुत्तमोऽयमधमो जात्या रूपेण संपदा वयसा।**
**श्लाघ्योऽश्लाघ्यो वेत्थं न वेत्ति भगवाननुग्रहावसरे॥ २५२॥**

**அயமுத்தமோ(அ)யமத⁴மோ ஜாத்யா ரூபேண ஸம்பதா³ வயஸா ।**
**ஶ்லாக்⁴யோ(அ)ஶ்லாக்⁴யோ வேத்த²ம் ந வேத்தி ப⁴க³வானனுக்³ரஹாவஸரே**
**॥ 252 ॥**

**भगवान्** = பகவான்,

**ப⁴க³வான்**

**अनुग्रहावसरे** = அருள்புரியும் ஸமயத்தில்,

**அனுக்³ரஹாவஸரே**

**अयं** = இவன்,

**அயம்**

**जात्या** = பிறப்பினாலும்,

**ஜாத்யா**

**रूपेण** = தோற்றத்திலும்,

**ரூபேண**

**संपदा** = செல்வத்திலும்,

**ஸம்பதா³**

**वयसा** = வயதிலும்,

**வயஸா**

**उत्तमः** = சிறந்தவன்,

**உத்தம:**

**अयं** = இவன்,

**அயம்**

**अधमः** = தாழ்ந்தவன்,

**அத⁴ம:**

**अयं** = இவன்,

**அயம்**

**श्लाघ्यः** = புகழத்தக்கவன்,

**ஶ்லாக்⁴ய:**

**अयं अश्लाघ्यः** = இவன் புகழத்தகாதவன்,

**அயம் அஶ்லாக்⁴ய:**

**इत्थं** = இவ்வாறு,

**இத்த²ம்**

**न वेत्ति** = அறிகிறதில்லை.

**ந வேத்தி**

அந்த பகவான் அருள்புரியும்பொழுது ஒருவன் பிறப்பினாலும், அழகினாலும், செல்வத்தாலும், வயதாலும் உயர்ந்தவன்; மற்றொருவன் இவைகளால் தாழ்ந்தவன், ஒருவன் புகழத்தக்கவன், மற்றவன் புகழத்தகாதவன் என்று வேற்றுமை காட்டுவதில்லை. இவைகளை நினைப்பதே இல்லை. அவர் எல்லோருக்கும் ஸமமாகவே அருள் புரிகின்றார். **(252)**

## अन्तःस्थभावभोक्ता ततोऽन्तरात्मा महामेघः ।
## खदिरश्चम्पक इति वा प्रवर्षणे किं विचारयति ॥ २५३ ॥

**அந்த:ஸ்த² பா⁴வ போ⁴க்தா ததோ(அ)ந்தராத்மா மஹாமேக⁴: ।**
**க²தி³ரஶ்சம்பக இதி வா ப்ரவர்ஷணே கிம் விசாரயதி ॥ 253 ॥**

**ततः** = ஆகையால்,

**தத:**

| | | |
|---|---|---|
| **अन्तरात्मा** | = | எல்லோருடைய மனதிற்குள்ளும் |
| **அந்தராத்மா** | | உரையும் அந்த பரமாத்மா, |
| **अन्त:स्थभावभोक्ता** | = | மனதிலுள்ள எண்ணத்தையறிந்து பலன் தருபவர், |
| **அந்த:ஸ்த² பா⁴வ போ⁴க்தா** | | |
| **महामेघ:** | = | பெரிய மேகம், |
| **மஹாமேக⁴:** | | |
| **प्रवर्षणे** | = | மழை பொழியும்பொழுது, |
| **ப்ரவர்ஷணே** | | |
| **खदिर:** | = | கருங்காலி, |
| **க²தி³ர:** | | |
| **इति** | = | என்றே, |
| **இதி** | | |
| **चम्पके वा** | = | சம்பகம் என்றே, |
| **சம்பகே வா** | | |
| **किं विचारयति** | = | யோசிக்கிறதா? |
| **கிம் விசாரயதி** | | |

நீருண்ட காளமேகம் தன்னுடைய நீரை தாரை தாரையாக வர்ஷிக்கின்றது. அப்பொழுது கருங்காலி போன்ற மரங்களும் சம்பகம் போன்ற நறுமணமுள்ள மலர் களைத் தரும் செடி கொடிகளும் அந்த நீரைப் பெறுகின்றன. ஆனால் மேகம், இது கருங்காலி என்றோ, இது சம்பகம் என்றே யோசிப்பதில்லை அதுபோல் நீலமேகம்யாமள ரூபனும் எல்லோருடைய உள்ளத்திலும் வசிக்கின்றவனும் உள்ள பரமாத்மா எல்லோருடைய மனதிலும் உள்ள எண்ணங்களை நன்கு தெரிந்துகொண்டு அதை அனுஸரித்து தன்னுடைய அருளாகிய மழையை வர்ஷிக் கின்றார். வெளித்தோற்றங்களை அவர் கவனிப்பதில்லை. **(253)**

**यद्यपि सर्वत्र समस्तथापि नृहरिस्तथाप्येते ।**
**भक्ता: परमानन्दे रमन्ति सदयावलोकेन ॥ २५४ ॥**

**யத்³யபி ஸர்வத்ர ஸமஸ்ததா²பி ந்ருஹரிஸ் ததா²ப்யேதே ।**
**ப⁴க்தா: பரமானந்தே³ ரமந்தி ஸத³யாவலோகேன ॥ 254 ॥**

| | | |
|---|---|---|
| **नृहरि:** | = | நரஸிம்மரூபியான பகவான், |
| **ந்ருஹரி:** | | |
| **सर्वत्र** | = | எல்லா இடங்களிலும், |
| **ஸர்வத்ர** | | |
| **यद्यपि सम:** | = | ஸமமாக இருப்பினும், |
| **யத்³யபி ஸம:** | | |

**तथापि** = அப்படியிருந்தாலும்,

**ததா2பி**

**एते भक्ता:** = இந்த பக்தர்கள்,

**ஏதே ப4க்தா:**

**सदयावलोकेन** = தயவுடன்கூடிய கடாக்ஷத்தால்,

**ஸத3யாவலோகேன**

**परमानन्दे** = பேரானந்தத்தில்,

**பரமானந்தே3**

**रमन्ति** = ஸந்தோஷமடைகின்றனர்.

**ரமந்தி**

பகவான் எங்கும் வியாபித்துள்ளவர். அவர் ஒரே மாதிரியாகத்தான் எங்கும் விளங்குகிறுர். அவ்வாறு இருப்பினும் அவருடைய கடைக்கண் பார்வைகளால் பக்தர்கள் பேரானந்தத்தில் மூழ்கிக் களிக்கின்றனர். **(254)**

**सुतरामनन्यशरणा: क्षीराद्याहारमन्तरा यद्वत् ।**
**केवलया स्नेहदृशा कच्छपतनया: प्रजीवन्ति ॥ २५५ ॥**

**ஸுதராமனன்ய ஶரணா: க்ஷீராத்3யாஹாரமந்தரா யத்3வத் ।**
**கேவலயா ஸ்னேஹ த்3ருஶா கச்ச2பதனயா: ப்ரஜீவந்தி ॥ 255 ॥**

**सुतरां** = மிகவும்,

**ஸுதராம்**

**अनन्यशरणा:** = வேறு காப்பாளரற்ற,

**அனன்யஶரணா:**

**कच्छपतनया:** = ஆமைக் குஞ்சுகள்,

**கச்ச2பதனயா:**

**क्षीराद्याहारमन्तरा** = பால் முதலிய உணவு இல்லாமல்,

**க்ஷீராத்3யாஹாரமந்தரா**

**केवलया स्नेहदृशा** = அன்பு நிரம்பிய பார்வை ஒன்றினுலேயே,

**கேவலயா ஸ்னேஹ**

**यद्वत्** = எவ்வாறு,

**யத்3வத்**

**प्रजीवन्ति** = வாழ்கின்றனவோ.

**ப்ரஜீவந்தி**

காப்பவர் வேறு ஒருவரும் இல்லாவிட்டாலும் ஆமைக் குஞ்சுகள் பால் முதலிய உணவு இல்லாமல் தன் தாயின் அன்பு நிறைந்த பார்வையாலேயே வளர்கின்றன. அது போல வேறு ஒருவரையும் அண்டாத பக்தர்கள் பொருள்

ஒன்றும் இல்லாவிட்டாலும் பகவானின் கடாக்ஷத்தாலேயே பரமானந்தமடைகின்றனர். (255)

## यद्यपि गगनं शून्यं तथापि जलदामृतांश्रूपेण ।
## चातकचकोरनाम्नोर्दृढभावात्पूरयत्याशाम् ॥ २५६ ॥

**யத்3யபி க3க3னம் ஶூன்யம் ததா2பி ஜலதா3ம்ருதாம்ஶ்ரூபேண ।**
**சாதக சகோர நாம்னோர் த்3ருட4 பா4வாத் பூரயத்யாஶாம் ॥ 256 ॥**

**गगनं** = ஆகாசம்,
**க3க3னம்**

**शून्यं यद्यपि** = சூன்யமாயினும்,
**ஶூன்யம் யத்3யபி**

**तथापि** = அவ்வாறு இருப்பினும்,
**ததா2பி**

**चातकचकोरनाम्नोः** = சாதகம், சகோரம் என்ற பக்ஷிகளுடைய,
**சாதக சகோர நாம்னோ:**

**द्रुढभावात्** = உறுதியான எண்ணத்தால்,
**த்3ருட4பா4வாத்**

**जलदामृतांश्रूपेण** = மேகம், சந்திரன் இவை மூலமாக,
**ஜலதா3ம்ருதாம்ஶ்ரூபேண**

**आशां** = ஆசையை,
**ஆஶாம்**

**पूरयति** = நிறைவேற்றுகிறது.
**பூரயதி**

ஆகாசத்தில் ஒன்றுமே இல்லை. அது சூன்யம். ஆனாலும் அங்கு மேகம் கிளம்பி மழை பொழிகிறது. மழை நீரைத்தவிற வேறுநீரைப் பருகுவதில்லை என்ற உறுதி கொண்ட சாதகபக்ஷி மழைநீரைப் பருகி இன்புறுகிறது. அப்படியே ஆகாசத்தில் சந்திரன் கிளம்பி நிலவைப் பொழிகிறது. நிலவையே எதிர்பார்த்து உறுதியுடன் நிற்கும் சகோரபக்ஷி அதைப் பருகி ஆனந்தம் அடைகிறது. (256)

## तद्वद्व्रजतां पुंसां दृग्वाङ्मनसामगोचरोऽपि हरिः ।
## कृपया फलत्यकस्मात्सत्यानन्दामृतेन विपुलेन ॥ २५७ ॥

**தத்3வத்3 ப3ஜதாம் பும்ஸாம் த்3ருக்3 வாங் மனஸாமகோ3சரோ(அ)பி ஹரி: ।**
**க்ருபயா ப2லத்யகஸ்மாத் ஸத்யானந்தா3ம்ருதேன விபுலேன ॥ 257 ॥**

**तद्वत्** = அதுபோலவே,
**தத்3வத்**

| | | |
|---|---|---|
| **दृग्वाङ्गनसां**<br>**த்³ருக்³வாங்மனஸாம்** | = | கண்களுக்கும், வாக்கிற்கும், மனதிற்கும், |
| **अगोचरः अपि**<br>**அகோ³சர: அபி** | = | புலனுகாமலிருந்தாலும், |
| **हरिः**<br>**ஹரி:** | = | விஷ்ணு, |
| **अकस्मात्**<br>**அகஸ்மாத்** | = | எதிர்பாராமலேயே, |
| **व्रजतां**<br>**வ்ரஜதாம்** | = | சரணடைந்த, |
| **पुंसां**<br>**பும்ஸாம்** | = | மனிதர்களுக்கு, |
| **कृपया**<br>**க்ருபயா** | = | கிருபையால், |
| **विपुलेन**<br>**விபுலேன** | = | மிகுந்த, |
| **सत्यानन्दामृतेन**<br>**ஸத்யானந்தா³ம்ருதேன** | = | ஸதானந்தமாகிய அமுதத்தால், |
| **फलति**<br>**ப²லதி** | = | பயனளிக்கிறுர். |

அதுபோலவே கண்களுக்கும், வாக்கிற்கும் மனதிற்கும் புலனுகாமலிருந்தாலும் பகவான் தன்ஊனச் சரணமடைந்தவர்களுக்கு அவர்கள் எதிர்பார்க்காமலேயே தன்னுடைய கருணு கடாக்ஷத்தால் ஆனந்தாமிருதத்தை அள்ளியளிக்கிறுர்.

**ப்ரபோ³த⁴ஸுதா⁴கரம் முற்றிற்று.**